# ANUBHAVA VAIDDIYA MURAI

## Vol. IV

CRITICALLY EDITED WITH INTRODUCTION

BY

DR. C. N. KUPPUSWAMI, H. P. I. M.

*Professor of Siddha Vaiddiyam, Indigenous Medicine, Madras.*

GOVERNMENT ORIENTAL MANUSCRIPTS LIBRARY, MADRAS

1952

Price Rs. 2-14-0

# INTRODUCTION

The Government of Madras took up for consideration the question of publication of the various manuscripts in diffierent languages on subjects like Philosophy, Medicine, Science, etc., early in May, 1948. Important Manuscripts Libraries in the Madras Presidency were requested to send a list of unpublished manuscripts with them for favour of being considered by the Government for publication. The Honorary Secretary of the Tanjore Maharaja Serfoji's Sarasvathi Mahal Library, Tanjore, alone complied with this request. This list as well as a similar list of unpublished manuscripts in the Government Oriental Manuscripts Library, Madras, were carefully examined and a tentative selection of manuscripts suitable for publication was made. The Government in their Memorandum No. 34913/48-10, Education, dated 4-4-1949, constituted an Expert Committee with the Curator of the Government Oriental Manuscripts Library, Madras, as the Secretary, for the final selection of manuscripts suitable for printing and for estimating the cost of publication.

The following are the members of the Committee :—

1. Sri T. M. Naraynaswamy Pillai, M.A., B.L.
2. ,, R. P. Sethu Pillai, B.A., B.L.
3. ,, C. M. Ramachandra Chettiar, B.A., B.L.
4. ,, R Krishnamoorthy, (Kalki).
5. Dr. N. Venkataramanayya, M.A., Ph. D.
6. Sri M. Ramanuja Rao Naidu, M.A.
7. ,, V. Prabhakara Sastri.
8. ,, N. Venkata Rao, M.A.
9. ,, H. Sesha Ayyangar.
10. ,, Masti Venkatesa Ayyangar.
11. ,, M. Mariappa Bhat, M.A., L.T.
12. Dr. C. Achyuta Menon, B.A., Ph. D.

13. Dr. C Kunhan Raja, M.A., D. Phil.
14. ,, A. Sankaran, M.A., Ph.D., L.T.
15. Sri Polakam Rama Sastri.
16. ,, S. K. Ramanatha Sastri.
17. Dr. M. Abdul Haq, M.A., D.Phil., (Oxon.)
18. Afzul-ul-Ulama Hakim Khader Ahamed.
19. Sri P. D. Joshi.
20. ,, S. Gopalan, B.A., B.L.
21. ,, T. Chandrasekharan, M.A., L.T.

With the exception of Sri Masti Venkatesa Ayyangar, and Dr. C. Kunhan Raja, the above members continued to be members of the Expert Committee for 1950—'51 also to which the following gentlemen were added in Govt. Memo. 7297-E/50-3, Edn., dated 19—5—'50 and Govt. Memo. No. 15875-E/50-4, Edn., dated 7—9—'50.

1. Dr. A. Chidambaranatha Chettiar, M.A., Ph. D.,
2. Sri S. Govindarajulu, B.A., B.L., LL.B., Bar-at-law.
3. Capt. G. Srinivasamoorthy, B.A., B L., M.B., & C.M.
4. Dr. Muhammad Hussain Nainar, M.A., Ph. D.
5. Sri T.V. Subba Rao, B.A., B.L.,
6. Principal, College of Indigenous Medicine, Madras.

The members of the Committee formed into Sub-Committees for the various languages, Sanskrit, Tamil, Telugu, Kannada, Malayalam, Mahrathi and Islamic Languages. They met during the month of May, 1949, at Madras and at Tanjore to examine the manuscripts and make a selection. The recommendations of the Committee were accepted by the Government and they decided to call these publications as the "MADRAS GOVERNMENT ORIENTAL SERIES," and apppointed the Curator, Government Oriental Manuscripts Library, Madras, as the General Editor of the publications under this series.

The following manuscripts were taken up for publication during 1949-'50.

## "A" FROM THE GOVERNMENT ORIENTAL MANUSCRIPTS LIBRARY, MADRAS

### TAMIL

1. Kappal Sāttiram
2. Aṉubhava Vaiddiya Muṟai
3. Āttānakōlāhalam
4. Upadēśa Kāṇḍam
5. Cōḻaṉ Pūrva Paṭṭayam
6. Śivajñāṉa Dīpam

### TELUGU

1. Auṣadha Yōgamulu
2. Vaidya Nighaṇṭuvu
3. Dhanurvidyā Vilāsamu
4. Yōga Darśana Viṣayamu
5. Khaḍga Lakṣaṇa Śirōmaṇi

### SANSKRIT

1. Viṣanārāyaṇīyam—(Tantrasārasaṅgraha)
2. Bhārgava Nāḍikā
3. Hariharacaturaṅgam
4. Brahmassūtravṛtti—Mitākṣarā
5. Nyāyasiddhānta Tattvāmṛtam

### MALAYALAM

1. Garbha Cikitsa
2. (a) Vāstulakṣaṇam
   (b) Śilpaviṣayam
3. Mahāsāram
4. Kaṇakkusāram
5. Kriyākramam
6. Kaṇakkusāram—(Bālaprabōdham)

### KANNADA

1. Lōkōpakāram
2. Raṭṭamatam

3. Aśvaśāstram
4. Vividha Vaidya Viṣayagalu
5. Saṅgītaratnākara
6. Sūpaśāstra

## ISLAMIC LANGUAGES

1. Jamil-Al-Ashya
2. Tibb-E-Faridi
3. Tahqiq-Al-Buhran
4. Safinat-Al-Najat

---

## " B " FROM THE TANJORE MAHRAJA SERFOJI'S SARASVATHI MAHAL LIBRARY, TANJORE

### TAMIL

1. Sarabhendra Vaidya Muṟai (Diabetes)
2. Do. (Eyes)
3. Do. (Anaemia)
4. Do. (Śvāsakāsam)
5. Agastiyar 200
6. Koṅkaṇarsarakku Vaippu
7. Tiruccirrambalakkovaiyār with Padavurai
8. Tāḷasamudram
9. Bharatanāṭyam
10. (a) Pāṇḍikēḷi Vilāsa Nāṭakam
    (b) Purūrava Cakravarti Nāṭakam
    (c) Madana Sundara Vilāsa Nāṭakam
11. Percy Macqueen's Collection of Folklore in the Madras University Libraray
12. Rāmaiyaṉ Ammāṉai

### TELUGU

1. Kāmandakanītisāramu
2. Tāḷadaśāprāṇapradīpikā
3. Raghunātha Nāyakābhyudayamu
4. Rājagōpāla Vilāsamu
5. Rāmāyaṇamu by Kaṭṭa Varadarāju

## MAHRATHI

1. Nāṭyaśāstra Saṅgraha
2. (a) Book of Knowledge
   (b) Folk Songs
   (c) Dora Darun Veṇi Paddhati
   (d) Asvasa Catula Dumani
3. (a) Pratāpasimhendra Vijaya Prabandha
   (b) Śarabhendra Tīrthāvali
   (c) Lāvaṇi
4. Devendra Kuravañji
5. Bhakta Vilāsa
6. Śloka Baddha Rāmāyaṇa

## SANSKRIT

1. Aśvasāstra with Tricolour illustrations
2. Rājamṛgāṅka
3. Ănandakandam
4. Ăyurvedamahodadhi
5. Gīta Govinda Abhinaya
6. (a) Coḷacampū
   (b) Sahendra Vilāsa
7. Dharmākūtam—Sundara Kāṇḍa.
8. Jātakasāra
9. Viṣṇutattvanirṇaya Vyākhyā
10. Saṅgīta Darpaṇa
11. Bījapallava

During 1950, only the Sub-committee for TAMIL, TELUGU and KANNADA met in the month of July 1950 at Madras.

The following books were taken up for publication in the various languages during 1950–51.

## TAMIL

1. Daṭcanāyaṉār–Vaiddiya-Aṭṭavaṇai
2. Vaiddiyak Kalañciyam
3. Anubhava Vaiddiya Muṟai Vol. 3

TELUGU

1. Śaivācārasaṅgrahamu
2. Anubhava Vaidyam
3. Abhinayadarpaṇamu

SANSKRIT

1. Ărogyacintāmaṇi
2. Tattvasāra with Ratnasāriṇī
3. Sūtrārthāmṛta Lahari
4. (a) Ratnadīpikā
   (b) Ratnaśāstra

MALAYĂLAM

1. Aśvacikitsa
2. Phalasārasamuccayya

KANNADA

1. Vaidya Sāra Saṅgraha

During 1951-52, only the Sub-committees for TAMIL. TELUGU and MALAYALAM met in the month of April 1951. The following books were taken up for publication in the various languages.

TAMIL

1. Saptariṣināḍi
2. Karnāṭakarājākkal Savistāra Caritram
3. Bharata Siddhāntam
4. Piḷḷaippiṇivākaṭam
5. Anubhava Vaiddiyam Vol. 4
6. Māṭṭuvākaṭam
7. South Indian Temple Inscriptions

TELUGU

1. Brahmavidyā Sudhārṇavamu
2. Rāgatāḷacintāmaṇi
3. Vaidyacintāmaṇi
4. Kumārarāmuni Kathā
5. Kāṭamarāju Kathā

## SANSKRIT

1. Devakeralam—Candrakalā Nāḍī
2. Pātañjala Yogasūtra Bhāṣya Vivaraṇa by Śrī Śaṅkarācārya

## MALAYĀLAM

1. Kiḷivaṇḍusaṃvādam
2. Advaita Vedāntam
3. Bārhaspatyasūtra with Malayālam commentary
4. Karaṇapaddhati

## KANNAḌA

1. Sadgururahasyam

## ARABIC

2. Shawakil-Ul-Hur

It is hoped that the publication of most of the important manuscripts will be completed within the next four years.

Some of the manuscripts taken up for publication are represented by single copies in the Library and consequently the mistakes that are found in them could not be corrected by comparing them with other copies. The editors have, however, tried their best to suggest correct readings. The wrong readings are given in round brackets and correct readings have been suggested in square brackets. When different readings are found, they have been given in the footnotes except in the case of a few books in which the correct readings have been given in the footnote or incorporated in the text itself.

The Government of Madras have to be thanked for financing the entire scheme of publication although there is a drive for economy in all the departments. My thanks are due to the members of the Expert Committee who spared no pains in selecting the manuscripts for publication. I have also to thank the various editors, who are experts in their own field, for readily consenting to edit the manuscripts and see them

through the press. The various Presses that have co-operated in printing the manuscripts in the best manner possible also deserve my thanks for the patience exhibited by them in carrying out the corrections made in the proofs.

The present work is based on a single paper manuscript in the Government Oriental Manuscripts Library, Madras bearing R. No. 1903.

This manuscript explains in prose and poetry the process of preparing various medical oils, powders, tablets, etc., for a number of diseases.

This is one of the manuscripts presented to this Library by Sri Palaniswami Kaunder of Puliyampatti, Palani Taluk, Madurai District, in the year 1949-50.

Reference has to be made to Sri M. Pasupathi and Sri V. S. Krishnan, Pandits of this Library for going through the proofs.

T. CHANDRASEKHARAN,
*General Editor*,
Madras Govt., Oriental Series.

Madras,
11-2-1952

# முன்னுரை

தொன்மையுட்டொன்மையான செந்தமிழ்நாட்டின், நாளெஃதெனச் சொல்லக்கூடா நாளில் தமிழர், உண்டைப் பகுதிகளையும், அதனுள்ளடங்கிய உயிர்ப்பொருள், உயிரில் பொருள்களையும், படைத்துக் காத்து அழித்து, சில பொழுது கழித்து, மீண்டும் உண்டாவதும், நிலைத்திருத்தலும், மறைதலு மான செயலைக்கொண்ட பெரும்பொருளொன்றுண்டு. அப் பெரும்பொருளின் தன்மையையே உண்டைப்பகுதிகளிலுள் ளவை யாவும் பெற்றுள்ளதெனவுங் கொண்டாராயினும் உண்டைப்பகுதிகளிலுள்ள பொருள்கள், தம்மோடு இயற்கை யில் கூடிய மறைவு நீங்கில், அவைகளும் அப்பெரும் பொருளின் தன்மையைப் பெறக்கூடும் எனக் கொண்டனராக,

"அவன் அவள் அதுவெனும் அவைமூ வினைமையின்
தோன்றிய திதியே ஒடுங்கி மலத்துளதாம்,
அந்தம் அனாதி என்மனார் புலவர்"

என சிவஞான போதங் கூறுவதினால், ஆண், பெண், அது என மூன்றாக வகுக்கப்படும் யாவும், தோன்றல், நிலைத்தல் அழிதல் ஆன செய்கைகளைத் தம்மகத்தே தானும் பெற்று, மூவினைப்பயனாய் அழிந்து அழித்த அப்பொருளாலேயே மீண்டும் ஆக்கம்பெற்று, காக்கப்பெற்று அழிக்கச்சுழன்று சுழன்று வரச்செய்யுமென அறிக.

இச் சிவஞானபோதமெனும் நூல், முதற்குழாம் (முதல் சங்கம்) நிலைத்திருந்த பஃறுளி ஆற்றங்கரையிலமைந்த மதுரை யெனும் பதியில் எண்ணாயிரமாண்டுகளுக்கு முன்னாய நூலென நம்நாட்டு அறிஞரும் மேனாட்டு அறிஞரும் கூறுவர். இந் நூல் அவன் அவள் அது எனும் பசுவையும், அவைகளோடு இயற்கையாய் அமைந்த இழுக்கண்களாகிய பாசத்தையும், அவைகளை ஆக்கிய பெரும்பொருள் எனும் பதியையும் விளக்கிக் கூறும் நூலாம். இதனை ஆகமநூல் என்று கூறுவர்.

இம் மூன்று பொருள்களாகிய பசு, பதி, பாசமெனும் மூன்றினில்,

பதிபசு பாச மெனப்பகர் மூன்றிற்
பதியினைப் போற்பசு பாசம னாதி
பதியினைச் சென்றணு காப்பசு பாசம்
பதியணு கிற்பசு பாசநில் லாவே.

எனத் திருமூலர் கூறியாங்கு,

இம் முப்பொருளும் ஒருவகைபினவாயினும், பதியினைப் பசு சேர்தற்கு இயலவொட்டாமதற்படிச்செய்யும் பசுவின்பாசம்; பசுவினேடே இயற்கையில் புனைந்த பாசங்களை நீக்க முடியுமாயின் அப்பசுக்கள் பதியின் நிலையை யடையக்கூடுமெனத் தெற்றெனப் புலப்படும்.

சிவாகமத்துள் இவ்விழுக்குகளை நீக்கும்பொருட்டு, நன்னடத்தை, நல்லொழுக்கம், நிலைத்தல், மூச்சுப்பேச்சு, புலனடக்கல், மூச்சடக்கல், மனமடக்கல், அழியாது நிலைத்தல் ஆகிய இயம முதல் சமாதியீருகக்கொண்ட படிப்படியாகப் பழகிவரும் எண்வகை ஓம்பல்களைக் கடைப்பிடித்தொழுகி, இழுக்குகளைக் களைந்து, சிவநிலை யெய்துதற்கு முன் உடலழியக் கூடுமாகையால்,

உடம்பா ரழியி லுயிரா ரழிவர்
திடம்பட மெய்ஞ்ஞானஞ் சேரவு மாட்டார்
உடம்பை வளர்க்கு முபாய மறிந்தே
உடம்பை வளர்த்தே னுயிர்வளர்த் தேனே.

உடம்பினை முன்ன மிழுக்கென் றிருந்தேன்
உடம்பினுக் குள்ளே யுறுபொருள் கண்டேன்
உடம்புளே யுத்தமன் கோயிற்கொண் டானென்
உடம்பினை யானிருந் தோம்புகின் றேனே.

எனத் திருமூலர், உடலழியின் உயிரழியும், உயிரழியின் கடவுளின் தன்மையைப்பற்றிய அறிவைப்பெற்று அந்நிலையெய்துதற் கூடாதாகும்; ஆதல் பற்றியே உடம்பை வளர்க்கும் நன்வகையறிந்து அதன் பயனாக உடலை நிலைக்கச் செய்து உயிரோடு வாழ்ந்து ஞானம் பெற்று உடலின்கண்ணமைந்த உயிர்ப்பொருளே மேலோனாகிய சிவப்பொருளெனக்கொண்டு அதனைத் தொழுது நின்றனனெனக் கூறினன்.

இம் முப்பொருளையும் ஒன்ருகக் கொண்டு கூறும் "ஆகம" நூலொன்றே உடலையும் உயிரையும் ஒன்றுகூட்டி வாழ்நாளைப் பெருக்கி சிவநிலையடையக் காட்டவந்த நூலாகும். இந்நூலைச் செய்த சித்தர்களே உடலை வளர்த்தற்கான மணி மந்திர அவிழ்தங்களாகிய மருத்துவ நூல்களையும் செய்தது காயகற்பத்திற்கேயாம்.

காயகற்பமென்பது காயம் கற்பம் என இருசொற்களாலாயது. காயம்=(மனம் பழுக்கா உடல்) காயாக உள்ள உடல்; கற்பம்=கல்லைப்போல் அழியாதபடிச் செய்வது எனப்பொருள்படும். காயகற்பம் மூவகைப்படும். அவை மணி, மந்திரம், அவிழ்தம் எனவாம்.

இவற்றுள் முதன்மையும், மற்றவைகளைக் காட்டிலும் மிகச் சிறந்ததும் "மணி" யேயாகும். இம்மணி, இரசத்தைக் கொண்டு, கட்டி, உருக்கி செந்நிறத்தோடு கூடிய மணியெனக் கொள்க. இதனை குருமணி, குருகுளிகை, குரு என்றும் வழங்குவர். குரு சிவப்புநிறம் எனக்கொள்ளப்படுதலால் குருமணி எனப்பெயர் பெற்றது. இதனை சிவப்பொருளெனப் போற்றும் நூல்கள் பல உள. இதனைச் செய்யும் முறைகள் தேரையர் சேகரப் பாவிலும் ஏனைய நூல்களிலும் காணலாம். வடநாட்டிலுள்ள காஷ்மீரத்தி லும், சைவ நூலும், இரசத்தைச் சிவமென்க் கொண்டாடும் நூல் களும், இரசக்கட்டு முதலியவைகளைச் செய்யும் நூல்களும் உள தெனவும், அவைகளை இரசேசுவர நியாயம், இரசேசுவர தரிசனம் இரசதந்திரம் என்னும் பல பெயரால் வழங்குகின்றனர் எனவும் தெரிகிறது.

"மணி மந்திரமாதியால் வேண்டுசித்திகளு" மென தாயுமா னவர் கூறியதுபோல் இரசமணியும் எண்வகைச் சித்திகளையு மளிக்குமென அறியக்கிடக்கும்.

மந்திரம் எனுஞ்சொல், மனது + திரம், எனப் பிரிக்கப்பட்டு மனதின்திரம் எனப்பொருள்படும். மனமானது ஐம்பொறி புலன்களால் ஓர் நிலையில் நில்லாது. புலன்களை அடக்கி மனதை ஓர் நிலையில் நிலைக்கச்செய்யும் திரம், மந்திரம் எனக்கொள்க. இதனை ஐம்புலனைச்சுட்டறுத்துத் தூங்காமற்றூங்கிச் சுகம் பெருவதெக்காலம்" எனக்கூறியதாலறிக.

இஃது கண்களை மூடிக்கொண்டு ஓரிடத்தேயமர்ந்து ஓம், "சி" "வா" "ய" "ந" "ம" என்னும் இவ்வெழுத்துக்களையும் இன்னும் பல எழுத்துக்களைக்கொண்டும் ஓதி, காது பிறவெளி யைக்கேளாமற்படிக்குச் செய்து, மூச்சுவிடல், அடக்கல், வாங்கல் எனும் பழக்கங்களைக் கடைபிடித்து, புலன்களை அடக்கி மனதை ஓர்நிலையில் அசையாது நிலைக்கச்செய்யும் வழியாகும்.

இவ்வழியன்றி "தந்திரம்" என்னும் மற்றோர் வழியுமுண்டு. இஃது, தன் + திரம் என இருசொல்லாலாயது. தன்னுடைய திரம் எனப்பொருள்படும். தன்னுடைய திரத்தால், காணுக்கண், கேளாச்செவியென, கண்ணிருந்தும் கண்முன்னுள்ளதைப்பாராம லிருப்பது, காதிருந்தும் பிறர்பேசுவதையும் பாடுவதையும் கேளா திருந்து தங்களின் நோக்கத்திலேயே ஈடுபட்டு பெரும் பொருளைக் காண விரும்புதலாம்.

இவ்விரண்டினுள் (மந்திரம் தந்திரம்) "மந்திரம்" எத்தகை யோரும் பழகி அதன் பயனை எளிதில் அடையக்கூடுமாகையால், பெரும்பான்மையோர் இப்பழக்கத்தைக் கைக்கொள்வர். இதனைப் பழகிவரின், அதனால் உடலின் கண்ணமைந்துள்ள ஐந்து நிலை களில் வாழும் கீழ் நோக்குக்கால் முதலிய (பஞ்ச வாயு) வைகளும் தத்தம் நிலையெய்தி நோயை உண்டாக்காமற்படிக்காத்து, உயிரைவளர்த்து, அறிவைப்பெருக்கி சில சக்திகளையும் தரும்.

"அவிழ்தம்" என்னுஞ்சொல் அவிழ்க்கப்படுவது எனப் பொருள்படும். அதாவது பிணிக்கப்பட்ட கட்டப்பட்ட, குற்றங்களையும் கால் (வாயு) களையும் அவிழ்க்கச்செய்யும் பொருள் எனக்கொள்க.

உடலை வளர்க்க வந்த இம்மூவகை முறைகளாகிய, மணி, மந்திரம், அவிழ்தங்களைக் காயகற்பம் எனக்கூறுவர், இந்நூலை அந்நாளிலியற்றியோரும் இந்நூலில் அடங்கிய முறைகட்கு கற்ப வகை எனப்பெயரிட்டுள்ளாராகலின் இவர் சித்தர் முறையைக் கைக்கொண்டார்போலும்.

இந்நூலிற் கூறிய பலமுறைகள், மருத்துவர்களுக்கே யன்றி எவரும் தாமேசெய்து வழங்கி பலனடையக்கூடிய சிறு முறைகளாகக் காணப்படுகின்றன. சில முறைகள் பற்ப செந்தூரங்களாக உள்ளமையால் மருத்துவர்கட்கு மிகவும் நற்பயனை யளிக்கும்.

இந்நூல் எளியநடையில் பெரிதும் கற்றுணராதவர்கள், படித்தறியும்படி எழுதி இருப்பதால், நாட்டு மக்களும், நாட்டு மருத்துவரும் தாமே படித்து நற்பயனைப் பெறலாம். அன்றியும் இஃது உள்நாடுகளில் (கிராமங்களில்) இனி அமைக்கப்படும் புத்தகசாலைகளிலும் ஓரிடம்பெறத்தக்க புத்தகமெனக் கூறுதல் மிகையாகா.

இந்நூலைப் பரிசோதித்தவர் என்னும் பெயரினை எமக்களித்த அன்பர், திரு. சந்திரசேகரனார் அவர்கட்கு யாம் என்றும் கடைப் பாடுடையோம்.

இந்நூலைப் புதிய அச்சுகளைக்கொண்டு அழகாகவும் பிழை யின்றியும் அச்சிட்ட அச்சகத்தார்க்கும் என்நன்றி நன்னன்றி யாகுக.

"அரசகம்"
அமைந்தகரை,
சென்னை-10
2—2—52.

க. நா. குப்புசாமி முதலியார்

# விஷய அட்டவணை.

# அனுபவ வைத்தியம்

## கற்ப வகைகள்

### சங்கம் வேர்க் கற்பம்.

சங்கம் வேரை காடியிலரைத்துண்ண சகல நோய்களும் போம். அன்றியும் வெள்ளாட்டுக் கோமயத்தில் அரைத்துக் குடிக்கச் சூலை நோயும், பாகலிலைச் சாற்றில் அரைத்துக் கொடுக்கக்காமாலையும், பசுவின்நெய்யிலுண்ணப்பெருவயிறும், எண்ணெயிற் கொள்ளப் பாண்டு நோயும், பசுவின் கோமயத்தில் கலக்கிக் கொடுக்க மேலுப்புசமும் வீக்கமும், பசுவின் பாலிற் கலந்து கொடுக்கப் பெரும்பாடும் தீரும். வேப்பெண்ணெயில் கூட்டி நசியமிட ஒருதலை நோயும் தீரும்.

### வசம்புக் கற்பம்.

வசம்புச் சூரணம் படி இரண்டை, நெல்லிக்காய்ச் சாற்றில் பன்னிரண்டு முறை பிசறி யுலர்த்தியதைப், புதுக் கலசத்திலிட்டு வேடுகட்டித், தொண்ணூறுநாள் தானியபுடம் வைத்து எடுத்து, வெரு கடிப்பிரமாணம் தேனில் கொள்ள, பெருத்த வாத உடல் இளைக்கும். நெய்யில்கொள்ள இளைத்த உடல் பருக்கும். ஒரு மண்டலம் கொள்ளவும். பத்தியம் : புளி தள்ளிவிடவும்.

### ஈசல் கற்பம்.

முருக்கிதழ்போல் சிவந்து முற்றிய ஈசல்களைப் பீங்கானி லிட்டுக் கால்பண வெடை வெண்காரம்சேர்த்துப் பிசைந்து வெய்யிலில் வைக்க அதிலிருந்து தைலம் இறங்கும். இத்தைலத்தில் ஒரு கழஞ்சும், கந்தகம் முக்கால் கழஞ்சும், பெருங்காயம் முக்கால் கழஞ்சும், இந்துப்பு முக்கால் கழஞ்சும், வேம்பின் முத்துப் பருப்பு முக்கால் கழஞ்சும் முதலியன கூட்டி நன்ருக அரைக்கக் குழம்பாகும். இக்குழம்பில் பாக்களவு வெற்றிலையிற்றடவிக் கொடுக்கப் பாம்புக் கடி தீரும். பஞ்சிற் றேய்த்து நசியமிட விடத்தாலடங்கிய உயிர் எழுந்திருக்கும். (நாலு வகைப் பாம்புக் கடிகளுக்கும் நசியம் பண்ணலாம்) புட்டியின் அடியிலுள்ளக் குழம்பில் பணவெடை முக்காலுங் கூட்டிக் குழைத்துக் கண்ணிலிட்டு நசியமிட அடக்கமெழுந்திருக்கும். நாணு கொண்டு உயிர் அடக்கமானல் உச்சியில் குடோரியாடிக் குழம்பிட்டு நெருப்பெழத் தேய்க்க அடக்கம் விழிக்கும். பின்னும் நசியமிடவும்.

பிள்ளை இல்லாதார்க்கு வீட்டுக்கு விலக்கமான நாலாம் நாள் வெற்றிலையில் பாக்களவு கொடுக்கப் பிள்ளையுண்டாம். இந்தக் குழம்பில் மஞ்சாடியளவு எட்டுநாள் தின்ன நீரிழவு, மூத்திரப் புழை எரிச்சல், மூத்திரக் கிரிச்சரம் இவை தீரும். பனங் கருப் பட்டியில் மஞ்சாடியளவு எட்டு நாளுண்ண மூலரோகம் தீரும்.

## சிற்றாமணக்கின் கற்பம்.

சிற்றாமணக் கெண்ணெயும் பெருங்காயமுஞ் சேர்த்து இள வெந்நீரில் கொடுக்கக் குன்மமும், வயிற்று வலியும் தீரும். மேற் படி எண்ணெயில் இந்துப்பைப் பொடித்துக் கூட்டிக்கொடுக்க பெருவயிறு தீரும். சிற்றாமணக்கின் ஓடு நீக்கி எடுத்த பருப்பும், சிறு கடுகும் பாலில் அரைத்துக் கூட்டிக் கொடுத்தாலும் பெரு வயிறு தீரும். இந்த எண்ணெயும் பூசனிக்காய்ச் சாறும் கலந்து குடிக்க உப்புசம் தீரும்.

## ஆடுதீண்டாப்பாளைக் கற்பம்.

ஆடுதின்னாப் பாளையிலையை எண்ணெயில் கசக்கிக் காதில் பிழிய புழு விழும்.

## பேய்ச்சுரைக் கற்பம்.

பேய்ச்சுரை விதையை எண்ணெயிற் பெருங்கொன்றைப் பட்டையும் முருங்கையிலையுங் கூட்டிக் கசக்கிப் பிழிய காது வலி, காது கேளாமை நீங்கும்.

## இலைக்கள்ளிக் கற்பம்.

இலைக்கள்ளி வேரை உலர்த்திப் பொடித்தச் சூரணம், குள விந்த மஞ்சட் சூரணம் இவ்விரண்டையுஞ் சேர்த்து வெள்ளாட்டு நெய்யிலுண்ண இருமல் தீரும். மேற்படி இலைக்கள்ளிச் சூர ணத்தை பால் சோற்றிலுண்ண சரீரம் நன்றாகும். மேற்படிச் சூரணத்தை நெற்றியிலிட்டுச் செல்ல இராஜவசியம் முதலியன வுண்டாகும். மேற்படிச் சூரணமும் மிளகுப் பொடியும் கோசலத் தில் சேர்த்துக்கொள்ள 18 குட்டமுந் தீரும். மேற்படிச் சூரணத் தை எண்ணெயிற்கொள்ள மூலரோகம் தீரும். இலைக்கள்ளியிலை யும் வேரும் புகைபோட வெதுப்பும் குளிரும் போம். இலைக்கள்ளி இலையை எட்டு நாளருந்த கைப்பிசக்குத் தீரும். இதன் விதை யைக் குளிசத்திலடைத்துக் கையில் கட்டிக்கொண்டு தேங்கா யைத்தட்ட உடையும்.

## வல்லாரைக் கற்பம்.

வல்லாரை யிலையை நிழலில் உலர்த்திச் சூரணித்துக் காடியில் கொள்ள சகல நோயும் தீரும். 60 நாள் உண்ண நரை திரை மாறும்.

## சங்கம்வேர்க் கற்பம்.

வடக்கே போகின்ற சங்கம்வேரை கோலாலே கோலிப் பிடுங்கி, மேற்புறணியைச் சீவி, நிழலில் உலர்த்திப் பொடித்து, வஸ்திரகாயஞ் செய்து, புதுக் கலசத்தில் வைத்துக்கொண்டு, சுபதினத்தில் நெய்யிற் குழைத்து நாற்பது நாள் சாப்பிட, சரீரத்திலுள்ள சகல வியாதிகளும் தீரும். குட்டம் 18 நாளில் தீரும். பிள்ளையில்லார்க்குப் பிள்ளையுண்டாகும். தேனிற் கொள்ள நரைதிரை மாறும். வெள்ளாட்டமுரியில் கொள்ளச் சோகை தீரும்.

## இரணங்களுக்கு.

இரசம், அதிமதுரம், செங்கழுநீர்க்கோட்டம், சுக்கு, கடுக்காய், கஸ்தூரிமஞ்சள், வெள்ளை வெங்காயம், வசம்பு, செண்பகப்பூ, கடுகு, கருஞ்சீரகம், வெளிச்சிப்பிசின், கருங் குங்கிலியம், நெல்லிக்காய், கந்தகம், காசுக்கட்டி, நன்னாரிவேர், பொன்முசுட்டை வேர், புங்கம் வேர், அவுரிவேர், வேம்புப்பட்டை இவை வகைக்கு விராகன் ஒன்றைச் சிற்றாமணக்கு எண்ணெய் ஒருபடியில் தட்டிப் போட்டுப் பதமாய்க் காய்ச்சி, சீலையில் தோய்த்துப் புண்ணுக்குப் போட கண்டமாலை, பிளவை, விப்புருதி, அரைக்கடி, பவுத்திரம், சிலந்தி, அரையாப்பு இவையும் இன்னும் அநேகம் புண்களும் தீரும். இந்த எண்ணெய்யை ஊணு இலையில் வைத்துக் கட்டவும். பிள்ளைபெற்ற வயிற்றிலிருந்து இரத்தம், சீதம் விழுந்தால் வசம்பு, சுக்கு, ஊமத்தையின் வேர், இம்மூன்றையும் அரைத்துப், பொங்கக் கொதிக்கவைத்து சிறிது எண்ணெய்க் கூட்டி அடிவயிற்றில் வலிக்கின்ற இடத்தில் மூன்றுநாள் பூச, வயிற்று வலி குணமாகும்.

## வெள்ளைநோய் போக.

கருங்குருவை யரிசியை இரண்டாவது கழுவிய கழுநீரும் ஆத்திப்பட்டைச் சாறும் சரிகூட்டி சர்க்கரை சேர்த்துக் குடிக்கவும். பத்தியம் அரைக்கீரை கூட்டவும்.

குப்பைமேனிக் கொழுந்தையும், முடக்கொற்றான் கொழுந்தையும் தேங்காய்ப்பால் வார்த்து வேகவைத்துச் சாப்பிடவும்.

அறுகம்வேர், நற்சீரகம் இவற்றைப் பசுவின் நெய்யில் அரைத்து மூன்றுநாள் சாப்பிடவும்.

## பூசனிக்காய் லேகியம்.

பூசனிக்காய்ச்சாறு, கருப்பஞ்சாறு, தண்ணீர்விட்டான் கிழங்குச்சாறு, நெல்லிக்காய்ச்சாறு, பசுவின் நெய் இவை வகைக்குப் படி 4, அதிமதுரம், முந்திரிப்பழம் இவை வகைக்குப் பலம் 4, சுக்குப் பலம் 3, கருப்புக்கட்டி வீசை அரை, இவைகளைக் கொண்டு லேகியம் செய்து கொடுக்க நீர்ப்பாடு, தாகம், பித்த மிகுதியால் வந்த கண்நோய், உட்காய்ச்சல் முதலியவை நீங்கும்.

## செரியாமைக்கு.

இரண்டு வெற்றிலையில் சுண்ணாம்புத் தடவி, பெருங்காயத்தைப் பொடித்து வைத்துச் சுருட்டி, கதிரில் கோர்த்துச் சுட்டு, தண்ணீர்விட்டுப் பிசைந்து, குடிக்க அஜீரணக் கழிச்சல் தீரும்.

## நீரடைப்புக்கு.

வெள்ளரிக்காய்ச்சாறு, வாழைக்கிழங்குச்சாறு, கற்றாழைச் சாறு, நல்லெண்ணெய் இவைகள் வகைக்குப்படி ஒன்று சேர்த்து, அதில் அதிமதுரம், திப்பிலி, இந்துப்பு, நெரிஞ்சிக்காய், சந்தனம், முந்திரிப்பழம், சிறுபூளை வேர், வெள்ளரி விதை இவை வகைக்கு விரான் ஒன்றைப் பாலிலரைத்துப் போட்டுக் காய்ச்சி, மேலுக்கு அதனைப்பூசி ஒற்றிடமிட சலமலம் விடும்.

வேறு :—நெருஞ்சி மூலத்தைக் கஷாயமிட்டுக் கொடுக்கவும். நெரிஞ்சிச்சமூலம், ஆலஞ் சரகு, இஞ்சி இவைகளைக் கூட்டிக் கஷாயமிட்டு மேலதைப்புக்குக் கொடுக்கவும். சலமலம் விடும். மேலதைப்பும் தீரும்.

முசுமுசுக்கைச்சாறு, வெங்காயச்சாறு இவ்விரண்டும் கலந்து கொடுக்க அக்கரம் முறியும். இரத்தம் உடனே நிற்கும். கைகண்டது.

## வாயில் இரத்தம் விழுகின்றதற்கு.

மணத்தக்காளியை அரைத்துக் கழற்சிக்காய் அளவாக உருண்டைகளாகச் செய்து மூன்று வேளையாகக் கொடுக்க உடனே தீரும்.

## நீர்ப்பாட்டுக்கு.

ஜாதிக்காய், ஜாதிப்பத்திரி, பொரித்த வெங்காரம், மாசிக்காய், வெள்ளரிப் பருப்பு, இவ்வைந்து வகைகளையுங் கூட்டி எண்ணெய் வார்த்து மைபோலரைத்துப் பருத்திக்கொட்டை யளவு கொடுக்கவும்.

## மூக்கிலும் வாயிலும் இரத்தம் விழுவதற்கு.

கடுக்காயைப் பொடித்து ஆடாதோடைச் சாற்றில் 14 தரம் சுவறச்சுவற ஊறவைத்து உலர்த்திப் பொடித்துத் தேனில் மூன்று கழஞ்சு வீதம் உண்ண, மூக்கிலும் வாயிலும் விழுகின்ற இரத்தம், இருமல், பெரும்பாடு இவை தீரும்.

வாதத்தால் இரத்தம் வந்தால் நாற்றமும், உண்ணுக்கு வறட்சியும் நாசியிற் புண்ணும் இருக்கும். அதற்கு மருந்து:— நாசியிற் பசுவின் நெய்யை விடவும். அல்லது கல்லுப்பை வெள்ளாட்டுப் பாலில் இட்டு நசியமிடவும்.

பித்தத்தால் இரத்தம் வந்தால் மூக்கில் மஞ்சள் சாறுபோல் நீர் விழும், நாறும். அதற்கு மருந்து:—கருங்குருவை, நெல்லரிசிப் பழையது, கற்கண்டு இவற்றை எருக்கம் பாலிலரைத்து நசியமிடவும்.

## மூக்கடைப்பு, இரத்தம் விழுதல், தலைக்கனம், இவைகளுக்கு.

நெல்லிமுள்ளியைச் சூரணித்து வெல்லங்கூட்டிப் பிசைந்து உருட்டி காலையில் 4 கழஞ்சு வீதம் சாப்பிடவும்.

## மூக்கு நாற்றத்திற்கும், இரத்தம் விழுதலுக்கும்.

துளசிச்சாறு, மஞ்சள்சாறு, சாரணையிலைச்சாறு, நல்லெண்ணெய் இவைகள் வகைக்குப் படி முக்கால் கூட்டிப் பதமாய்க் காய்ச்சி எடுத்து நசியமிடவும். கைகண்டது.

## தாம்பிரப் பற்பம்.

சுத்தி செய்த செம்பை வெங்காயச் சருகுபோல் மெல்லிய தகடடித்துப் பொடியாக வெட்டினது கழஞ்சு 8, இரசம், கந்தகம், கல்லுப்பு, வகைக்குக் கழஞ்சு ஒன்று பொடித்து, தேங்காய் ஓட்டிலிட்டு, எலுமிச்சம்பழச் சாறுவிட்டு வெய்யிலில் வைக்க உருகிக் கரையும். இதைக் கிண்டி யுலர்த்திப் பொடித்து, வளையல்

குப்பியிலிட்டு வாய்க்குத் துணியடைத்து, ஏழுசீலை மண்செய்து, சட்டியில் மணலிட்டு, அதன் நடுவில் வைத்து மேலும் மணலிட்டு மேற்சட்டிமூடி, சந்து வாயை சீலைமண் செய்து, அடுப்பில் வைத்து மெதுவாய் எரிக்கவும். மேற்சட்டியின்மேல் வைக்கோலைப் போடப் பற்றி எரியும். எரிந்தால், தீயை யாற்றி, ஒருநாளிருந்து மறுநாளெடுக்க பற்பமாயிருக்கும். இதனில் சர்க்கரையில் கால் பணவெடையைக் கொடுக்கக் குடல்வாதம், நாபிசூலை, குடல் புரட்டு, வாயுத்திரட்சி, கவுசை, விப்புருதி, முதலியன தீரும். பத்தியம்:— குருவி, முயல், துவரம்பருப்பு, தூதுவிளங்காய், தண்டுக்கீரை, வெள்ளரிக்காய், வெள்ளாட்டு வற்றல் முதலியன ஆகும்.

## சுரசிந்தாமணி மாத்திரை.

அப்பிரகம், இரசம், கந்தகம், நேர்வாளம் இவைகள் வகைக்குப் பலம் ஒன்று, திப்பிலி கழஞ்சு ஒன்று: இவற்றை எலுமிச்சம்பழச் சாற்றி லரைத்துக் குளிகைசெய்து நிழலில் உலர்த்திக்கொள்ளவும். இதில் ஒன்றை இஞ்சிச்சாறு, அல்லது சுக்குக் கஷாயத்தில் கொடுக்கப் பித்தச் சுரமும், ஆடாதோடைச் சாறு, அல்லது குதிரைவாலிச்சாற்றில் கொடுக்க வாதச்சுரமும், சிலேத்துமச் சுரமும் தீரும்.

## சுவச்சந்த வயிரவ மாத்திரை.

இரசம், நாபி, கந்தகம், ஜாதிக்காய் இவைகள் வகைக்கு விராகன் எடை ஒன்று, திப்பிலி விராகன் எடை இரண்டு, இவற்றை வெற்றிலைச் சாற்றிலரைத்து உழுந்தளவு மாத்திரைசெய்து தக்க அனுபானத்திலிடவும்.

## ஆனந்த வயிரவ மாத்திரை.

சாதிலிங்கம், நாபி, சுக்கு, திப்பிலி, மிளகு, வெங்காரம், கந்தகம், இவைகளைச் சுத்திசெய்து, எலுமிச்சம்பழச் சாற்றிலரைத்து மிளகளவு உருண்டைசெய்து இஞ்சிச் சாற்றில் கொடுக்கவும்.

## வங்கப் பற்பம்.

வெள்ளீயம் வேண்டியது சட்டியிலிட்டு முனிமஞ்சள் பலம் இரண்டு, ஓமம்படி ஒன்று இவற்றைப் பொடித்து சிறுகச் சிறுகப் போட்டு, இரும்புக் கரண்டியால் வறுக்கத் திருநீறுபோல் பற்பமாகும். கற்றாழைச்சாறு உழக்கும், ம.ளப்பாகு பாக்களவுங் கூட்டி அதில் இரண்டு பண வெடை பற்பம் சேர்த்து 15 நாள் சாப்பிட, மோர்போல் சிறுநீரிறங்குவதும், பசுவின் பாலும் மணப்

பாகுங் கூட்டி இரண்டு பண வெடை பற்பம் சாப்பிட இரத்தம் போல் நீரிறங்குவதும், ஆவாரங் கொழுந்தை எருமை மோரி லரைத்ததில் இரண்டு விராகனெடை பற்பம் கூட்டிச் சாப்பிட மிகு கழிச்சலும், இரண்டு விராகன் எடை ஏலம் பொடித்துப் பசு வின் வெண்ணெய்யில் குழைத்ததில் அரைவிராகன் எடை பற்பம் கூட்டியுண்ணப் பிரமியமும், ஏலச்சூரணம் விராகன் எடை இரண் டும், பற்பம் விராகன் எடை இரண்டும் சேர்த்துச்சாப்பிட, வாய்க் கிரந்தியும், பற்பத்தைத் தேனிற்கொள்ள சரீர இளைப்பும், அதி மதுரச் சூரணம் விராகன் எடை மூன்றும், அப்பிரகப் பற்பமும், மேற்படி வங்கப் பற்பமும் வகைக்கு விராகன் எடை இரண்டும், சேர்த்து உண்ண நீரிழிவும், எள்ளுந் தேங்காயும் வறுத்தரைத்ததில் மேற்படி பற்பம் கொடுக்கச் சன்னியும், அம்மான் பச்சரிசிச்சாறு ஆழாக்கில் கொடுக்க ஆண் மைக் குறைவும், சர்க்கரையில்கொள்ள எரிமூத்திரமும், அமுக் கரான் வேர்ப்பட்டைச் சாற்றில் கொடுக்க மூக்கில் இரத்தம் விழு வதும், பூசனிக்காய்ச் சாற்றில் கொடுக்கக் கைகாலெரிவும் திரும். பத்தியமாய் இருக்கவும்.

## பூபதிப் பற்பம்.

இரசம் பலம் ஒன்றுடன் வழுதலைவேர், நெல்லிப் பருப்பு, வாயுவிளங்கம், ஏலம், இலவங்கம், இலவங்கப்பத்திரி, கோரைக் கிழங்கு, சுக்கு, மிளகு, திப்பிலி, கடுக்காய், சிவதைவேர், இவை களைச் சரி எடை வெடுத்துச் சூரணித்து வெருகடிப் பிரமாணம் சர்க்கரைக் கூட்டி, இளவெந்நீரில் கொள்ள, வயிற்றுநோய், மூல வியாதி, வயிற்றுக் கிரிப்புழு, வாதபித்த சிலேட்டுமப் பாண்டும், காமாலையும் ஆகிய இவைகள் தீரும்.

## பெருவயிறு வீக்கத்திற்கு.

பேய்ப்பீர்க்கங்காய்ச் சாற்றைக் குழம்பாகக் காய்ச்சி, அதற்குச் சரியாகப் புளிவிட்டுத் துழாவித் திரட்டி வைத்துக் கொண்டு, பாக்களவு இளவெந்நீரில் எட்டுநாள் சாப்பிட, பெரு வயிறு, புறநீர்க்கோவை முதலியன தீரும்.

## வயிற்று வீக்கத்துக்கு.

செவ்வலரி வேர், சசனச்சாலை, கடுகு இவற்றை எலுமிச்சம் பழச்சாற்றிலரைத்து வயிற்றின்மேல் பூசவும். மேற்படி நோய்க்கு நாயுருவிச்சாம்பலைப் பசுவின் கோமயத்தில் அரைத்துத் தெளி

வைவடித்துக் காய்ச்சி வெய்யிலில் வைத்து எடுத்த உப்பைத் தேனில் சாப்பிடத் தீரும்.

## முகம், கை, கால், வீக்கத்திற்கு.

மூக்கரட்டை வேரும், கீழாநெல்லி வேரும், வகைக்கு விளாங்காய்ப் பிரமாணமரைத்து, அரிசிமாவுடன் கலந்து கூழாகக் காய்ச்சி மூன்றுநாள் தின்ன வீக்கம் வற்றும்.

## மருந்தீட்டுக்கு.

வல்லாரைக் கீரையும், ஆரைக் கீரையும் சரியாயரைத்துப் பசுவின் பாலில் சாப்பிடவும். மேற்படி நோய்க்கு பயிற்றங்கஞ்சிக் காய்ச்சிக் கொடுக்கவும்.

## அதிசாரச் சுரத்துக்கு.

தசமூலக்குடிநீரில், பாதிரி, சிறுமுன்னை, பெருவாகை, வில்வம், கண்டங்கத்தரி, நெருஞ்சி, பெருங்குமிழ், சிற்றாமுட்டி, சீந்திற்றண்டு, பற்படாகம், சுக்கு, காரெள்ளுப்பொரி, இவைகளைப் பொடித்துப் போட்டு நிர்விட்டுக் காய்ச்சி வடிகட்டித் தயிர் கூட்டி உட்கொள்ள அதிசாரச் சுரம் தீரும்.

## பித்தச் சுரத்துக்கு.

முந்திரிப்பழம், சீந்திற்றண்டு, பற்படாகம், முத்தக்காசு, கடுகுரோகிணி இவைகளைக் குடிநீர் இட்டுக்கொடுக்கப் பித்தச் சுரம் தீரும்.

## சிலேட்டுமச் சுரத்துக்கு.

கண்டங்கத்திரி வேர், தூதுவளை வேர், மிளகரணை வேர், வாகைப்பட்டை, தேற்றாங்கொட்டை, சுக்கு, மிளகு, திப்பிலி, இவைகள் வகைக்கு விராகன் எடை ஒன்றாகச் சேர்த்துக் குடிநீர் இட்டுத் திப்பிலிப்பொடி. சேர்த்து உட்கொள்ளவும்.

## அதிசாரச் சுரத்திற்கு.

சுக்கு, கடுக்காய், முத்தக்காசு, அதிவிடயம், தேவதாரம், இவைகளைக் குடிநீர் இட்டு உட்கொள்ளவும்.

## சிலேட்டுமச் சுரத்துக்கு.

நன்னாரிவேர், கோட்டம், இலுப்பைப்பூ, இவைகளைக் குடிநீர் இட்டு தேன் சேர்த்து உட்கொள்ளவும்.

வேறு :—பேருமுட்டிவேர், சிறுவழுதலைவேர், ஆடாதோடை வேர், முத்தக்காசு, செங்கழுநீர்க்கோட்டம், சிறுதேக்கு, நில வேம்பு, சிறுகாஞ்சொரிவேர், இவைகளைக் குடிநீரிட்டுக் கொடுக்க வும்.

### வாதச் சுரத்துக்கு.

பேருமுட்டி, கொத்தமல்லி, பேரிந்து, நெறபொரி, இவை களைக் குடிநீரிட்டுக் கொடுக்கவும்.

வேறு :—கண்டங்கத்திரி வேரும், சுக்கும், குடிநீரிட்டுக் கொடுக்கவும்,

வேறு :—சீந்திற்றண்டு, நெல்லிவற்றல், சிறுகாஞ்சோரி, இருவேலி, மிளகு, சுக்கு, கடுக்காய், இவைகளைக் குடிநீரிட்டுக் கொடுக்கவும்.

### சிலேட்டுமச் சுரத்துக்கு.

கறிவேப்பு, கண்டங்கத்தரி, நொச்சி, கரிசலாங்கண்ணி, பற் படாகம், நன்னாரி, வில்வம், காவட்டம்புல், துளசி, கஞ்சாங் கோரை, ஆடாதோடை, இவைகளைக் குடிநீரிட்டுக் கொடுக்கவும்.

### அதிசாரச் சுரத்துக்கு.

வட்டத்திருப்பி, முத்தக்காசு, மலைவேம்பு, மாதுளை, காசுக் கட்டி, சீந்திற்றண்டு, மஞ்சள், கொத்தான்வேர், கொன்றைப் பட்டை, துவரைவேர், அதிவிடயம், திப்பிலி, சுக்கு, நிலவேம்பு, சிறுவழுதலைவேர், கண்டங்கத்தரிவேர், பேய்ப்புடல், நெற்பொரி, இவைகளைக் குடிநீரிட்டுக் கொடுக்கத் தீரும்.

வேறு :—சிறுவழுதலை, வேப்பம்பட்டை, கடுக்காய், தான்றிக் காய், நெல்லிமுள்ளி, சுக்கு, திப்பிலி, மிளகு, சிறுமுல்லை, சீந்திற் றண்டு, கண்டங்கத்திரி, இவைகளைக் குடிநீரிட்டுக் கொடுக்கவும்.

### குன்ம வகைக்கு.

காட்டாமணக்கின் கிழங்கு, சிவதைவேர், அழிஞ்சியிலை, காக்கணம்வேர், சாரணைவேர், வேலிப்பருத்திவேர், கொடிவேலி வேர், பாவட்டைவேர், நொச்சிவேர், தழுதாழைவேர், விழிம்பி வேர், நன்னாரிவேர், குமிழம்வேர், கழற்கொடிவேர், பிரண்டைவேர் முன்னைவேர், வில்வவேர், வாகைவேர், புனல் முருங்கைப்பட்டை, கற்றாழைவேர், தூதுவளைவேர், சிற்றாமணக்கம்வேர், கொன்றைப் பட்டை, கண்டங்கத்திரிச்சமூலம், நில ஆவரைவேர், புளியம்

பட்டை பிரண்டைக் கிழங்கு, முடக்கத்தான், மாவிலிங்கம்பட்டை, ஆயில்பட்டை, புங்கம்பட்டை, கொட்டைக்கரந்தை, கறிவேப்பம் பட்டை, ஆடாதோடை, செருப்படை, பொடுதலை, கொல்லன் கோவைக் கிழங்கு, இவைகள் வகைக்குப் பலம் இரண்டு, பேய்க் கும்மட்டிக்காய் 50, இவைகளைச் சிறுக நறுக்கி யிடித்து எட்டு மரக்கால் தண்ணீரில்போட்டு நாலில் ஒன்ருய்க் காய்ச்சி வடித்து மூன்றுபடி விளக்கெண்ணெய் சேர்த்து, அரத்தை, தேவதாரம், கோஷ்டம், குங்குமப்பூ, மரமஞ்சள், செவியம், சிறுதேக்கு, செவ் வல்லிக்கொடி, கருஞ்சீரகம், நற்சீரகம், வெந்தயம், தக்கோலம், கார்போகரிசி, இந்துப்பு, பெருங்காயம், கடுகுரோகணி, காந்தம், கற்கடகசிங்கி, விளாலரிசி, திப்பிலி, சதகுப்பை, கிராம்பு, வெட் பாலையரிசி, வசம்பு, இவைகள் வகைக்கு விராகன் எடை நாலும் அசமதாகம், வாலுளுவை, மிளகு, இவைகள் வகைக்கு ஒரு உழக் கும், கடுக்காய் 100, வெள்ளைவெங்காயம் 20, தான்றிக்காய் 20, ஜாதிக்காய் 6, நேர்வாள விதை 200, கழற்சிப் பருப்பு 20, பூவர சங்கொட்டை 50, சேங்கொட்டை 20, இவைகளை உரலிலிடித்து, அல்லது அரைத்து, மேற்படிக் குடிநீரில் கரைத்து மூன்று நாளூரவைத்து நான்காம் நாள் காய்ச்சி மெழுகு பதத்தில் வடித் துக்கொண்டு, நோய்கள் கடுமையாக இருந்தால் ஒரு கரண்டி வீதம், மூன்றுநாள் கொடுத்தபின், ஒன்று விட்டொரு நாளாக, பத்துநாள் கொடுக்கவும். வியாதி மத்திமமானல் ஒரு காசியெ டை வீதம் கொடுக்கவும். பத்தியம்—வெய்யில் படாமலிருக்கவும். முருங்கைக்காய், முருங்கைக்கீரை சேர்க்கவும். குடல்வாதம், கழல்வாதம், பக்கசூலை, சூலை, பொருமல், வாயுகுன்மம், வலி குன்மம், எரிகுன்மம், வாதசூலை, அக்கினிமந்தம், அகுவை, கவிசை, வெப்பு, முதலிய வாயு நோய்கள் தீரும்.

## நேத்திர வாயுவுக்கு.

சாதிக்காய், விளாமிச்சம்வேர், சமுத்திராபச்சை, செண்பகப் பூவரும்பு, பூலாங்கிழங்கு, கல்நாறு, தேவதாரம், இரத்தச் சந்தனக்கட்டை, சடாமாஞ்சில், அதிமதுரம், கோஷ்டம், மஞ் சிட்டி இவைகள் வகைக்கு இரண்டு விராகன் எடையைப் பசுவின் பாலிலரைத்து, எண்ணெயிலிட்டுக் காய்ச்சி மெழுகு பதத்தி லிறக்கி, நாலுநாளைக்கொருதரமாகத் தலையில் தேய்த்து உசிலம் அரப்பிட்டு முழுகவும். இதனல் அஸ்த்தி சுரம், மேகசுரம், நெடுநாள் சுரம், கண்ணெரிவு, கைகாலெரிவு இவைகள் தீரும்.

வேறு :-அதிமதுரம் விராகன் எடை ஒன்று, ஏலம் விராகன் எடைமூன்று, இலவங்கப்பட்டை விராகன்எடை ஒன்று, கொத்து

மல்லி விராகன் எடை இரண்டு, வாயு விளங்கம் விராகன் எடை ஐந்து, செண்பக வரும்பு விராகன்எடை ஐந்து, நெல்லிப்பருப்பு விராகன் எடை இரண்டு, மிளகு விராகன்எடை மூன்று, கிராம்பு விராகன் எடை ஒன்று, மனோசிலே விராகன் எடை ஒன்று, சவுக்காரம் விராகன் எடை ஒன்று, அரிதாரம் விராகன் எடை ஒன்று, சாதிக்காய் விராகன் எடை இரண்டு, கோரோசனை விராகன் எடை ஒன்று, மரமஞ்சள் விராகன் எடை இரண்டு, மஞ்சிட்டி விராகன்எடை ஒன்று, திப்பிலி விராகன் எடை நான்கு, விளாமிச்சம்வேர் விராகன் எடை மூன்று, செஞ்சந்தனக் கட்டை, நல்லசந்தனக் கட்டை, கோலாக் கிழங்கு, தாணிக்காய், பூலாங் கிழங்கு இவை வகைக்கு விராகன் எடை இரண்டு, சாதிபத்திரி, சீரகம், கடுக்காய், கஸ்தூரி மஞ்சள் இவை வகைக்கு விராகன்எடை ஒன்று, திப்பிலிமூலம், வங்காளப் பச்சை வகைக்கு விராகன் எடைமூன்று, சிறுநாகப்பூ - கோஷ்டம் - சதகுப்பை இவை வகைக்கு விராகன் எடை ஐந்து, குந்திரிக்கம் விராகன் எடை ஒன்று, இவைகளைச் சூரணித்து தாழைவிழுதுச் சாறுபடி இரண்டு, சிறுகீரை, பொன்னுங்கண்ணி, வெற்றிலே, முடக்கத்தான், கற்ருழை வேர், வட்டச்சாரணை, சிதாச்செங்கழுநீர், நீர்வள்ளிக் கிழங்குச்சாறு இவை வகைக்குப் படி இரண்டு, எலுமிச்சம் பழச்சாறு, இளநீர் இவைவகைக்குப்படி இரண்டு, நெல்லிக்காய்ச்சாறு பசுவின்பால், நல்லெண்ணெய் இவை வகைக்குப்படி மூன்று, இவைகளைக் கலந்து இரண்டு நாள் சூரியபுடம் வைத்து மூன்ரும் நாள் மேற்படிச் சூரண வகைகளைச் சேர்த்து மெழுகு பதமாய்க் காய்ச்சி வடித்து நாலுநாளைக்கொருதரம் முழுகிவர நேத்திரவாயு முதலியவைகள் தீரும். கைகண்டது. பத்தியம் : புளி, உப்பு நீக்கவும்.

### வாதம் 80க்கு

கோரைக்கிழங்கு வேர் பலம் 8, செங்கத்தாரிப் பட்டை பலம் 8, நிலஆவரை வேர் பலம் 4, கொட்டைக் கரந்தை பலம் 4, சித்தாமுட்டி வேர் பலம் 20, அமுக்கராங் கிழங்கு பலம் 4, பூமிச்சக்கரைக் கிழங்கு பலம் 4, தண்ணீர்விட்டான் கிழங்கு பலம் 4, மருள்மஞ்சிக் கிழங்கு பலம் 4, இவைகளை நறுக்கி இடித்து 16 வள்ளந் தண்ணீர்விட்டு நாழியாகக் காய்ச்சிய தில்நெல்லிப்பருப்புப்பலம் 8, கோட்டம்பலம் 1, இலவங்கப்பட்டை பலம் 1, வாயு விளங்கம் பலம் 1, செண்பக வரும்பு பலம் 4, சந்தனக்கட்டை பலம் 4, அரத்தை பலம் 4, அதிமதுரம் பலம் 1,

கடுகுரோகணி விராகன் எடை 5, மணத்தக்காளி விதை பலம் 5, மஞ்சள் பலம் 1, மரமஞ்சள் பலம் 1, கொடிவேலி பலம் 5, திப்பிலி மூலம் பலம் 1, வசம்பு பலம் 5, சாதிப் பத்திரி விராகன் எடை 5, விளாமிச்சம் வேர் பலம் 1, சிறுதேக்குப் பலம் 1, மஞ்சிட்டி வராகன் எடை 5, காட் டாத்திப்பூ விராகன் எடை 5, ஏலம், கிராம்பு, இலவங்கப்பத்திரி சிறுநாகப்பூ இவை வகைக்கு விராகன் எடை 5, கஸ்தூரிமஞ்சள் பலம் 1, மலைக்கஸ்தூரி மஞ்சள் விராகன் எடை 5, சீரகம் விரா கன் எடை 5, கருஞ்சீரகம் விரர்கன் எடை 5, சடாமாஞ்சி விரா கன் எடை 5, செவியம் பலம் ஒன்று இவைகளைச் சூரணித்து நொச்சியிலைச்சாறு படி 2, கொட்டைக் கரந்தைச்சாறு படி 1 கையாந்தகரை, முசுமுசுமுக்கை, பேய்ப்பீர்க்கு, பேய்ப்புடல், வாத மடக்கி, கற்றுழை, பொன்னுங்கண்ணி இவற்றின்சாறு வகைக்குப் படி ஒன்று, பசுவின்பால் படி 4, நெல்லிப்பருப்புக் கிழாயம் படி 2 கருப்பட்டிப் பலம் இருபதுஆக இவைகளையும் சேர்த்து எண் ணெய் படி 4, சேர்த்துப் பொங்கக் காய்ச்சி ஷை சூரணங்களையும் கூட் டி3 நாள் மந்தாக்கினியாய் எரித்து நான்காம் நாள் தீபாக் கினியாயெரித்து வடித்து 12 நாள் தானியபுடம் வைத்தெடுத்து தலை முழுகியும் நசியமிட்டும்வர மந்தவாதம், தனுர்வாதம், சிரோ வாய்வு விப்புருதி, சூசிக வாயு, மண்டைப்பீனசம் இவைகள் தீரும்.

## சன்னி நாயகன்

வேப்பம் விதை படி இரண்டு, பால் படி ஒன்று, வசம்பு விரா கன் எடை நாலரை, சதகுப்பை விராகன் எடை ஐந்து, அரத்தை பலமிரண்டு, கோரோசனை விராகன் எடை 2, குங்குமப்பூ பலம் இரண்டு, நில வேம்பு விராகன் எடை 5, நாகப்பூ விராகன் எடை ஒன்றரை, எருக்கம் பலமிரண்டு, தேவதாரம் விராகன் எடை 5, பச்சப்பாம்புக்கண்டம் பலம் இரண்டு, கடுகுரோகணி விராகன் எடை ஐந்து, வட்டத்திருப்பி விராகன் எடை 5, ஊசிமல்லிகை வேர் விராகன் எடை 5, கடுக்காய விராகன் எடை 5, இவைகளைப் பொடித்து நல்லெண்ணெய் ஒருபடி, வேப்பெண்ணெய நாழி ஒன்று, ஆடாதோடைச்சாறு நாழி ஒன்று இவைகளைக் கலந்தி விட்டுக் கடுகு பதமாய்க் காய்ச்சி துவளையிட்டுப் பிடிக்கத் தீரும்.

வேறு:—ஊர்க்குருவி பத்துக் கொண்டுவந்து சிறகு, குடல், கால் முதலியவைகளை நீக்கி இருபது குறுணி தண்ணீரிலிட்டு இருநாழியாகக் காய்ச்சி அதில் எலுமிச்சம் பழச்சாறு, கையாந்த

கரைச்சாறு, முலைப்பால், இவை வகைக்குப் படி ஒன்று, மனத்தக்காளி, கச்சந்திரா இவற்றின் சாறு வகைக்குப்படி இரண்டு, வட்டத்திருப்பி, பந்தில் தண்டு, நொச்சி, நன்னாரி, ஆடாதோடை இவைகளின் சாறு வகைக்குப்படி ஒன்று, நல்ல கிராம்பு பலம் ஐந்து, நாங்கூழ்ப் புழு பலம் ஒன்று, வெள்ளுள்ளி பலம் இரண்டு, பேய்மிரட்டி வேர், தேவதாரம் வேர் இவை வகைக்குப் பலமிரண்டு மாடப்புறுவினெச்சம், முசுறுமுட்டை இவை வகைக்குப் பலம் இரண்டு, நல்லெண்ணெய், வேப்பெண்ணெய், புங்கெண்ணெய், விளக்கெண்ணெய், பசுவின் நெய் இவை வகைக்குப்படி முக்கால் இவைகளைச்சேர்த்து, மந்தாக்கினியாய் எரித்து, பதத்தில் வடித்து, துவளையிட்டுப் பிடிக்கவும். பல் கிட்டியிருந்தால், வாய், உதடு, நாசி, மூக்கு, உச்சந்தலை முதலிய விடங்களிலிடவும். சகல சன்னியுந்திரும்.

## பிரசாரிணித் தைலம்

முதியார் கூந்தல் சமூலம் பலம் 100, பெருவாகை, குமிழ், பாதிரி, முன்னை, வில்வம், சிறுமல்லி, பெருமல்லி, சிறுவழுதலை, கண்டங்கத்திரி, நெருஞ்சி, சித்திரமூலம், சிற்றுமுட்டி, பேராமுட்டி, நீர்முள்ளி, புன்னைல் முருங்கை, சாரணை, சத்திச்சாரணை, சிற்றுமணக்கு, பேராமணக்கு, சிறுகுறிஞ்சான், வீழி, விடத்தேர், தழுதாழை, எட்டி, அழிஞ்சி, காரீண்டு, செம்புளிச்சை, கொன்றை நிலவுக்காய் பருத்தி, (இலவு), நீர்முள்ளி, சதுரக்கள்ளி, செங்கொட்டை, புங்கு, இவைகளின் வேரும்; ஆயில்பட்டை, வேப்பாலைப்பட்டை, கருங்காலிப்பட்டை, தூதுவளைச் சமூலம், சணப்பம் விதை, ஏறழிஞ்சிவிதை, கொத்துமல்லி வகைக்கு, ஒவ்வொன்றும் பலம்பத்து, கொண்டு இடித்ததில் இரண்டு தூணி நீர்விட்டு, பதக்காகக் காய்ச்சி, வெள்ளாட்டு இறைச்சிக் கஷாயம் பதக்கும் பசுநீர், நல்லெண்ணெய், இவை வகைக்குப்படி நாலும்கூட்டிச் சேர்த்து, முத்தக்காசு, கஸ்தூரி, மஞ்சள், தேவதாரம், நாணல்வேர், தகரம்,குங்குமப்பட்டை, குக்கில்,காரகில், கடுகு, சிற்றுமுட்டி வேர், அரத்தை, கோட்டம், சாதிக்காய், அரேணுகம், வசம்பு, வாயுவிளங்கம், கடுகுரோகணி, நன்னாரிவேர், பெருமரப்பட்டை, தான்றிக்காய், அவுரி வேர், சிற்றரத்தை, ஏலம், லவங்கப்பட்டை, சிறுநாகப்பூ, துத்தம், துருசு, தக்கோல், இவை வகைக்குப் பலம் ஒன்றாகக் கொண்டு, அதை ஷை கஷாயத்தா லரைத்துக்கூட்டி பதமாய்க் காய்ச்சி உடல் முழுமையும் பூசிப்பிடிக்க, குமரகண்டன், உன்மாதம், விப்புருதி, மெள்ளநடமாடுகிற வாதம் முதலிய சகல வாதமும் தீரும். சரீரம் பெருக்கும். பலமுண்டாகும்.

## கந்தக சுத்தி

கந்தகத்தைப் பாலிலிட்டுக் கரையக் காய்ச்சி ஆறவைத்து, புரையூத்தித் தயிராகிய பின் கடைந்து, இருத்துவிட்டுக் கந்தகத்தை எடுத்துலர்த்தி ஒரு சட்டியில் குமரிச்சாறு அரைச்சட்டிக்கு விட்டு வேடுகட்டி வேட்டின் மேல் மேற்படிக் கந்தகத்தை வைத்து மேற்சட்டிமூடி சந்துவாய்க்குச் சீலை மண் வலுவாய்ச் செய்து, அடிச்சட்டியைக் குழியிற் புதைத்து, மேற்சட்டிச் சுற்றிலும் எரு வடுக்கியெரிக்க அக்கந்தகம் உருகி, கீழ் சட்டியிலிறங்கி யிருக்கும் இப்படியே இலைக்கள்ளிச் சாறு, எருக்கஞ் சாறு, மோர், காடி ஆட்டு மூத்திரம், பால், இவைகளில் செய்தால் சுத்தியாகும். நாற்றமிராது. அவரைக்கொட்டை அளவு சர்க்கரையிற், கொடுக்கச், சிரங்கு, திமிரம், உப்பிசம், சூலை, முதலிய நோய்கள் தீரும்.

## அழிஞ்சித் தைலம்

அழிஞ்சிப்பட்டை பலம் 16, நொச்சிவேர், காட்டுமுருங்கை வேர், தழுதாழை வேர், மாவிலிங்கம் வேர், விடதாரி வேர், கழற்சி வேர், செம்புளிச்சை வேர், புங்கம்வேர், முற்றின வேப்பம் வேர், சாரணை வேர், பேருமுட்டி வேர், அமுக்கரான் வேர், செம்முள்ளி வேர் வகைக்குப் பலம் நான்கு, இவைகளை யிடித்து; 12 வள்ளம் தண்ணீரிலிட்டு, மூன்று வள்ளமாகக் காய்ச்சி அதில், பொன்னுங்கண்ணிச் சாறு, புங்கிலைச்சாறு, தண்ணீர்விட்டான் கிழங்குச் சாறு, மஞ்சட்கிழங்குச் சாறு இவை வகைக்குப் படி ஒன்றுசேர்த்து அதில், பலம் 2 மணத்தக்காளி விதை, மஞ்சள், மரமஞ்சள், வாயுவிளங்கம், கொடிவேலிப் பட்டை, திப்பிலி மூலம் வசம்பு, விளாமிச்சம்வேர், சிறுதேக்கு, மஞ்சிட்டி, ஏலம், லவங்கப் பத்திரி, சிறுநாகப்பூ, கஸ்தூரி மஞ்சள், மலைக்கஸ்தூரி மஞ்சள், சீரகம், கருஞ்சீரகம், அதிமதுரம, சடாமாஞ்சி, அரத்தை, செவியம், கடுகுரோகணி, சாதிக்காய், சாதிப்பத்திரி, கிராம்பு, சந்தனக் கட்டை, நன்னாரிவேர், கோரோசனை, இவை வகைக்கு விராகன் எடை 5 இவைகளைப் பொடித்து மேற்படிக் கஷாயத்திலரைத்துக் கூட்டி நல்லெண்ணெய் படி 1½, வேப்பெண்ணெய், புங்கெண்ணெய், இலுப்பெண்ணெய், நல்ல வெங்காயத் தைலம் இவை வகைக்குப்படி இரண்டு, பசுவின்பால்படி இரண்டு, இவைகளைக் கலந்து மூன்றுநாள் மந்தாக்கினியாயெரித்து, நான்காம் நாள் வடித்துக் கொள்ளவும். ஒரு காசியெடை பொரிமாவில் சாப்பிட்டு, நசியமிட்டு முழுகிவர, ஒருபுறம அசந்து வாதம், சருவவாதம்,

சிலேட்டுமம், விப்புருதி, சூரிய வாயு, பீனிசம் முதலிய பல நோய்கள் தீரும்.

## பவுத்திரத்துக்கு

சோமநாதப் பெருங்காயம், கோரோசனை, இந்துப்பு, திப்பிலி, ஜாதிக்காய், கிராம்பு இவை வகைக்கு ஒரு விராகன் எடை, சித்திரமூல வேர்ப்பட்டை, செங்கத்தரி வேர்ப்பட்டை, வகைக்கு விராகன்எடை இரண்டு, இவைகளை யரைத்து, 3 படி நல்லெண்ணெயிற் கலக்கிக் காய்ச்சிச் சிவந்த பதத்தில் வடித்துக் கொண்டு, அரைக்கால்படி எண்ணெய் வீதம் அரைமண்டலங் கொள்ள ஆணிவிழுந்த பவுத்திரம் தீரும். புண்ணுக்கு ஆவாரங் கொழுந்துவைத்துக் கட்டவும். நான்குவகைப் பவுத்திரமும் தீரும். கைகண்டது.

## பிள்ளை தரிக்க

தோடவி ழுமுதவள்ளி யுரையுடன் பிரமிபாகல்
நீடிய் குறிஞ்சிச்சாறு நேரிய கழற்கொடியும்
கூடிய விவையனைத்தும் குளித்தநாள் குடிப்பாளாகில்
பேடிக்கும் பிள்ளையுண்டாம் பெண்மையு மிளையார்பாரே.

[பொ-ள்-சீந்திற்கொடி, பிரமி, பர்கல், குறிஞ்சான், கழற்கொடி இவை கூட்டி, முறைப்படிக் குடிநீராக்கிச் சூதகத்தின் மூன்றும் நாளில் குளித்தபின் குடிக்கில் பிள்ளை தரிக்கும்]

வேறு :—வாழையிலையைச்சுட்டசாம்பல், ஏழுமிளகு, ஏழு முருங்கைப்பூ, வெள்ளைவெங்காயம், வசம்பு இவைகளை எச்சல் விட்டு அரைத்து உள்ளுக்குக் கொடுத்து, மேலுக்கும் துவளை யிடவும்.

வேறு :—வாய் பேசாமல் துளசிச்செடியை வலதுகையுள்ளாகச் சுற்றிவந்து சூரியன் எதிரே நின்று, மூன்று இலை பறித்துப் போட்டு ஒருபிடி இலைபறித்து இள எறும்பு, முருங்கைப்பிஞ்சு, மிளகு, வெள்ளைவெங்காயம் இவைகளைக் கூட்டியரைத்து இள வெந்நீரில் கலக்கிக் கொடுத்து மேனியிலும் பூசவும். கைகண்டது.

## வயிற்றுக்கடுப்புக்கு

சீரகத்தை வறுத்துப் பொடித்து சரிசீனிச்சர்க்கரைக் கலந்து சிற்றுமணக்கெண்ணெயிலாகிலும், பசுவின் நெய்யிலாகிலும் சாப்பிடத் தீரும்.

## சுரத்தின்பேரில் கண்ட விஷபாக வீக்கத்திற்கு

சிற்றவரைக்கிழங்கு, சத்திச்சாரணைக் கிழங்கு, குறட்டைக் கிழங்கு, நன்னாரிவேர், நறுமுன்னைவேர், பெருந்துத்திவேர், அழிஞ்சிவேர்ப்பட்டை, அவுரி வேர்ப்பட்டை, வட்டக்கிலுகிலுப்பைவேர், முடக்கத்தான் வேர், வேலிப்பருத்தி வேர், இவை வகைக்குப் பலம் ஒன்று; முருக்கிலை, செம்முள்ளியிலை, இண்டிலை, சங்கிலை, சிறுவழுதலையிலை, தூதுவளையிலை, கையாந்தகரையிலை, செருப்படியிலை, சங்கிலை, சிறுஇலை, ஊமத்தை, கழற்சி, நரியுடைவேர், இவைவகைக்கு ஒருபிடி; வெள்ளைவெங்காயப் பருப்பு படி ஒன்று இவைகளையிடித்து மூன்றுபடி யெண்ணெயில் இட்டுக் காய்ச்சி வடித்து உள்ளுக்குக் கொடுத்து நாசி, செவி, உடல் முழுமையும் பூசத் தீரும்.

## வாதசன்னிக்கு

மயிலடிக்குறுத்து, பெருங்குறுத்து, எருமைமுன்னை, வில்வவேர், கற்றடி நாயகன், சங்கங்குப்பி, நொச்சி, முக்காவேளை, எருக்கு இவை வகைக்கு கழஞ்சு இரண்டு; உள்ளி, வசம்பு, கொத்துமல்லி, கருஞ்சீரகம், வெளிச்சிப்பிசின், இவை வகைக்கு கழஞ்சு மூன்று கொண்டு அரைத்து, வேப்பெண்ணெய், நல்லெண்ணெய், இலுப்பெண்ணெய் இவைகள் வகைக்குப்படிஒன்று கூட்டி பதமாய்க்காய்ச்சி வடித்து காசியெடையுள்ளுக்குக் கொடுத்து உச்சி, நாசி, செவி, கழுத்து, உள்ளங்கால் முதலியவிடங்களில் தேய்த்துப்பிடிக்க ஒரு நாளிற்றீரும்.

## விஷபாகவீக்கத்திற்கு

விளக்கெண்ணெய், கழுதைலத்திச் சாறு, நீர்முள்ளிச் சாறு, ஆடாதோடையிலைச்சாறு, நாரத்தையிலைச் சாறு, பருத்தியிலைச் சாறு, மணத்தக்காளியிலைச் சாறு, வெள்ளறுகுச் சாறு, நல்லறுகுச் சாறு இவை வகைக்குப்படி ஒன்று; கழுதைப்பால் படி இரண்டு-இவைகளைக்கலந்ததில் உள்ளி, வசம்பு ஒவ்வொரு கழஞ்சாகக்கூட்டி யேற்படிச் சாறு விட்டு அரைத்து நல்லெண்ணெய் படிஒன்று சேர்த்துப், பதமாய்க் காய்ச்சி வடித்து, உள்ளுக்குக் கொடுத்து, மேலிலும் துவளையிட, விஷபாகசுரவீக்கந் தீரும்.

## கற்பவிப்புருதிக்கு

கடுக்காய், மஞ்சள், இந்துப்பு, கடுகு, வெள்ளுள்ளி, வெங்காரம் வகைக்கு விராகன் எடை ஐந்து; வீழிவேர், காட்டாமணக்கின்வேர், நிலவாகைவேர், வகைக்குப் பலமிரண்டு

இவைகளை இடித்து எட்டுபடி நீர் விட்டு, ஒருபடியாய்க் காய்ச்சி மேற்படி மருந்துகளையும் அரைத்துக் கூட்டியதில் ஒருபடி ஆமணக்கெண்ணெயும், உழக்குக் கள்ளிப்பாலும் கலந்து பதமாய்க் காய்ச்சி வடித்துக் கழஞ்சியெடை உட்கொள்ள கற்பவிப்புருதி, வயிற்று நோய்கள், சீதக்கட்டு இவைகள் தீரும். புளி, புகை நீக்கவும்.

### மேகத்துக்கு

நிலப்பனைக்கிழங்கு, பூமிச்சர்க்கரைக்கிழங்கு, நல்ல நெருஞ்சி சமூலம், ஆலம்விழுது, செருப்படை சமூலம், சீந்திற்றண்டுவேர், கோரைக்கிழங்கு, இவை வகைக்குப் பலம் ஒன்று; கழற்சிவேர் பலம் இரண்டு; ஏலம், சீரகம் இவை வகைக்கு விராகன் எடை மூன்று; வெங்காயம் பலம் ஒன்று; வெள்ளாட்டுப்பால் படி ஒன்று பசுவின்நெய் படி ஒன்றரை; செருப்படையிலைச்சாறு படி இரண்டு. இவற்றில் மருந்துகளைப் பால் விட்டரைத்துக் கலக்கி வடிகட்டி நெய் விட்டுக் கொதிக்கிற சமயத்தில், எல்லாம் பொடித்து பாலில் அரைத்ததையும் போட்டு ஒரு கொதியானபின், சீரகமும் ஏலமும் பொடித்துப் போட்டு, மூன்று கொதியான பிறகு விநாயக பூசை செய்து வடித்து, அந்தி சந்தி இருநேரமும் ஒரு கரண்டியளவு 12 நாளைக்குக் கொள்ளவும். கைப்பு புளிநீக்கவும். நாலு நாளைக்கு ஒரு முறை விளக்கெண்ணெயிட்டு முழுகவும்.

### கண்டங்கத்திரி நெய்

கண்டங்கத்திரி சமூலம் பலம் 50 இடித்துத் தூணிநீர் விட்டுக் குருணியாகக்காய்ச்சி, பசுவின் நெய் படி 2, அரத்தை, காஞ்சொறிவேர், வசம்பு, திப்பிலி, யானைத்திப்பிலி, கொடிவேலிவேர், காய்ச்சுப்பு, எவாச்சாரம், திப்பிலிமூலம் வகைக்கு விராகன் எடை இரண்டுகொண்டு இடித்து மேற்படிக் குடிநீரால் அரைத்து, சேர்த்துக்காய்ச்சி பதத்தில் வடித்து, கரண்டியளவு சாப்பிட, ஏங்கல், இருமல், காசம், விக்கல், அரோசகம், பீனசம் இவைகள் தீரும்.

### ஆடாதோடை நெய்

ஆடாதோடைச்சாறு படி 2, பசுவின் பால் படி 1, இந்துப்பு, சுக்கு, கொடுவேலிவேர், எவாச்சாரம், கடுக்காய், தான்றிக்காய், நெல்லிப்பருப்பு, இவை வகைக்கு விராகன் எடை இரண்டு; இவைகளை யரைத்துச்சேர்த்துக் காய்ச்சி பதத்தில் வடித்துக் கரண்டி

யளவு கொள்ள, காசம், சுவாசம், அருசி, பித்தப் பாண்டு, மூலம் எல்லாந்தீரும்.

## தூதுவளை நெய்

தூதுவளை, ஆடாதோடை, கையாந்தகரை, சந்தனக்கட்டை, கண்டங்கத்திரி, பொடுதலை, சாரணைவேர், நொச்சி, கீழாநெல்லி, பிரமி, சிற்றுமுட்டிவேர், இவை வகைக்குப் பலம் மூன்று கொண்டு இடித்துத், தூணி நீர் விட்டுக் குறுணியாகக் காய்ச்சி, அதில் நெய் படி 2, கண்டு பாறங்கி, திப்பிலிமூலம், சுக்கு, வசம்பு, கொடிவேலிவேர், குடசப்பாலையரிசி, ஆனைத்திப்பிலி, கடுகு, செவியம், இலந்தைக் கொட்டை, அரேணுகம், வாய்விளங்கம், அதிவிடயம், ஏலம், நிலவேம்பு, சதகுப்பை, பெருங்காயம் இவை வகைக்கு விராகன் எடை இரண்டு எடுத்து மேற்படிக் குடிநீரிட்டரைத்து, உரிவேப்பெண்ணெய் சேர்த்துப் பதமாய்க் காய்ச்சி வடித்து காசம், சுவாசம். குன்மம், மகோதரம், பிரமியம், இருமல், அருசி, பீனிசம் முதலிய நோய்களைப் போக்க ஒரு உச்சிக்கரண்டி அளவு கொடுக்கவும். புளி, புகை ஆகாது. இச்சாபத்தியம்.

## நாயுருவி நெய்

நாயுருவி சமூலம் பலம் 50, இடித்துத் தூணி நீரிலிட்டு எட்டொன்றாக்கி யதில் நெய் படி 2, கொடிவேலிவேர், சுக்கு, திப்பிலி, மிளகு, சுத்தித்தநேர்வாளம், சிவதைவேர், இந்துப்பு வட்டத்திருப்பி, புங்கம்வேர், ஆவரைவேர், பிரண்டைவேர், காட்டுக்கருணைக்கிழங்கு, புளிநறணைக்கிழங்கு, மருள்கிழங்கு, கடுகு, வெண்கடுகு இவை வகைக்கு விராகன் எடை ஒன்றாக வெள்ளாட்டுப்பால் படி 2, வெள்ளாட்டு நெய் படி 1. இவற்றை யரைத்து சேர்த்துக்காய்ச்சி பதத்தில் வடித்து உட்கொள்ள மூலம் 6-ம் தீரும். புளி, புகை நீக்கவும்.

## புளியாரை நெய்

புளியாரைச்சாறு படி 2-ல் முத்தக்காசு படி 1 இடித்துக் கூட்டிக் காய்ச்சி ஒருபடியாகும்போது வடித்து நெய் படி 1 சேர்த்து அதில் காட்டாத்திப் பூ, கோட்டம், சந்தனம், திப்பிலி, விடயம், வெள்ளிலோத்திரம், செவியம், கொடிவேலிவேர், குடசப் பாலைவேர், மரமஞ்சள், தேவதாரம், வட்டத்திருப்பி, வில்வக்காய், நெய்தற்கிழங்கு, இவைகளை வகைக்குப் பலமாகக் கொண்டு அரைத்திட்டு, பதமாய்க்காய்ச்சி வடித்து, உள்ளுக்குக் கொடுக்க குன்மம், கிராணி தீரும்.

### இரத்தப்பீனசத்துக்கு

ஈர வெங்காயம் பலம் 1, பழம்புளிஎலுமிச்சங்காயளவு, கழுதை லத்தி விளாங்காய் அளவு எடுத்துச் சுட்ட சாம்பல் ஒரு கொட்டைப் பாக்களவு, வெள்ளைவெங்காயம், வசம்பு இவைவகைக்குப் பலம் ¼ இவைகளையிடித்துத்தலையில் நாலு நாழி நேரம் நன்ருய்த் தேய்த்து, தலை நிறைய மருந்தைவைத்து அப்பிக்கட்டி பின்பெடுத்து, நாசியில் பிழியவும். மூன்று நாளைக்குப்பின் தலை முழுகவும். பத்தியம் :—பாலுஞ்சோறும்.

### மேகவெட்டை, அத்திசுரம் இவைகளுக்கு

கோதுமை மாவு பலம் 3, கற்ருழஞ்சோறு பலம் 3, பசுவின் நெய் படி 1, கிராம்பு, ஜாதிக்காய், ஏலம், நற்சீரகம், இவை வகைக்கு விராகன் எடை 6, இவற்றில் கற்ருழஞ் சோற்றைச் சட்டியிலிட்டு சிவக்க வெந்தபின்பு நெய்யைவிட்டுப் பாகு போலான பின்பு கோதுமை மாவை போட்டுக் குழம்பானபின் கிராம்பு முதலிய வைகளைப் பொடித்திட்டுச் சீனிச்சர்க்கரை ஒரு பலம் போட்டுப் பாகுபதமாகக் கிண்டிச் சாப்பிடவும். கற்ருழஞ் சோற்றை நன்ருய்க்கழுவிச் சேர்க்கவும். பத்தியம் காக்கவும்.

### வாயில் இரத்தம் விழுவதற்கு

பருத்தி விதைத்தூள், வெள்ளாட்டுப்பால், வாழைப்பூச் சாறு, தேன், ஈரவெங்காயச் சாறு, கோழிமுட்டையின் வெண் கரு இவைகளை நன்ருய்க் கலந்து மூன்று நாள் கொடுக்கவும்.

வேறு :—இலவம்பட்டையை இடித்துத் தேன், சர்க்கரை கூட்டிக் கொடுக்கவும்.

### வாந்திக்கு

(1) ஏலம், எலுமிச்சம் பழவிதை, வெற்றிலைக் காம்பு இவைகளை எலுமிச்சம்பழச் சாற்றில் அரைத்துக் குழைத்து நாவில் தடவவும்.

(2) முள்ளிவேர்ப்பட்டை, சாரணைக்கிழங்கு, மிளகு, ஓமம், மஞ்சள், நெற்பொரி இவைகளை யரைத்து எருமைமோரிலிட்டுக் காய்ச்சி மூன்றுநாள் கொடுக்கவும்.

### நீரடைப்பிற்கு

சிறுசெந்தொட்டி வேர், நிலையாவரைவேர், கொடிவேலி வேர், பிரண்டை வேர், மருள் கிழங்கு இவை வகைக்குப் பலம்

ஒன்றை இரண்டுபடி கருங்குருவை அரிசிமாவுடன் சேர்த்து இடித்துக் களிக்கிண்டி, கருப்புக்கட்டியும் நெய்யும் சேர்த்து நோய்க்குத்தக்கபடி அளவிட்டு, நாலு நாள் சாப்பிட நீரடைப்புத் தீரும்.

## தூதுவளைப்பூ லேகியம்

தூதுவளைப்பூ, முருங்கைப்பூ இவை வகைக்குப் பலம் நான்கு, தண்ணீர்விட்டான் கிழங்கு பலம் மூன்று, நெருஞ்சிவேர் பலம் ஒன்று, பூனைக்காலிவேர் பலம் ஒன்று, அதிமதுரம் பலமிரண்டு இவைகளைச் சூரணித்துப் பசுவின்பால் பதக்கு ஒன்றைக் குழம்பாய்க் காய்ச்சியதில் ஷை சூரணத்தைத் தூவிக்கிண்டி பசுவின் நெய்யும் சர்க்கரையும்போட்டுக் குழம்புப்பதமாய்க்கிண்டி எடுத்து கொட்டைப் பாக்குப் பிரமாணம் காலை மாலை சாப்பிட பிரமியம், பெரும்பாடு, எலும்புருக்கி இவைகள் தீரும். உடல் வன்மை பெறும்.

## நீரடைப்புக்கு

பலகறைச் சுட்டசாம்பல், வெங்காரப் பொரி, நாயுருவிச் சாம்பல், இவைகளை ஓர் அளவாகக் கூட்டி எலுமிச்சம்பழச்சாறும் தேங்காய்ப் பாலும் சரிகூட்டி யரைத்துக் கலக்கி மூன்றுநாள் சாப்பிட மூத்திரக்கிரீச்சரம், நீர் அடைப்பு, நீர்க்கட்டு, கல்லடைப்பு, சதையடைப்பு இவை தீரும்.

## மதுகபூஷண வாதக் குளிகை

திப்பிலி கழஞ்சு ஒன்று, சுத்திசெய்த நேர்வாளம் கழஞ்சு இரண்டு, செங்கழுநீர்க் கோட்டம் கழஞ்சு மூன்று, கடுகுரோகிணி கழஞ்சு நான்கு, மஞ்ஞேசிலை கழஞ்சு ஐந்து இவைகளைச் சூரணித்து மூன்றுபடி இலுப்பைப்பூவில் ஆறுபடித் தண்ணீர்விட்டு உரியளவாகக் காய்ச்சி வடித்து மேற்படிச் சூரணத்தில் விட்டரைத்து இரண்டு குன்றுமணிப் பிரமாணம் குளிகைசெய்து நிழலிலுலர்த்திக் கொள்ளவும். முலைப்பாலில் அல்லது புழுக்கின இளநீரில் இரண்டு குளிகை யுரைத்து சர்க்கரைப்பொடி போட்டுச் சாப்பிட, பித்தச் சுரம், சன்னிவாதச் சுரம் இவைகள் தீரும்.

## அமுதாதிக் குளிகை

ஏலம், லவங்கம், அதிமதுரம், செங்கழுநீர்க்கிழங்கு, கோரோசனை, ஓரிலைத் தாமரை, காசுக்கட்டி, பற்படாகம், சந்தனம் இவை வகைக்குக் கழஞ்சிரண்டு கொண்டு இளநீர் விட்டரை

த்துக் குன்றி மணி யளவு குளிகைசெய்து நிழலிலுலர்த்தி, இள நீரில் சர்க்கரைப் பொடியிட்டுக் குளிகை ஒன்றைக் கூட்டிக் கொடுக்க, தாகசுரம், நாவறட்சி இவை தீரும். நாவறட்சிக்குக் கொத்தமல்லி, சுக்கு, பூசணித்தண்டு இவைகளையிடித்து இரண்டு படி நீரிலிட்டு உழக்காய்க் காய்ச்சிக் கொடுக்கவும்.

பத்தியம் :—பொரிகஞ்சி கொடுக்கவும்.

## சீதபஞ்சசரக்குளிகை

நொச்சிக்கொழுந்து, வேப்பங்கொழுந்து, நெல்லிக்காய், கந்தகம், அரிதாரம், மிளகு, இந்துப்பு இவை வகைக்குக் கழஞ்சு ஒன்று, கல்வத்திட்டு, பசுவின் பாலிலரைத்துக் குன்றி மணியளவு குளிகைசெய்து உலர்த்தி, புழுக்கிய இளநீர், தேன், முலைப்பால் இவைகளில் ஒன்றில் கொடுக்கத் தாகச்சுரமும், இஞ்சிச் சாற்றில் கொடுக்கச் சீதசுரமும் தீரும்.

## வீரபத்திரக் குளிகை

எலிப்பாஷாணத்தை 21 நாள் எருக்கம்பாலில் வெய்யிலிலுலரவைத்து எடுத்துஅதில் இரண்டு விராகன்எடை சாதிலிங்கம், கந்தகம் இவை வகைக்குக் கழஞ்சு ஒன்று கூட்டி இஞ்சிச்சாற்றிலரைத்து, உழுந்தளவு குளிகை செய்து வெய்யிலிலுலர்த்தி, தேனையும் முலைப்பாலையுங் கலந்ததில் திப்பிலிச் சூரணம் கலந்தாவது, தேனில் திப்பிலிப்பொடி சேர்த்தாவது ஒரு குளிகையைக் கொடுத்து சிறிது முலைப்பாலும் கொடுக்கச் சுரம் தீரும்.

பத்தியம் :—கொள்ளு, பயிறு, துவரை, அரிசி இவைகளை வறுத்துக் கஞ்சிகாய்ச்சிக் கொடுக்கவும்.

இதற்குக் குடிநீர்:—பெருவாகை வேர், பெருங்குமிழம் வேர், சிற்றுமல்லி வேர், முன்னைவேர், கண்டங்கத்திரி வேர், பேருமுட்டிவேர், நெருஞ்சிவேர், ஆடாதோடை வேர், இவைகளை நறுக்கி இடித்து, இருநாழி நீரிலிட்டு உழக்காய்க்காய்ச்சி அதில் மேற்படிக் குளிகை ஒன்றைக் கரைத்துத் திப்பிலிப் பொடித்தூவி இரவிற்கொடுக்கச் சகல சன்னியுந் தீரும்.

## ஜலக்கழிச்சல் 24 வகைக்கு

அறுகு, சிறுபூளை, கொடுப்பை, கையாந்தகரை, கீழாநெல்லி, முடக்கொத்தான், நாயுருவி, (தறுகூடிவள்ளி) தலைசுருளி, (கருப்

பில்லை) கறிவேப்பிலை, ஊமத்தை, சிற்றுமணக்கு, கச்சநாரத்தை, எலுமிச்சை, பாகல், முசுமுசுக்கை, சுரை, பூசனி இவைகளினிலைச் சாறு வகைக்குப் பலம் ஒன்று வாங்கி அதில் சிற்றுமணக்கு, நாரத்தை, எலுமிச்சை, குறுந்தோட்டி, எருக்கு, இலாமிச்சை, வெள்ளி, சுரைபூசனி இவைகளின்வேர் பலம் ஒன்று, வள்ளிக் கிழங்கு, இலுப்பை, அத்தி, அரசு, வேம்பு இவைகளின் பட்டை வகைக்குப் பலம் ஒன்று இவைகளை இடித்து நாழிநீர்விட்டு மூன்றுநாள் ஊறவைத்து 3-நாள் காடாக்கினியாய் எரியிட்டு நாழி யான பின்பு இறக்கியதில் ஆலம்முகிழ், அதிமதுரம், சந்தனம், சீரகம், கார்போகவரிசி, விளாவரிசி, வெங்காரம், சுக்கு, மிளகு, வாலுளுவை, ஜவ்வரிசி, ஓமம், சதகுப்பை, கெந்தகம், சாத்திர பேதி, கல்காறு, பெருங்காயம் இவை வகைக்குப் பலம் ஒன்றை அரைத்து நல்லெண்ணெய், பசுவின் நெய் இவை வகைக்குப் படி ஒன்றுகூட்டி முன் சொன்னவைகளை எல்லாம் சேர்த்து, மறு நாள் மெழுகு பதத்தில் காய்ச்சி வடித்து, நாலுநாளைக்கு ஒருதர மாக நாள்தோறும் உடல் முழுமையும் காலையில் பூசி மாலையில் எருமைச்சாணம் தேய்த்து வெந்நீரில் குளிக்கவும். இந்தத் தைலப்பானையை ஞாயிற்றுக்கிழமை சூரியன் முன்வைத்துப் பூஜித்து எடுத்துவைக்கவும். கைகண்டது.

## கருவங்கச் செந்தூரம்

அடிகனத்தச் சட்டியில் காரீயத்தைப் போட்டுருக்கி ஆவரை வேருலர்த்தி இடித்தச் சூரணத்தைப்போட்டு வறுக்கவும். அவ் வாறே ஆவரைப் பருப்பு உலர்த்திப் பொடித்தச் சூரணத்திலும், வெங்காயம் போட்டு வறுத்தும், அரும்புச் சூரணம்போட்டு வறுத் தும் எடுக்கச் செந்தூரமாகும். இச்செந்தூரத்தில் ஒரு குன்றிமணி யெடையுடன் ஆவரை சமூலம், ஆத்திமேல் புல்லுருவி, விளாம் பிசின், இம்மூன்றின் சூரணம் சரிகூட்டி அதில் சேர்த்துப் பேயன் வாழைப்பழம், தேன், சர்க்கரை இவைகளிலொன்றில் ஏழுநாள் கொள்ளவும். அல்லது ஆவரைசமூலம் குழித்தைல மிறக்கியதிலாவது இச்செந்தூரத்தைக் கொள்ளலாம். இதனல், மேகம், வெள்ளை, நீரிழிவு, புண்கள், கீல்வாயு இவைகள் நீங்கும்.

## தாகத்திற்கு

வில்வப்பழத்தாணும், ஆவரை வேரும் அரைத்துத் தண்ணீரிற் கொடுக்கத் தீரும்.

## பூதபைசாசத்துக்கு

கருஊமத்தம்பழத்தைத் துளைத்து மிளகைச் செலுத்தி, ஒரு புதுச்சட்டியிலிட்டு, சிறுநீர்விட்டுச் சூரியபுடம் வைக்கவும். இப்படி எட்டுநாளும் சிறுநீர்விட்டுச் சூரியபுடம்வைத்து மிளகை எடுத்துக்கொள்ளவும். இதில் ஒரு மிளகு நீரிலுரைத்துக் கண்ணிலிடத் தீரும். மேற்படிப் பழத்தைத் தண்ணீரிலரைத்து நஞ்சுகடிகளுக்குக் கொடுக்க அவைபோம்.

## வங்காள சஞ்சீவி

அக்கினிகுமாரச் செந்தூரம், அரப்பொடி, உருக்குப்பொடி, செம்புப்பொடி, பித்தளைப்பொடி, வெண்கலப்பொடி, ஊசிக்காந்தம், வெங்காரம், மனோசிலை, அரிதாரம் இவை வகைக்குப் பலம் ஒன்று, சுத்திசெய்த நெல்லிக்காய், கந்தகம் பலம் ஆறு, இவைகளைக் கற்ருழஞ் சாறுவிட்டு, மூன்று நாளரைத் துலர்த்தி, அடிகனத்தச் சட்டியிலிட்டு, மேற்சட்டிமூடி சீலைமண் செய்து மூன்றுநாள் இடைவிடாமலெரித்து ஆறவிட்டெடுக்கச் செந்தூரமாகும். இச்செந்தூரம், பச்சைநாபி விராகன் எடை ஒன்று, திப்பிலி பலம் ஒன்று, திப்பிலி மூலம் பலம் ஒன்று-இவைகளை வெள்ளைவெங்காயத் தைலத்திலரைத்து அரைப் பண எடை அளவு குளிகைசெய்து வெள்ளைவெங்காயத் தைலத்தில் 1 மாத்திரை அளவாக 10 நாள் காலைமாலை கொள்ள வயிற்றுக் கடுப்பு, வாயில் புறப்பட்ட சிலந்தி, வாண மடித்த புண், முதலானவை தீரும். எட்டு நாளுண்ண கிருச்சரவாதம்போம். வெருகடி திப்பிலிச் சூரணம் தேன் கூட்டியதில் ஒரு மாத்திரை அளவாக 10 நாளுண்ண, பிரமியம், கல்லடைப்பு, சதையடைப்பு, 16 மந்தவாயு, பித்த நோய்கள், சோகம் இவைகள் தீரும். வெள்ளைவெங்காயத் தைலத்தில் 24 நாள்கொள்ள வயிற்றில் உண்டாகும் நோய்கள், வாயுத்திரட்சி, பெருவயிறு, விஷபாகம், காமாலை, பாண்டு முதலியவை தீரும். திரிகடுகுச் சூரணத்துடன் ஒருமாத்திரைக்கூட்டி இஞ்சிச் சாற்றிலாவது, தேனிலாவது, 24 நாள் உட்கொள்ள சன்னி பதினெட்டும், குன்ம வாயு எண்பதும், பைத்தியம் 26ம், மண்டைச் சூலை, பீனிசம், நாசிவலி, பிடரிவலி, தலைநோய், செவிநோய், தொண்டை நோய், நெஞ்சுநோய், முயல்கண்டன், அண்டவாதம், குடல்வாதம், ஆனந்தவாயு, அந்திரவாயு, உள்வலிப்பு, புறவலிப்பு, குதிவாதம், நடுக்குவாதம் முதலியவைகள் தீரும்.

## ஈளைக்காசத்திற்கு

வெள்ளைவெங்காயம், மிளகு, சீரகம், கடுக்காய், திப்பிலி, சுக்கு, ஓமம், கிராம்பு, கடுகுரோகணி, தூதுவளை வேர், கருஞ்சீரகம் இவைகளை அரைத்துப் பசுவின் நெய், வேப்பஞ்சாறு இவை வகைக்குப் படி ஒன்று கலந்ததில்போட்டுக் காய்ச்சி, பதத்தில் வடித்தெடுத்து நாள் ஒன்றுக்கு காசளவு கொள்ள இருமல், ஈளைபோம். கைகண்டது.

## வளி நோய்களுக்கு

முற்றிய பிரண்டையை நறுக்கியது படி 2ம், கல்லுப்பு படி இரண்டும் சேர்த்து இடித்து ஒரு தாளிதச்சட்டியில் 500 எருக்கிலையை அடுக்கியதில் அதனைக் கொட்டி மருந்தைவைத்து, மேலும் 500 எருக்கிலையை வைத்து மேலோடு மூடி குழி வெட்டி எருமுட்டைப் போட்டு அதன்மேல் வைத்து தீயிட்டு நீருக வெந்தபின்பு எடுத்து அத்துடன் இந்துப்பு, வெடியுப்பு, வளையலுப்பு, உவர் மண்ணுப்பு, வெங்காரம், சீனிக்காரம், சத்திச்சாரம், நவச்சர்ரம், திப்பிலி, திப்பிலி மூலம், நற்சீரகம், கொத்தமல்லி, வாயுவிளங்கம், மஞ்சிட்டி, வட்டத்திருப்பி, அதிவிடயம், மாதுளையோடு, செங்கழுநீர்க் கோட்டம், செண்பகவரும்பு, ஏலம், கிராம்பு, லவங்கபட்டை, வில்வக்காய், அதிமதுரம் வகைக்கு ஓர் எடை எடுத்துச் சூரணித்தது ஒரு பங்கும் ஷை பிரண்டைச் சூரணம் இரண்டு பங்கும் சேர்த்து கலந்துகொண்டு 24 நாள் உட்கொள்ள, வாயு 10, குன்மம் 8, கிரணி, மேலுப்பிசம், புளியேப்பம், மூத்திரச்சுருக்கு, அக்கினி, மந்தம் முதலியவைகள் தீரும். பத்தியம்: காரங்கூட்டிப் புளி நீக்கவும்.

## வாயுக்கிராணிக்கு

நெல்லிக்காய், கடுக்காய், சுக்கு, மிளகு, திப்பிலி, கழற்சிப் பருப்பு இவை வகைக்கு கழஞ்சு ஒன்றும், நேர்வாளங்கழஞ்சொன்றும் கூட்டி எலுமிச்சம் பழச்சாற்றில் வேகவைத்து இவைகளைக் கையாந்தகரைச் சாற்றிலரைத்துக் கழற்சிப் பருப்பளவு மாத்திரைகள் செய்து, நிழலில் உலர்த்திக் கையாந்தகரைச் சாற்றிலாகிலும் வெந்நீரிலாகிலும் உட்கொள்ளத் தீரும்.

## பவுத்திரத்துக்கு

(1) கொடிவேலிவேரைப் பொடித்துச் சலித்து வஸ்திரகாயஞ் செய்து, பணவெடை நெய் விழுதில் பொதித்து 20 நாள் உட்கொள்ளவும். கைப்பும், புளியும் , நீக்கிப் பத்தியம் இருக்கவும்.

(2) பசுவின் நெய் படி 2-ம் பால் படி 4-ம் சேர்த்துக் காய்ச்சி ஒரு கொதியான பின்பு இறக்க, மறுநாள் அதிலுள்ள நீரை வடித்து விட்டு ஒருபலம் சர்க்கரைப்போட்டு வேதித்து ஒரு கரண்டி வீதம் 15 நாள் உட்கொள்ளவும்.

(3) அவரைவேர், நெருஞ்சிமுள், இவை வகைக்குப் பலமிரண்டை எடுத்து வெவ்வேறரைத்தும், எள் படி 1, கோழிக்காரம் விராகன் எடை 5 இவைகளைபிடித்தும் பசுவின் நெய்யில் குழப்பி ஒரு நாளைக்கு முள்ளிக்காய் அளவு மூன்றுருண்டையாக 5-நாள் விழுங்கவும்.

(4) பவுத்திர வீக்கத்துக்கு, முட்கொழிஞ்சிவேரை அரைத்துப் பூசவும். வீக்கம் பழுத்துடைந்தால், கீழாநெல்லி வேரை அரைத்துப் பூசவும்.

## வாதந்திற்கு

எருக்கிலைச்சாறு, வாதமடக்கியிலைச்சாறு, நொச்சிச்சாறு காட்டு முருங்கப் பட்டைச்சாறு, வெள்ளாட்டுப்பால், புங்கெண்ணெய், இலுப்பையெண்ணெய் இவை-வகைக்குப் படி ஒன்று; கள்ளிப்பால், நல்லெண்ணெய், வேப்பெண்ணெய், விளக்கெண்ணெய் இவை வகைக்குப் படி இரண்டு; அதிமதுரம், கோட்டம், சதகுப்பை, தேவதாரம், ஓமம், வாயுவிளங்கம், மரமஞ்சள், கஸ்தூரி மஞ்சள், வெளிச்சிப்பிசின், வலம்புரிக்காய், திப்பிலி மூலம் இவை வகைக்குப் பலம் இரண்டு; பெருங்காயம், இரசம், நெல்லிக்காய், கந்தகம், வெள்ளைப்பாஷாணம், அரிதாரம், மனோசிலை, நாவி, நிருவிஷம், இவை வகைக்கு விராகன் எடை இரண்டு-இவைகளைப் பொடித்து அரைத்து மேற்படி சாறு முதலியவற்றில் கலக்கிக் காய்ச்சி, பதத்தில் வடித்து மேலுக்குப் பூசிப்பிடிக்கவும். சாயந்திரம் வெந்நீரில் குளிக்கவும். இப்படி நாற்பது நாள் செய்ய சன்னிவாதம், திமிர்வாதம், முகவாதம், குத்துவாதம், தோள் வாதம், சருவாங்கவாதம், பக்கவாதம், எரிவாதம், நடுக்கல்வாதம், அரைக்கீழ்வாதம், துடிவாதம், முறுக்குவாதம், வீசுவாதம், தனுர்வாதம் முதலிய எண்பது வாதங்களும் தீரும்.

## முகசன்னி-கபால சன்னிக்கு

சாரணைவேர், அமுக்கருவேர், சிறுகுரிஞ்சான்வேர், செவ்வகத்திவேர், செருப்புநெருஞ்சிவேர், சீந்திற்றண்டு, சிற்றுமுட்டிவேர், வில்வவேர், கொடிவேலிவேர், சிற்றுமணக்கன்வேர், எட்டி

வேர், சுண்டைவேர், வேப்பம் பட்டை, வெற்றிலைக்கொடி, தாழைவிழுது, ஆதொண்டைவேர், மிளகறணைவேர், நாரத்தம் வேர், துளசிவேர்; பேய்ப்பீர்க்கன்வேர், முள்ளிவேர், வகைக்குப் பலம் எட்டை யிடித்துப் பன்னிரண்டு மரக்கால் தண்ணீரிலிட்டு நான்கு நாழியாகக் காய்ச்சி அதில் மிளகு, கடுக்காய், தான்றிக்காய், நெல்லிக்காய், வெற்றிலை, மஞ்சள், மரமஞ்சள், குங்கிலியம், விளாமிச்சம்வேர், அரத்தை, திப்பிலி, வெட்டிவேர், இவை வகைக்கு விராகன் எடை பத்து கொண்டு அவைகளை அரைத்ததில் நல்லெண்ணெய், பசுவின்பால் வகைக்குப்படி இரண்டு சேர்த்துக்காய்ச்சி மெழுகுபதத்தில் இறக்கி வடித்துக் கொண்டு காலையில் தலை முழுகி சாயந்திரம் வெந்நீரில் முழுகவும். வெந்நீர் புழங்கிவரவும்.

## பூதிகாத் தைலம்

ஆயில்பட்டை பலம் 100, மலைதாங்கிவேர், சாரணைவேர், சிற்ருமுட்டிவேர், வில்வவேர், புங்கம்வேர், ஆமணக்கன்வேர் சதுரக்கள்ளிவேர், வெங்காயம், மாவிலங்கம்வேர், தூதுவளை சமூலம், எருக்கம் வேர் இவை வகைக்குப் பலம் எட்டை எடுத்து இடித்து, 32 மரக்கால் நீர் விட்டு நான்கு மரக்காலாகக்காய்ச்சி வடித்து அதில் ஆயில்பட்டை பலம் 100 எடுத்து இடித்து 16 மரக்கால் நீர் விட்டு 2, மரக்காலாகக் காய்ச்சி வடித்து தேங்காய்ப் பால், வெள்ளாட்டுப்பால், கொள்ளுவெந்த நீர், இவை வகைக்கு மரக்கால் 2 ; செம்பருத்தியிலைச்சாறு, நொச்சியிலைச்சாறு, தாளியிலைச்சாறு, கையாந்தகரையிலைச்சாறு, நல்லெண்ணெய், இவை வகைக்குப்படி நான்கு ; இலுப்பையெண்ணெய், வேப்பெண்ணெய், கடுகெண்ணெய், புங்கெண்ணெய்—இவை வகைக்கு ஓர் வெள்ளம்; சிற்ருமுட்டிவேர், அமுக்கலாங்கிழங்கு, நில உகா வேர் நொச்சிவேர், முள்ளிவேர், கண்டங்கத்திரி, நாயுருவிசமூலம் கோரைக்கிழங்கு, பேய்க்கும்மட்டிவேர், முருங்கைவேர், தூதுவளை வேர், இவை வகைக்குப் பலம் நான்கு; ஆனைவசம்பு, வாயு விளங்கம், நவச்சாரம், சத்திச்சாரம் ; சடாமாஞ்சி, பூலதாகேசுரம், குக்கில், கருங்குங்கிலியம், செங்கழுநீர், கோட்டம், அதிமதுரம், சந்தனம், சீரகம், கருஞ்சீரகம், மஞ்சிட்டி, தேவதாரம், திப்பிலி, பெருங்காயம், கண்டுபறங்கி, நெல்லிக்காய், கந்தகம், அரிதாரம், துத்தம், நாவி, மனேசிலை, ஊசிக்காந்தம், வெங்காரம், கடுக்காய், தான்றிக்காய், கடுகு, வேப்பங்கொட்டை, இந்துப்பு, மஞ்சளுப்பு, ஏலம், லவங்கப்பட்டை, கல்லுப்பு, சாதிக்காய்,

சாதிப்பத்திரி, திப்பிலி மூலம், கடுகுரோகணி, சதகுப்பை, வசம்பு, வெட்டிவேர், இவை வகைக்குப் பலம் இரண்டு; இவைகளைச் சூரணித்து, மேற்படிக்குடி நீரிட்டரைத்துச் சேர்த்துக் காய்ச்சி, மெழுகு பதத்தில் வடித்துக் கொண்டு முழுகிவர, சன்னிகள், சருவாங்கவாதம், பித்தம், தலைவலி இவைகள் தீரும்.

## நார்த்தங்காய்த் தைலம்

நார்த்தங்காய்ச்சாறு, கையாந்தகரைச்சாறு, துளசிச்சாறு, பேய்ப்பீர்க்கஞ்சாறு, நொச்சிச்சாறு, தாழைவிழுதுச்சாறு, வெற்றிலைச்சாறு--இவை வகைக்குப் படி இரண்டு எடுத்து, வடிகட்டி, நல்லெண்ணெய், பசுவின் நெய், சிற்றுமணக்கெண்ணெய், இவை வகைக்குப் படி இரண்டு எடுத்துச் சேர்த்து, திப்பிலி மிளகு, சிற்றரத்தை, கடுக்காய், தான்றிக்காய், நெல்லிப்பருப்பு, அசமதாகம், கஸ்தூரிமஞ்சள், பேய்ப்பீர்க்கன் விதை, இவை வகைக்குவிராகன் எடை ஐந்தை எடுத்துச் சூரணித்திட்டு, பசுவின்பால் படி 4. விட்டுக்காய்ச்சி, மெழுகுபதத்தில் வடித்து, மூன்று நாளைக்கொருதரம் தலைக்குத் தேய்த்து முழுகிவரவும். கஸ்தூரி-கோரோசனை-குங்குமப்பூ—இவை வகைக்கு பணவெடை இரண்டை எடுத்துப் பொடித்திட்டு வெங்கலக் கிண்ணத்தில் இத்தைலத்தை யூற்றி லகுவாய்க் காய்ச்சி பஞ்சில் நனைத்து 5-6 துளிகள் நசியமிடவும். மண்டைப்பீனிசம், சிராய்ப்பீனிசம், இரத்தப்பீனிசம், விடாத் தலைப்பீனிசம், ஒருதலைவலி, கண்ணெரிவு, காதுகேளாமை, பல்லுநோய், முகஇசிவு, நீர்ப்பீனிசம், கீழ்ப்பீனிசம், நாசியிலிருந்து முருங்கை விதைபோல் விழுதல், இரத்தம் விழுதல், சிராய் விழுதல், ஊழை நாற்றம், இப்படிப்பட்ட மூக்கிலுண்டாகும் நோய்களும், கபாலத்திலுண்டான அநேக விதமான நோய்களும் தீரும்.

பத்தியம்:—குளிர்ந்தஜலம், வெய்யில், காற்று, புளி, புகை நீக்கவும். பால், துவரை கூட்டவும்.

## வாதகுடேரித் தைலம்

ஆயில்பட்டை பலம் 100, நொச்சிவேர் பலம் 20, புங்கமபட்டை, காட்டு முருங்கைப்பட்டை, எருக்கம்வேர், ஆடாதோடைவேர், வேப்பம்பட்டை, சங்கங்குப்பிவேர், கொடிவேலிவேர், மஞ்சணத்திவேர், அறுகங்கிழங்கு—இவை வகைக்குப் பலம் பத்து; எட்டிப்பழம் பலம் 15, இவைகளையிடித்து 16 மரக்கால் தண்ணீர் விட்டு நாலுமரக்காலாகக் காய்ச்சிப் பிழிந்து, வெள்ளாட்டுப் பால்

படி 1-ம், நல்லெண்ணெய், வேப்பெண்ணெய்—இவை வகைக்குப் படி 4-ம். சேர்த்து, திப்பிலி, பெருங்காயம், வெள்ளை வெங்காயம், ஓமம், கடுகு, சுக்கு—இவை வகைக்குப் பலம் ஒன்று; நற்சீரகமும், கருஞ்சீரகமும், வகைக்குப் பலம் இரண்டு ; வெந்தியம் பலம் $4\frac{1}{2}$; மரமஞ்சள், கஸ்தூரி மஞ்சள்-இந்துப்பு-சதகுப்பை-சித்திரமூலம், ஏலம், இலவங்கம் - மனோசிலை, வெள்ளைப்பாஷாணம் இவை வகைக்குப் பலம் இரண்டு ; இவைகளைச் சூரணித்துப் போட்டு மூன்று நாள் வரை காய்ச்சி மெழுகுபதத்தில் இறக்கி நான்கு நாள் வடித்து மேலே முறுக்கித் தேய்த்து எட்டு நாளைக் கொரு தரம் தலைமுழுகவும். கடம்புருத் தைலம் விட்டு தினசரி சாயங் காலம் வெந்நீர் விடவும். வாதம் எண்பதும், சன்னியும் தீரும்.

## பித்தவிகாரத்துக்கு

சீந்திற்றண்டு, தாமரைக்கிழங்கு, நீர்வள்ளிக்கிழங்கு, பொன் னுங்காணிவேர், ஆவாரைமொட்டுப்பூ, குறுந்தொட்டிவேர், நன்னாரிவேர், முத்தக்காசு, செவியம், நெல்லிப் பருப்பு இவை வகைக்கு வீசை 5; இளநீர் படி 2; எண்ணெயும், பசுவின்பாலும் வகைக்குப் படி ஒன்று; அதிமதுரம், ஏலம்; செண்பகமொட்டு விலாமிச்சம்வேர், மரமஞ்சள், கோஷ்டம், செவ்வள்ளிக் கொடி-சடா மாஞ்சி, கொத்துமல்லி, சீரகம், கருஞ்சீரகம், லவங்கம், தகரம், லவங்கப்பட்டை, கஸ்தூரி மஞ்சள், சாஸ்திரபேதி, நெல்லி வற்றல், அகிற்கட்டை, நன்னாரிவேர், முத்தக்காசு, தேவதாரம், செங்கழுநீர்க்கிழங்கு, சிதேவியார்செங்கழுநீர்வேர், நல்லசந்தனம் இவை வகைக்கு விராகனெடை மூன்று; இவைகளை இளநீர் விட்டு அரைத்து, கரைத்துக் காய்ச்சிப் பதத்தில் வடித்து, கரண்டியளவு சாப்பிட்டுத் தலைமுழுகிவரப் பித்தவிகாரம் தீரும். கை கண்டது.

## பெரும்பாட்டுக்கு

பால், பசுவின் நெய், தயிர், கோசலம், சாணிப்பால் இவை வகைக்குப் படி இரண்டு; கோஷ்டம், அதிமதுரம், சிறுதேக்கு, கொத்துமல்லி, வாயுவிளங்கம், வாலுளுவை, வேட்பாலையரிசி, திப்பிலி, வெள்ளுள்ளி, வசம்பு, அரப்பொடி, கருஞ்சீரகம், தேவ தாரம், அரத்தை, இந்துப்பு, சதகுப்பை, சந்தனம், பூதவிருட்சம், நன்னாரிவேர், பொன்முசுட்டைவேர், சாரணைவேர், வெள்ளைக் காக்கணம்வேர், சத்திச் சாரணைவேர், கிழாநெல்லிவேர், கொடி வேலிவேர், முளைகருணைவேர், துத்திவேர், அதிவிடயம், கடுகு

ரோகிணி, துருசு, பெருந்தும்பைவேர், கிராம்பு, காந்தம், சாதிக்காய், சாதிபத்திரி, கடுகு, தான்றிக்காய், நெல்லிப்பருப்பு, வில்வவேர், இவை வகைக்கு ஓர் கழஞ்சு; இவைகளைக் கோசலம் விட்டு, நன்ருக அரைத்துக் கலக்கி நான்கு நாள் சிறுகொதியாகக் காய்ச்சி, ஐந்தாம் நாள் பக்குவத்தில் வடித்து, எட்டுநாள் தானியபுடம் வைத்து, எடுத்துக் கொண்டு, காலையில் உட்கொள்ள பெரும்பாண்டு, பித்தக்காமாலை, கும்பகாமாலை, பெருவயிறு முதலிய வியாதிகள் தீரும்.

## இருமலுக்கு

கையாந்தகரையிலை, நாயுருவியிலை, கருந்தக்காளியிலை, தூதுவளையிலை-இவைகளை ஓர் அளவாகக் கொண்டு அரைத்து, அதை எலுமிச்சங்காய் அளவாக எடுத்து அத்துடன், எருக்கிலைப்பூ மொட்டு இரண்டு, வேலிப் பருத்தியிலை நான்கு, அரிசி ஒரு படி— இவைகளைச் சேர்த்து அரைத்து நெய்யில் அடைசுட்டுச் சாப்பிடத் தீரும்.

## விக்கலுக்கு

பூளைவேரை மோரில் அரைத்துண்ணத் தீரும்.

## மரணக்குறி

காலொடு புறங்கால் வீங்கி கனக்கவே கண்சி வந்து
சாலவே யெட்டு மொன்று தனஞ் செயன் கீழே யானல்
போதவே வயிறு வீங்கும் பொருமிடு மிழலை செய்யும்
யாவரு மறியச் சொன்னே மிதுகண்டால் விட்டுப்
போமே. (1)

முதுகொடு வியிறு வீங்கி மூலமுந் தாது கெட்டு
செவியொடு வாயுங் கண்ணுஞ் சேயவன் பரிசு குன்றி
முடுகிட வாறு மூன்று முதியவன் கீழே யாகில்
விதியவன் வசமீதென்று விட்டுநீர் விரைவாய்ப் போமே. (2)

## பித்தவெறி பைத்தியம் உன்மாதம் மருள் அறிவு நினைவு ஆம்பல் இவைகளுக்கு

சீந்தில் கிழங்கு, முசுமுசுக்கை வேர், செங்கழுநீர்க் கிழங்கு, தாமரைக் கிழங்கு, இவைகளை யரைத்துச் சர்க்கரைக் கூட்டிப் பாலில் கொடுக்கவும்,

பசுவின் நெய் படி 1, விலாமிச்சம் வேர், நன்னரிவேர், சந்தனம், அதிமதுரம், கோஷ்டம், ஏலம், இஞ்சி, மஞ்சிட்டி, சண்பகப்

பூ இவை வகைக்கு வராகன் எடை கொண்டு பசுவின் பால் விட்டரைத்துக் கலக்கிப் பதமாகக் காய்ச்சி கரண்டியளவு உட்கொள்ளவும்.

## பைத்தியத்திற்கு

பசுவின் நெய், எலுமிச்சம்பழச்சாறு—நெய்க்கொட்டான் பழச்சாறு—இவைகளைச் சேர்த்துப் பதமாய்க் காய்ச்சி மூன்று நாள் தலை முழுகவும். உள்ளங்கால்களுக்கு நன்ருகத் தேய்க்கவும். எலுமிச்சம்பழச்சாறும், நெல்லிக்காய்ச்சாறும் கலந்து உள்ளுக்குக் கொடுக்கவும்.

2. பேய்க்கோவைத்தண்டுச்சாற்றில் சிறுபயிறை நனையப்போட்டுப் பிசைந்து நாங்கூழு மரைத்துக் கலக்கிக் கொடுக்கவும். அல்லது தேற்ருன் சூரணத்தை வெந்நீரில் கொடுக்கவும்.

3. பேய்ப்புடல் போட்டு குறுணிநீரைக் கஷாயமிட்டு வறுத்த சீரகப் பொடியில் நெய்யும் விட்டுக் கொடுக்கவும்.

4. தேற்ருன் பொடியைக் கோமயத்தில் கொடுக்கவும்.

5. கழுதைப்பாலில் முசு முசுக்கை, முசுறு முட்டைக்குஞ்சு இவைகளைக் கூட்டி எட்டுநாள் கொடுக்கவும்.

6. வேப்பெண்ணெயும், இலுப்பெண்ணெயும் சரி கூட்டி ஆடு தின்னுப்பாளைவேர், பெருங்காயம், கடுகுரோகணி, கடுக்காய், வெளிச்சிப்பிசின், வசம்பு, வெங்காயம் இவற்றையும் சரி கூட்டி மேற்படி எண்ணெயிலிட்டுப் பதமாய்க் காய்ச்சி உள்ளுக்குக் கொடுத்து மேனியிலும் துவளையிடவும். மேற்படிக்கு பூசனிக்காய்ச்சாறும் நெல்லிக்காய்ச்சாறும் கலந்து கொள்ளலாம்.

7. முசுமுசுக்கையிலை, ஆவாரையிலை, புளியிலை, முசுட்டையிலை, இவைகளைத் துவைத்துச் சாறுவாங்கி துவளையிடவும். முசு முசுக்கைச்சாறும் தேனுங்கலந்து கொடுக்கவும்.

8. ஒருகொட்டை வெள்ளுள்ளி, 1 வசம்பு, எருக்கம்பால் துளி 1. இவைகளைச் சேர்த்து சிறு நீரில் நசியமிடவும். பனங்கருப்புக்கட்டியில் எருக்கம்பால் துளி இரண்டு சேர்த்து உள்ளுக்குக் கொடுக்க வாந்தியாகும். அதிகமானல் மோருஞ் சோறும் கொடுக்கவும். தேற்ருன் தழையைத் துவைத்து மேனிக்குத் துவளையிடவும். இத்தழையை வதக்கி ஒற்றிடங்

கொடுக்கவும். இலேச்சாற்றைப் பசுவின் பாலிற் கலந்து உள்ளுக்குக் கொடுக்கவும்.

9. முசுமுசுக்கை, பேய்ப்புடல் இவைகளைக் குடிநீர் செய்து கொடுக்கவும்.

10. கோவைத் தண்டுச் சாறு, பழம் புளி, எலுமிச்சம் பழச் சாறு, காடி இவைகளைக் கலந்து கொடுக்கவும்.

11. இஞ்சிச்சாறும் கழுதைப்பாலுங் கலந்து, சர்க்கரை சேர்த்துக் கொடுக்கவும். இலுப்பைப் பிண்ணாக்கில் எருக்கம் பால் விட்டு சிறுநீர் கூட்டி மூன்று நாள் நசியமிட, வெறி நோய்கள் போம்.

## இரசத்தாலுண்டாகும் நஞ்சுகளுக்கு

1. தண்ணீர் வற்றிய தேங்காயைத்திருகி அதைப் பிசைந்துப் பிழிந்து ஒரு சட்டியிலிட்டு அதில் நாலைந்து எலுமிச்சம் பழத்தின் சாற்றைப் பிழிந்து ஒரு சேர் அளவுக்கு எடுத்து உள்ளுக்குக் கொடுத்து, மேலுந் துவளையிட்டு வாழை யிலைகளை விரித்து அதன் மேலிருக்கச் செய்ய, ரசம் பெருவிரல் நகக்கண்ணிலே புறப்படும்.

2. பெரும்பூசனிக்காய் மேலோடுசீவிப் போட்டுநடுவேயிருக்கிற சதையும், கத்திரிப்பூவும், பிஞ்சும், பூவரசஞ்சாறும், பூவரசுப் பட்டைச்சாறும் சமனாய்க் கூட்டி, கால்படி உள்ளுக்குக் கொடுக்கவும். உச்சந்தலையிருந்து உள்ளங்கால் வரை துவளையிடவும்.

3. பருத்தியிலேச்சாறு, தாழைவிழுதுச்சாறு, குட்டித்தக் காளியிலேச்சாறு, கோவையிலேச்சாறு, இவற்றைச் சரிகூட்டி உள்ளுக்குக் கொடுத்து மேலுக்குத் துவளையிட்டு வாழையிலை யிலிருக்க, ரசம் பெருவிரற் கண்ணுவழியே வரும். இடித்த மருந்து காய்ச்சி விடவும்.

## பழுபாகல் கிழங்குக் கற்பம்

பழுபாகற்கிழங்கை வெந்நீரிலரைத்துக் குடிக்க, காசம் தீரும். தேனில் உட்கொள்ள மூத்திர எரிவும், நீர்க்கட்டும் தீரும். நெய்யில் உட்கொள்ள சகல நோய்களும் தீரும். நொய்யரிசியோடு சேர்த்துக் கூழ் காய்ச்சி உட்கொள்ள தீபன முண்டாகும். காடியிலுரைத்துக் கண்ணிலிட, கண்படலந்திரும். வெந்நீரில் அரைத்துக் குடிக்கக் குளிர்சுரம் தீரும்.

## நீரிழிவுக்கு

1. விளாம்பிசின், மஞ்சள் இவ்விரண்டையும் சூரணித்துக் கையாந்தகரைச் சாற்றில் இருபதுதரம் பாவனை செய்து புதுப் பானையில் வைத்துக் கொண்டு பணவெடை வீதம் தேனிற் கொள்ள நீரிழிவு தீரும்.

2. பெருமரத்து விதையைச் சூரணித்து ஆறு காசியெடை சிறுக்கீரைச் சாற்றில் உட்கொள்ள, நெடுநாளாயிருக்கிற நீரிழிவு நோயுந் தீரும்.

3. தேற்றாங்கொட்டை நாலரைக் காசியெடை, அத்திக்காய்ப் பொடி இரண்டு காசியெடை—இவை எடுத்து மேற்றோல் நீக்கி, முளைபோக்கிய வெள்ளைக் குன்றுமணிப் பருப்பு மூன்று காசியெடை எடுத்து, இவைகளைப் புளித்த பசுவின்மோரிலரைத்துக் கலக்கித்தேன் சேர்த்து ஒரு மண்டலங் கொள்ள, சகல நீரிழிவுந் தீரும்.

குறிப்பு:—இம் முறையில் வெண்குன்றிமணி கூடியுள்ளது. இஃது நஞ்சையுண்டாக்குந் தன்மையுடையதாய், குடலிற்று பதத்தையுண்டாக்கிக் கழிச்சலை வருவித்துக் கெடுதிகள் பல செய்யுமாதலால் குன்றிமணிப் பருப்பு மூன்று கொள்ளவும். மூன்றுக்கு மேல் கொள்வது நன்றன்று.

## தாகத்துக்கு

1. மருதம்பட்டை, விலாமிச்சம்வேர், திரிபலை, நாவற்பட்டை, கோரைக்கிழங்கு, கடலிராஞ்சிப்பட்டை, சந்தனம், தேற்றாங் கொட்டை, கருவேலம்பட்டை, பொன்முசுட்டைவேர், சிறுக்கீரை வேர், பொன்னாங் கண்ணிவேர், இவை வகைக்குப் பலம் ஒன்றாகக் கொண்டு இடித்து, முந்திரிப்பழம், பேரீச்சம்பழம், சந்தனம், லவங் கப்பட்டை, கோரைக்கிழங்கு இவை வகைக்குப் பலம் அரைபாகம் சேர்த்துக் கூட்டிக் குடிநீராக்கிக் கொடுக்கத் தீரும்.

2. நெல்லிமுள்ளி, தான்றிக்காய், கோரைக்கிழங்கு, பொன் முசுட்டைவேர், தேற்றாங்கொட்டை—இவை வகைக்கு மூன்று காசியெடையை யிடித்துக் குடிநீரிட்டுக் கொடுக்க, நீர் வேட்கை யும், அடிக்கடி நீரிழிதலும் போகும்.

3. தாமரைக்கிழங்கு, அதிமதுரம், சந்தனம், சிறுக்கீரைவேர், சீந்திற்றண்டு இவைகளைக் கூட்டி இடித்துக் குடிநீரிட்டுத் தேனும் சர்க்கரையும் கூட்டிக் கொள்ளவும்.

4. தென்னம் பாளையையிடித்துப் பிழிந்து அதில் தேனும் சர்க்கரையும் கலந்து கொடுக்கவும்.

5. சிறுக்கீரைவேரைப் பச்சரிசிக் கழுநீரிலரைத்துக் கலக்கிக் கொடுக்கவும்.

6. மூங்கிலைச் சுட்டசாம்பல்-நெல்லிப்பட்டையைச் சுட்டசாம்பல் இவைகளை மோரில் கலக்கிக் கொடுக்கவும்.

7. கடுக்காயும், தாமரைப்பூவையும் பொடித்துத் தேனில் குழப்பிக் கொள்ளவும்.

## எரிகுன்மத்துக்கு

உள்ளி இஞ்சி இந்துப்பு ஒத்த சிவதை சீந்தியுடன்
கொள்ளும் நிலையாவரைவேருங் குலவு மிளகு திப்பிலியும்
உள்ளோரெண்ணை யுடனுறவேர் முடக்கொற்றானை யுடன் கூட்டித்
தள்ளா தொக்கக் களவுகொடி சாரணை எருவுறக் கொடிவேலி

காட்டு நொச்சி நிலவாகை கடிய கொன்றை கழுலுடனே
யோட்டு மாதண் டையுடனே யுற்ற சித்த செம்முள்ளி
* * * வாய்விளி யாமணக்கு முருங்கை
காட்டா மணக்கெண்ணெயுடன் கொள்ளில் குன்மம் போய்விடுமே

வெள்ளுள் ளியிஞ்சி நெல்லி விரவிய சாதா வேரி
தெள்ளிய விளநீர் பாலுஞ் சேரிவை நாலு நாளே
கொள்ளிவை கசாயம் வெந்து கொதித்தொரு நாழி யானல்
மெள்ளவே நறுநெல் நாழி விடுவது மிகவும் நன்றே.

நன்றதே கோஷ்ட மேலம் நல்கு வெங்கார மிந்துப்
பென்றுற மணத்தி நற்சீர் திப்பிலி கொத்த மல்லி
முன்றிடுங் கிராம்பு வாசி மிக்கசெங் கொட்டை கூட்டி
யொன்றவே தானுட் கொள்ள போமதே வெய்ய மாந்தம்.

தாமமேனிவேர், வீழிவேர் ஆதண்டைவேர், ஆயப்பட்டை, கச்சத்தரா முள்ளிவேர், தவசி முருங்கைவேர் இவை வகைக்குப் பலம் இரண்டை யெடுத்து இடித்து நான்கு நாழி நீர் விட்டு ஒரு

நாழியாகக் காய்ச்சி வடித்ததில் கந்தகம், சாதிலிங்கம், மிளகு, மஞ்சள், இஞ்சி, வெங்காரம், அரிதாரம், அசமதாகம் இவை வகைக்குப் பலம் ஒன்றை, கஷாயம் விட்டரைத்து, நல்லெண்ணெய், வேப்பெண்ணெய் இவை வகைக்குப் படி ஒன்று சேர்த்துக் காய்ச்சி, கடுகுபதத்தில் வடித்து தேகத்துக்குப் பூசிப்பிடிக்க 20 நாளில் சகல வாதமுந்திரும். நொச்சியிலை, வாதமடக்கியிலை எருக்கிலை-நார்த்தையிலை எலுமிச்சனிலை, ஆடா தோடையிலை நீர்முள்ளியிலை, இவைகளை மிடாவிலிடித்துப் போட்டுக் காய்ச்சி வேது பிடிக்கவும். புளியாகாது.

## வலிகுன்மத்துக்கு

வெள்ளை வெங்காயம், இந்துப்பு, இரசம், வெண்காரம், சுக்கு, மிளகு, திப்பிலி, காந்தம் இவை வகைக்கு கழஞ் சொன்றும் கள்ளிப்பால் கழஞ் சிரண்டும் கல்வத்திலிட்டு, நொச்சியிலையை வாட்டிச் சாறு பிழிந்ததி லரைத்து, மிளகளவு குளிகைசெய்து நிழலிலுலர்த்தி, இளவெந்நீரிற் கொள்ளவும்.

2. தேங்காய்ப்பால் படி ஒன்று, இந்துப்பு பலம் ஒன்று, வெள்ளை வெங்காயம் பலம் இரண்டு, நவாச்சாரம், கள்ளிப்பால் இவை வகைக்குக் கழஞ்சிரண்டு ஆக இவைகளைச் சேர்த்துக் காய்ச்சி, எண்ணெய் எடுத்துக் கொண்டு மூன்று நாளைக் கொரு தரம் கொள்ளவும். சுருக்கருவாடும், மிளகு நீரும் கூட்டவும்.

## சுவாசகாசத்துக்கு

சந்தனம், கோஷ்டம், அதிமதுரம், சாத்திரம்வதி, தக்கோலம், கோரோசனை, முல்லைவேர், இலாமிச்சம் வேர், இருவேலி வேர், இவைகளைச் சரி கூட்டி இளநீர் விட்டு, அரைத்து இலந்தைக் காயளவு குளிகை செய்துலர்த்தி இளநீரிற் பத்து நாள் கொள்ளவும்.

## சன்னிபதின் மூன்றுக்கு

வேப்பம்பட்டை, ஆடாதோடையிலை, வேலிப்பருத்தியிலை, துளசியிலை, நொச்சியிலை, மணித்தக்காளி சமூலம், அழிஞ்சியிலை—இவைகளின் சாறு வகைக்கு உழக்கு, எண்ணெய் நாழி, கற்கடக சிங்கி, சிறுதேக்கு, திகடை, திரிபலை, கிலுகிலுப்பைவேர் நரியுடைவேர், தலை சுருளி வேர், வெள்ளுள்ளி, வசம்பு, கோஷ்டம், கடுகுரோகணி, மஞ்சள், மர மஞ்சள், நாகப்பாம்புச் சதை

இவை வகைக்கு விராகன் எடை ஒன்றை எடுத்து முலைப்பால் விட்டரைத்ததைக் கரைத்து, பதமாய்க் காய்ச்சிவடித்து, உடல் முழுதும் தேய்த்து நசியஞ் செய்து, புகைகாட்டச் சகல சன்னி யுந்தீரும். சுரமுந்தீரும்.

## வாதத்துக்கு

ஆயில்பட்டை, புங்கம்பட்டை, நொச்சிவேர்ப்பட்டை, சாரணைவேர், வாத மடக்கிவேர், தூதுவளை வேர், சிற்றுமுட்டி வேர், ஆதண்டைவேர், பாவட்டைவேர், துளசிவேர், மாவிலிங் கம் வேர், இவை வகைக்குப் பலம் ஆறு கொண்டு இடித்ததில் மரக்கால் நீர் விட்டு, எட்டொன்ருய்க் காய்ச்சி, வடித்து, அதில் நல்லெண்ணெய், வேப்பெண்ணெய், புங்கெண்ணெய், இலுப் பெண்ணெய், விளக்கெண்ணெய், இவை வகைக்குப்படி இரண்டு, வெள்ளை வெங்காயத்தைலம் படி கால், எட்டிப் பழச் சாறு படி ஒன்று, பசுவின் பால் படி நான்கு, இவைகளைக் கூட்டிக் கலந்து, தேவதாரம், வசம்பு, அரத்தை, கடுகுரோகிணி அதிமதுரம், நாகப்பூ, சீரகம், கடுகு, மஞ்சள், மரமஞ்சள், சுக்கு, திப்பிலி, மிளகு, வாயுவிளங்கம், இந்துப்பு, சிறுதேக்கு, ஆனைத்திப்பிலி, சித்தரத்தை, கூகைநீறு, கோஷ்டம், பெருங் காயம், கடுக்காய், ஓமம், வெள்ளெருக்கம் பூ—இவை வகைக்கு விராகன் எடை மூன்று எடுத்து பால் விட்டரைத்துச் சேர்த்து நான்கு நாள் மந்தாக்கினியாக எரித்து, ஐந்தாம் நாள் மெழுகு பதத்திலிறக்கி வடித்து, எட்டு நாளைக்கு ஒரு தரம் தலை முழுகி வர, சகல மகாவாதங்களும், காது நோய், காது இரைச்சல், பல் நோய், பெருவயிறு, வீக்கம் முதலியவை தீரும். இரவில் தசமூலக்கிஷாயம் குடிக்கவும்.

வேறு :—எட்டிப்பழச்சாறு குறுணி ஒன்று, துளசி, ஆடா தோடை, பேய்த்தும்பை,வாதமடக்கி, சங்கங்குப்பி இவ்வைந்தின் சாறுகுறுணி ஒன்று, பசுவின் பால் குறுணி ஒன்று, நல்லெண் ணெய், வேப்பெண்ணெய், புங்கெண்ணெய், இலுப்பெண்ணெய், ஆமணக்கெண்ணெய் இவ்வைந்தெண்ணெய்யுங் குறுணி ஒன்று; இவைகளைச் சேர்த்ததில், முக்காவளைவேர், கொடிவேலிவேர், வேலிப்பருத்தி வேர், நொச்சி வேர், புளி நறுணைக்கிழங்கு, எருக்கம் வேர், செங்கத்திரி வேர், முள்ளுக்கத்திரிவேர், சிறு காஞ்சொறிவேர், உகாவேர், கோஷ்டம், கடுகுரோகணி, நவாச் சாரம் இவை வகைக்குக் கழஞ்சு மூன்று; இந்துப்பு, அதிமதுரம்

கம்பிளிப்பிசின், தேவதாரம், சதகுப்பை, கடுகு இவை வகைக்குக் கழஞ்சி இரண்டு; பெருங்காயம் கழஞ்சு எண்பது; இவைகளைப் பால் விட்டரைத்துச் சேர்த்து ஐந்து நாள், சிறு தீயில் காய்ச்சி ஆறும் நாள் பத்துக் கடுக்காய்ச் சூரணத்தைத் தூவிக் காய்ச்சிப் பதத்திலிறக்கி வடித்துக் கொண்டு உள்ளுக்குச் சாப்பிட்டு, மேலும் பூசிப் பிடிக்க வாதம் 84ம் தீரும்.

வேறு:—எருக்கிலையின்வேர், தண்டு, காய், இலை, பூ ஆகிய இவைகளை இடித்தெடுத்தச் சாறுபடி நான்கு; சுக்கு, உகாய்ச மூலம், கொடுவேலி, முட்காய்வேளை, அமுக்கிரு, நொச்சி, இவைகளின் சமூலம்; முருங்கப்பட்டை, வாதமடக்கிப்பட்டை இவை வகைக்குப்பலம் பத்து; இவைகொண்டு இடித்து 110 படி தண்ணீர்விட்டு, எட்டு ஒன்ருய்க் காய்ச்சி, நல்லெண்ணெய், புங் கெண்ணெய், ஆமணக்கெண்ணெய் வேப்பெண்ணெய், இவை வகைக்குப் படி ஒன்று சேர்த்து எருக்கம் பால் படி இரண்டு, சாணைக்கிச் சாறு படி நான்கு, பழங்காடி, கோமூத்திரம், வெள் ளாட்டுப் பால்—இவை வகைக்குப்படி நான்கு கூட்டி, ஏலம், கிராம்பு, தகரம், கோஷ்டம், இந்துப்பு, கடுகு, சிற்றேலம், வெள்ளி லோத்திரம், இவை வகைக்குக் கழஞ்சு பத்து கொண்டு வெள் ளாட்டுப் பாலிலரைத்து எல்லாவற்றையும் சேர்த்து, ஆறு நாள் காய்ச்சி, ஏழாம் நாள் வடித்து, காலை மாலை உடல் முழுமையும் பூசிப் பிடித்து ஒத்திட, வாதம் 84ம் தீரும். பின்பு, எட்டுநாளைக்கு ஒரு கால் தலை முழுகவும்.

### மண்டை நோய் சன்னிக்கு

அகத்திப்பழுப்புச்சாறு, ஒரு கொட்டைப் பூண்டு, சுக்கு, மிளகு, வசம்பு இவைகளைத் தட்டி நசிய மிடவும்.

### காது நூலக்கு

பழுபாகற்கிழங்கை எண்ணெயில் வேகவைத்துக் காதில் விட்டுப் பஞ்சாலடைக்கவும்.

### அஸ்திசுரம் உள் காய்ச்சலுக்கு

கற்ருழம் வேரை வாட்டிப் பிழிந்த சாறு, மடல்கள்ளிச் செடியின் கழுத்தை வாட்டிப் பிழிந்த சாறு இவற்றில் நற்சீரக மும், ஏலமும் வகைக்குக் காசியெடை இரண்டை அரைத்துத் கலந்து சிறிது நல்ல வெல்லங்கூட்டி மூன்று நாள் கொடுக்கத் தீரும்.

## இடுப்பு நோய்க்கு

சதுரக்கள்ளியின் ஐந்தாறு கண்டம் பானையிலிட்டு, இரண்டு படி தண்ணீர் விட்டு, வேடுகட்டி, அதன் மேல் கம்பரிசிமாப் போட்டு, பிட்டு போல் வேகவைத்துக் கருப்புக்கட்டியும் நெய்யும் கூட்டிக் குழப்பி நக்க வாந்தியுண்டாகும். இடுப்பு நோய் போகும்.

## கருவாய் (யோனி) கடுப்புக்கு

ஏரம்புப்புழு, பெருங்குறிஞ்சான் இலை, வெள்ளாட்டுப் பால், பசுவின்பால் ஒவ்வொன்றும் ஓர் அளவாகக் கொண்டு ஒன்ருய்ச் சேர்த்தரைத்து நிழலிலுலர்த்தி சிறுவில்லைகளாக்கி நன்ருகக் காய்ந்த பின் நோயின் பலமறிந்து இளவெந்நீரிலொரு முறை கொடுக்க, கடுப்பு நீங்கும்.

## காமாலை 18 க்கு

கரிப்பான்சாறு நாழி இரண்டு, கமலாப்பழம், எலுமிச்சம் பழம் இவற்றின் சாறு உரி ஒன்று, காட்டு மல்லிகைச் சாறு உழக்கு ஒன்று, கடுக்காய் இருபத்தைந்து, சுக்கு பலம் ஒன்று, அரப்பொடி ஆழாக்கு ஒன்று, மிளகு ஆழாக்கு ஒன்று, கிட்டப் பொடி ஒரு சேர், ஓமம் பலம் ஒன்று, உள்ளி பலம் ஒன்று, நற் சீரகம் பலமிரண்டு, மருஞ்சீரகம் பலம் இரண்டு, திப்பிலி பலம் இரண்டு, மனேசிலை, விராகன்எடை ஒன்று, இவைகளை எலுமிச் சம் பழச்சாற்றி லரைத்து மேற்படிச் சாறுகளில் கலக்கி, நல் லெண்ணெய்விட்டு, சூரியபுடம் மூன்று நாள் வைத்து, நான்காம் நாள் எடுத்துக் கொண்டு, காலை மாலை வெருகடிப் பிரமாணம் இருபது நாள் சாப்பிடவும். ஒன்றுவிட்டு ஒரு நாள் தலைமுழுகவும். பத்தியம் காக்கவும்.

## முயலகன் வலிப்புக்கு

பூச்சைக்கொட்டை மரப்பழமும், மேற்படி மரப்பட்டையும், திப்பிலியும் கூட்டி யரைத்து, உள்ளுக்குக் கொடுத்து நசியம் செய்யவும்.

சிறுக்கீரைவேர், அமுக்கலாம்வேர், செவ்வகத்திப்பூ, வசம்பு, மிளகு இவைகளைத் தட்டி நசியமிடவும்.

வெள்ளைச் சுண்டைவேர், வெள்ளைக்குன்றிமணி வேர் இவை நாய் மூத்திரத்திலரைத்துக் கண்ணில் அஞ்சனமிடவும்.

### கழுத்துக்கு மேற்பட்ட எல்லா நோய்களுக்கும்

ஞாயிற்றுக்கிழமையன்று மிளகு தக்காளிசமூலம் கொண்டு வந்து நிழலிலுலர்த்தி பொடித்துக் காலாழாக்குப் பசுவின்நெய் யில் வெருகடித் தூள்போட்டுக் காய்ச்சி வாய்நிரம்ப அவல்போட்டு நாசியிலிட்டு, ஒரு நாழிகைத் தலையைப் பிடித்திருந்து விடவும். இப்படி நாலு நாள் செய்யவும். உப்பு புளி நீக்கவும். சகல பீனிசங்களும் திரும்.

### பீனிசத்திற்கு

மிளகு படி ஒன்று, நல்லெண்ணெய் படி ஒன்று இவ்விரண்டையும் காய்ச்சி மிளகு மிதந்தபின்பு, இறக்கி நன்றாய் ஆறியபின் வடித்துச் சாயங்காலம் தலைமுழுகி வரத் திரும்.

### மண்டைப் பீனிசத்திற்கு

சடைக் கஞ்சா ஒரு பலத்தை நன்றாய்ச்சுத்தி செய்து அத்துடன் சாதிக்காய் இரண்டை வெதுப்பிப் பொடித்ததும், அபினி விராகன் எடை ஒன்றும் சேர்த்து நன்றாய்ச் சூரணித்து, வெருகடித்தூள் நல்லெண்ணெயிலிட்டுக் காய்ச்சி, ஒன்றுவிட்டு ஒரு நாளும், பின்பு நாலு நாளைக்கு ஒரு நாளும் தலைமுழுகி வரவும். உப்பு புளி நீக்கவும்.

### இருமல், நெஞ்சிற் கோழைக் கட்டுக்கு

பசுவின்நெய் ஒரு படி காய்ச்சி யதில் பனைவெல்லம் முக்கால் வீசை போட்டு உருகும் போது, கருங்கொள் பொடிச் செய்தது ஒரு பிடி மாப்போட்டுக்கிண்டி இராத்திரி வெந்நீரிற் குளித்துச் சாப்பிட்ட பின்பு ஷை மருந்து மூன்று நாள் சாப்பிடவும். கை கண்டது.

### ஏலாதிக் குளிகை

ஏலம், கிராம்பு, நாகப்பூ, வில்வப்பழத்தின் சதை, நெற் பொரி, தினையரிசி, முத்தக்காசு, சந்தனம், முடக்கொற்றான் விதை இவைகளைப் பொடி செய்து தேனிற் கொள்ள வாந்தி-இரைப்பு-பித்தம் இவை திரும்.

## பிரபலாதிக் குளிகை

பொன்னுங்கண்ணிவேர், கையாந்தகரைவேர், நொச்சியிலை, ஆடாதோடையிலை, வேப்பிலை, கற்கடகசிங்கி, திரிகடுகு, இந்துப்பு, கல்லுப்பு, வளையலுப்பு, பொட்டிலுப்பு, தட்டுப்பு, ஓமம், பெருங்காயம், முத்தக்காசு. அரத்தை, கொடிவேலிவேர், தேவதாரம், மரமஞ்சள், மஞ்சள், வட்டத்திருப்பிக்கிழங்கு, மஞ்சிட்டி, கடுகுரோகிணி, அரேணுகம் இவைகளை வெள்ளாட்டுச்சிறு நீரிலரைத்துக்குன்றிமணியளவு மாத்திரைகள் செய்து நிழலிலுலர்த்தி, இஞ்சிச்சாற்றில் கொடுக்கப் பழையசுரம், மூன்றும் முறைசுரம், நாலாம் முறைசுரம், சன்னி இவைகள் தீரும்.

## அமிருதாதிச் சூரணம்

மேற்றோல்நீக்கிய சீந்திக்கொடியை நறுக்கி யிடித்து தண்ணீர் விட்டுப் பிழிந்து வடிகட்டித் தெளிவை யிறுத்துவிட்டுப் பிழிந்து நிழலிலுலர்த்தி யெடுத்து சர்க்கரை, வெட்டிவேர், சீரகம், லவங்கப் பத்திரி, கோஷ்டம், நெல்லி முள்ளி, நிலப்பனைக்கிழங்கு, ஏலம், அரேணுகம், முந்திரிப்பழம், குங்குமப்பட்டை, சிறுநாகப்பூ, தாமரைவளையம், தாமரைதாது, சந்தனம், செஞ்சந்தனம், திரிகடுகு, அதிமதுரம், நெற்பொரி, அமுக்கராக்கிழங்கு, தண்ணீர் விட்டான் கிழங்கு, நெருஞ்சிவேர், இவை வகைக்குப் பலம் ஒன்று; கற்கடகசிங்கி, சாதிக்காய், தக்கோலம் இவைகளைச் சூரணித்து, இச்சூரணத்திற்கு இரட்டிப்பு சீந்திற் சர்க்கரை சேர்த்து அரைத்துக் கொண்டு, கற்கண்டு, தேன், பசுவின்நெய் இவற்றிற் கொள்ள, க்ஷயம், கைகாலெரிவு, எலும் புருக்கி, மோர்போலிறங்குகிற மூத்திரக்கிரீச்சரம், நீரிழிவு, குடல்வாயு இவை தீரும். பத்தியமாய் இருக்கவும்.

## சரங்கிரக் குழம்பு

தாதுவளம்பூ பலம் நான்கு, முருங்கைப்பூ பலம் நான்கு, தண்ணீர்விட்டான்கிழங்கு பலம் மூன்று, நெருஞ்சிவேர் பலம் ஒன்று, நிலப்பனைக்கிழங்கு பலம் ஒன்று, நன்னாரிவேர் பலமிரண்டு, அதிமதுரம் பலம் இரண்டு, ஏலம் பலம் ஒன்று, இவைகளைச் சூரணித்துப் பதக்குப் பசுவின்பாலைக் குழம்பாய்க் காய்ச்சி மேற்படிச் சூரணத்தைப் போட்டுக்கிளறி, நெய்-தேன்-சர்க்கரை வகைக்குப் பலம் பத்து சேர்த்து பதமாகக் கிண்டி இறக்கிக் கொண்டு, தான்றிக்காய்ப் பிரமாணம் காலையில் சாப்பிட, பிர

மேகம், எலும்புருக்கி, பெரும்பாடு இவை தீரும். தாது விருத்தி யுண்டாகும். கைப்பு, புளிப்பு நீக்கவும்.

### தாகத்துக்கு

கொத்துமல்லி, அதிமதுரம், கோஷ்டம், சீரகம், தாமரை வளையம்-ஆல்-அரசு-அத்தி, இஞ்சி, நாவல் தளிர்களும் மரப்பட்டைகளும் நெல்லி முள்ளி, இவைகளை யரைத்துச் சீனிச் சர்க்கரை அல்லது முலைப்பால் விட்டரைத்துத் தேற்றான்விதைப் பிரமாணம் குளிகை செய்து உலர்த்தி உட்கொள்ளத் தீரும்.

### சுக்காதிச் சூரணம்.

சுக்கு, மிளகு, திப்பிலி, ஓமம், நற்சீரகம், கருஞ்சீரகம், இவை வகைக்குப் பலம் ஒன்று பெருங்காயம் விராகன் எடை ஐந்து இவைகளை வெதுப்பிச் சூரணித்து, வெருகடிப் பிரமாணம், தேன் அல்லது நெய்யிற் கொள்ள, பசிதீபன முண்டாகும். இருமல் வெள்ளோக்காளம் தீரும். புளிப்பு, கைப்பு நீக்கவும்.

### வில்வாதி லேகியம்

வில்வவேர் பலம் 30, நான்கு வெள்ளத் தண்ணீர் விட்டு மூன்று நாளெரித்து நான்காம் நாள் நாலிலொன்ருய்க் காய்ச்சி வடித்து அதில் வெல்லமும், பழம்புளியும் வகைக்குப் பலம் ஐந்து கூட்டிக் கரைத்து குழம்பாகக்காய்ந்தபின்பு, சுக்கு, மிளகு, திப்பிலி, சீரகம், செவியம், தாளிசபத்திரி, சிறுநாகப்பூ இவை வகைக்குப் பலம் ஒன்று, இலவங்கம், கடுக்காய் இவற்றின் சூரணம் வகைகுப் பலம் இரண்டு இவைகளைச் சூரணித்துப் போட்டுக்கிண்டி, தேனும், நெய்யும் விட்டுக் கிளறி வைத்துக் கொண்டு, மூன்று காசியெடை வீதம் கொள்ள, வாயில் நீரூறல், இருமல், வெள்ளோக்காளம், சிலேட்டும் விகாரம், ஆகிய நோய்கள் தீரும். பசி தீபன முண்டாகும்.

### ஆமசுரத்துக்கு

முத்தக்காசு, சந்தனத்தூள், பற்படாகம், சிந்திற்றண்டு, விலாமிச்சம்வேர், கொத்துமல்லி, தேசாவரம், கோஷ்டம், சீரகம், சுக்கு, திப்பிலி, திப்பிலிமூலம், இவை வகைக்கு விராகன் இரண்டைத்தட்டி இளநீர்விட்டுக் காய்ச்சிக் கொடுக்க எலும்பைப் பற்றியசிரமங்கள், உடம்பு கனத்துப் பாரமாய், மலபந்தமாய், சிறு நீர் அதிகமாய், அசிரணமாய், தீபனமில்லாமலிருக்கிற ஆமசுரம் இவை தீரும்.

## சகல சுரத்துக்கும்

நிலக்குமிழ், பாதிரி, வில்வம், சிறுமுன்னை, வாகை, நெருஞ்சி, கூத்தங்குதம்பை, தொட்டாற் சிணுங்கி, முள்ளி, சிறு காஞ்சொறி, சிற்றுமுட்டி, பேருமுட்டி, பொன்முசுட்டை இவைகளின் வேர், கண்டங்கத்திரி, பேய்ப்புடல், தூதுவளை, சீந்திற்கொடி, ஆடா தோடை, பற்படாகம், காமப்பூ, தேவதாரம், சிறுதேக்கு, சுக்கு, கொத்துமல்லி, இவை வகைக்கு விராகன் எடை இரண்டு, கொண்டு இடித்ததில் இருநாழிநீர்விட்டு உழக்காய்க் காய்ச்சிக் கொடுக்கத் தீரும்.

## பித்த சிலேட்டுமச் சுரத்துக்கு

சுக்கு, மிளகு, திப்பிலி, வெட்பாலையரிசி, கடுக்காய், தான்றிக் காய், நெல்லிமுள்ளி, சிறுவழுதுணை, முத்தக்காசு, பொன் முசுட்டைவேர், நிலவேம்பு, கோட்டம், இவை வகைக்கு விராகன் எடை இரண்டில் இளநீர் படி ஒன்று வார்த்து உழக்காய்க் காய்ச்சிக் கொடுக்கவும்.

சிறுகாஞ் சொறிவேர், இருவேலிவேர், கடுகுரோகணி, சுக்கு, கோஷ்டம் இவை வகைக்கு விராகன் எடை இரண்டை ஒரு இள நீர்விட்டுக் காய்ச்சிக் கொடுக்கப் பித்தசுரம் போம்.

பித்த சுரத்தின் குணம் :—குளிரும், பின்தாக முண்டாகும், சிலேட்டுமம், வாயாலெடுக்கும், உடம்பு மயக்கமாயிருக்கும், செவி நோகும், கண்சிவக்கும், கண்ணில் நீர் பாயும், வாயில் ரத்தம் விழும், நித்திரையிராது, நாவுலரும், காதடைக்கும், காது கேளாது.

## விக்கலுக்கு

மிளகு, சாம்பிராணி, மனோசிலை, பசுவின்நெய் இவை சரி கூட்டிச் சுங்கானில் புகைக்கவும், அல்லது பருத்திக்கோல், மயி லிறகு, கோணிப்பட்டு இவைகளைச் சுட்டுக் கொம்புத்தேனிற் கொள்ளவும்.

## பித்தச்சுரத்துக்கு

முத்தக்காசு, நன்னாரிவேர், சீந்தில்கொடி, முந்திரிப்பழம், நெய்தற்கிழங்கு, விலாமிச்சம்வேர், சந்தனம், பேய்ப்புடல், சதா வேரி இவைகளைக் குடிநீரிட்டுச் சர்க்கரை தேன் இவை சேர்த்துக் கொள்ளத் தீரும்.

நன்னாரிவேர், தாமரைக்கிழங்கு, சந்தனம், விலாமிச்சம்வேர், முத்தக்காசு, அதிமதுரம், நெய்தற்கிழங்கு, இலுப்பைப்பூ, சதாவேரி, இவைகளைக் குடிநீரிட்டுச் சர்க்கரை, தேன் இவைகளைச் சேர்த்துக் கொள்ளத் தீரும்.

## சிலேட்டுமச் சுரத்துக்கு

கண்டங்கத்திரிவேர், சிறுகாஞ்சொறிவேர், கண்டுபரங்கி, சுக்கு, சீந்திற்கொடி, முத்தக்காசு, இவைகளைக் கஷாயமிட்டுக் கொடுக்கவும். கொடுக்கும்போது சிறிது திப்பிலிப் பொடியும் கூட்டவும்.

பேய்ப்புடல், சீந்திற்கொடி, நிலவேம்பு, முத்தக்காசு, கடுக்காய், நெல்லிப்பருப்பு, தான்றிக்காய், தேவதாரம், கோஷ்டம், திப்பிலி, கொன்றைவேர் இவைகளைக் கஷாயமிட்டுத் திப்பிலிப் பொடியும் தேனும் சேர்த்துக் கொள்ளத் தீரும்.

கண்டங்கத்திரி, சுக்கு, சீந்திற்கொடி, இவைகளைக் கஷாயமிட்டு, வறுத்த திப்பிலிப் பொடியும் சேர்த்துக் கொள்ளத் தீரும்.

## பித்தச்சுரத்துக்கு

பேய்ப்பீர்க்கு, பேய்ப்புடல், சீந்திற்கொடி, நிலவேம்பு, முத்தக்காசு, கடுக்காய், நெல்லிப்பருப்பு, தான்றிக்காய் இவைகளைக் கஷாயமிட்டுத் தேன் கலந்து கொடுக்கத்தீரும்.

## குளிர்சுரத்துக்கு

இராமத்துளசிவேர், விஷ்ணுக்கரந்தி, சுக்கு, இவைகளைக் கஷாயமிட்டுக் கொடுக்கவும்.

## பித்தச்சுரத்துக்கு

விளாமிச்சம்வேர், வெட்டிவேர், சுக்கு, முத்தக்காசு, பற்படாகம், சந்தனம், நெற்பொரி, இவைகளைக்கஷாயமிட்டுக் கொடுக்கவும்.

## சுரதூலசன்னி இவைகளுக்கு

செம்முள்ளிவேர், நிலவேம்பு, தேவதாரம், முத்தக்காசு, பரடைக்கிழங்கு, வாயுவிளங்கம், மரமஞ்சள், இவைகளைக் கஷாயமிட்டுத்திப்பிலிப்பொடியும் கூட்டிக் கொடுக்க சுரசூலை சன்னி இவைகள் தீரும்.

## தாபசுரம், வாந்திக்கு

கோரைக்கிழங்கு, பற்படாகம் சந்தனச்சிராய், விலாமிச்சம் வேர், சீந்திற்கொடி, சுக்கு இவைகளைக் கஷாயமிட்டுச் சர்க்கரை போட்டுக் கொடுக்கத் தீரும்.

## சகல சுரத்துக்கும்

குடசப்பாலையரிசி, விலாமிச்சம்வேர், நிலவேம்பு, வெட்டி வேர், நெய்தற்கிழங்கு, சந்தனம், நெய்ச்சட்டிப் பூண்டு, மஞ்சள், முத்தக்காசு, பெருங்குரும்பை, இலுப்பைப்பூ, முந்திரிப்பழம் அதிவிடயம், மரமஞ்சள் கோஷ்டம் கடுக்காய், வில்வவேர், பாவட்டைக்கிழங்கு, பேய்ப்புடல், பேரீச்சம்பழம், திப்பிலி, நன்னாரி வேர், திப்பிலி மூலம், சுக்கு, மிளகு, ஆடாதோடைவேர், சதா வேரி, பற்படாகம், கொன்றைவேர், சிறுகாஞ்சொறிவேர், வேப் பம்பட்டை, சீந்திற்கொடி இவைகளைக் குடிநீரிட்டுக் கொள்ளச் சகல சுரமும் தீரும்.

## முடசைசுரம்-சன்னிசுரத்துக்கு

சீந்திற் கொடி விராகன் எடை ஒன்று, ஆடாதோடை இலை விராகன் எடை இரண்டு, செம்முள்ளி விராகன் எடை நான்கு, பற்படாகம் விராகன் எடை எட்டு, சுக்கு விராகன் எடை பதினாறு, கண்டங்கத்திரி விராகன் எடை முப்பத்திரண்டு, சித்தா முட்டி விராகன் எடை அறுபத்து நான்கு ஆக இவைகளைச் சேர்த்து ஆறுபடி நீர்விட்டு உழக்களவாய்க்காய்ச்சிக் கொடுக்கத் தீரும்.

## வாதச்சுரத்துக்கு

சிறு முன்னைவேர், பாதிரிவேர், சிற்றாமல்லிவேர், பேராமல்லி வேர், குமிழம்வேர், சிறுகாஞ்சொறிவேர், கண்டங்கத்திரிவேர், நெருஞ்சிவேர், வாகைவேர், பெருங்குமிழம்வேர், கோஷ்டம், சுக்கு திப்பிலி இவைகளை இடித்து ஆறுபடி நீர் விட்டு, உரியளவாய்க் காய்ச்சிக் கொடுக்கவும். சன்னிபாத சுரமும் தீரும்.

## வாய்வுக்கு

திப்பிலி, திப்பிலிமூலம், செவியம், கொடிவேலி வேர், சுக்கு இவை வகைக்கு விராகன் எடை ஒன்றை எடுத்து ஒருபடி நீர் விட்டு உழக்காய்க்காய்ச்சிக் கொடுக்கவும்.

## சுரத்துக்கு

பெருமரப்பட்டை, மலைதாங்கிவேர், வில்வப்பழத்தோடு, சுக்கு, கோரைக் கிழங்கு, குடசப்பாலைப்பட்டை, ஓமம், மாதுளை ஓடு, வில்வவேர் இவை வகைக்கு விராகன் எடை மூன்று; சாதிக்காய், சாதிபத்திரி கிராம்பு, அதிவிடயம் இவை வகைக்குப் பணவெடை ஒன்று; இவைகளைத் தட்டிப்போட்டுப் பொன்னிறமாய் வறுத்து, நாழி நீர் விட்டு உழக்காய்க்காய்ச்சி ஜாதிக்காய் முதலியவைகளைப் பொடிசெய்து போட்டுக்கொடுக்கத் தாபசுரம், முடைசைசுரம், அதிசாரசுரம், முதலியன தீரும்.

## குமரி நெய்

கற்றாழைச்சாறு, சதாவேரிச்சாறு, முசுமுசுக்கைச்சாறு, சிறுகீரைச்சாறு, சீந்திற்கொடிச்சாறு, நன்னாரிவேர்ச்சாறு, தாமரைக்கிழங்குச்சாறு, நெய்தற்கிழங்குச்சாறு, இவை வகைக்குப் படி இரண்டு, பசுவின் நெய், பால் வகைக்குப் படி இரண்டு, இவற்றுடன் ஏலம், கிராம்பு, அதிமதுரம், லவங்கப் பத்திரி, முந்திரிப்பழம், கொத்தமல்லி, சுக்கு, மிளகு, திப்பிலி, பேரீச்சம் பழம், விளாமிச்சம்வேர், சந்தனம், செண்பகமொட்டு, சீரகம் இவை வகைக்கு விராகன் எடை ஒன்றை பாலிலரைத்துச் சேர்த்துக்காய்ச்சிப் பதமாய் வடித்துக்கொண்டு தக்க அளவில் கொடுக்கச் சகல சுரமும், உள்காய்ச்சல், மேகவட்டை, முதலிய நோய்களும் தீரும். பத்தியம் :—உப்பு, புளி, புகை நீக்கவும்.

## ஆடாதோடை நெய்

ஆடாதோடையிலைச்சாறு, நெய், பால் இவை வகைக்குப் படி இரண்டுடன் நிலவேம்பு, குடசப்பாலையரிசி, கோரைக்கிழங்கு, அதிமதுரம், சந்தனம், சீந்திற்றண்டு, இலுப்பைப் பூ, நன்னாரி வேர், விலாமிச்சம்வேர், தாமரைக் கிழங்கு, பெருங்குரும்பை இவை வகைக்கு விராகன் எடை ஒன்றை பால் விட்டரைத்துச் சேர்த்துக்காய்ச்சிப் பதமாய் வடித்துக் கொள்ள இரத்தபித்தம் தீரும்.

## நாவல் நெய்

நாவல்பட்டையும், நாவல் தளிரும் வகைக்குப் பலம் நாலில் இரண்டு படி நீர் விட்டு ஒரு படியாகக்காய்ச்சி வடித்ததில், தயிர் வடி நீர், புளியாரைச்சாறு, நெய் இவை வகைக்குப் படி ஒன்றும், சந்தனம், அதிமதுரம், வெள்ளிலோத்திரம், இலவம்பிசின்,

தாமரைக்கிழங்கு, சிறுநாகப்பூ, முந்திரிப்பழம், குடசப்பாலையரிசி, காட்டகத்திப் பூ, பேரீச்சம்பழம், அதிவிடயம் இவை வகைக்கு விராகன்எடை ஒன்றை பால் விட்டரைத்து அதை மேலவற்றோடு சேர்த்துப் பதமாய்க்காய்ச்சி வடித்துக்கொண்டு தக்க அளவில் கொடுக்க இரத்தபித்தம் தீரும்.

## பஞ்சகோலாதிகுக்கில் கிருதம்

திப்பிலி, திப்பிலி மூலம், வில்வவேர், ஆடாதோடை, மலை சிந்திற்கொடி, கொடிவேலிவேர், செவியம், வட்டத்திருப்பி, வேம்பு, நல்லவேம்பு, முத்தக்காசு, வசம்பு, ஆடுதின்னாப்பாளை வேர், கொத்துமல்லி, தேவதாரம், கொன்றைவேர், புங்கம்வேர், முட்காவளைவேர், சாறணைவேர், பேய்ப்புடலின்வேர், கண்டங் கத்திரிவேர் இவை வகைக்குப் பலம் இரண்டை யெடுத்து இடித்து பத்துப்படி நீர் விட்டு ஐந்துபடியாகக்காய்ச்சி வடித்து அதில் நெய் படி ஒன்று சேர்த்ததில், கடுகு, பலம் இரண்டு, சத்திச் சாரம், லவங்கபத்திரி, லவங்கப்பட்டை, ஏலம், நாகப் பூ, வசம்பு, கோஷ்டம், கருங்குங்கிலியம், வெள்ளைக்குங்கிலியம், கண்டு பாறங்கி, திப்பிலி மூலம், கொடிவேலிவேர், கடுகுரோகணி, அதி விடயம், சவுக்காரம், பவளத்துத்தம், குடசப்பாலைவேர், சீரகம், கருஞ்சீரகம், வட்டத்திருப்பி, சடாமாஞ்சி, மஞ்சிட்டி, கடுகு, வெண் கடுகு, பெருங்குரும்பை, யானைத்திப்பிலி, பெருங்காயம், விளாம் பிசின், அதிமதுரம், பெருமரப்பட்டை, நிலவேம்பு, ஓமம், பஞ்சல வணம் இவை வகைக்கு விராகன்எடை இரண்டு; இவைகளைப் பாலிலரைத்துச் சேர்த்துப் பதமாய்க் காய்ச்சி வடித்துக் கொண்டு, மேகப்புண், அரையாப்பு இவைகளுக்குக் கொடுக்கத் தீரும். அன்றியும் கண்டமாலை, கழல்வாதம், பவுத்திரம், மூல ரோகங்கள், பிளவை, அண்டவாதம், கர்ணரோகங்கள் நாசி ரோகங்கள், வாய்நோய்கள், குட்டகுழாய்கள், கன்னப் பிளவை, யோனிநோய்கள், பீலிகை, முதலியனவெல்லாந் தீரும். பத்தியம் :—புளி, புகை நீக்கவும்.

## ஆடாதோடை நெய்

ஆடாதோடைச்சாறு, வெள்ளுள்ளிச்சாறு, இஞ்சிச்சாறு, நல்லெண்ணெய் இவை வகைக்குப் படி ஒன்றில் கண்டுபாறங்கி, கற்கடக சிங்கி, கோட்டம், தாளிசப்பத்திரி, கிராம்பு, திப்பிலி மூலம், செவியம், சுக்கு, மிளகு, திப்பிலி, இந்துப்பு, சடாமாஞ்சி, கண்டங்கத்திரி, வெங்காரம், அரப்பொடி இவை வகைக்குப் பலம்

ஒன்றைச் சூரணித்துச் சேர்த்துப் பதமாய்க்காய்ச்சி வடித்துத் தேன் சேர்த்துக்கொள்ள சகல இருமல்களும் தீரும்.

### கந்தகச் சூரணம்

சுத்தி செய்த கந்தகம் பலம் ஆறு, கொடிவேலிவேர்ப் பட்டை பலம் ஒன்று இவைகளைச் சூரணித்துத் தேன், எருமை நெய் இவற்றில் உட்கொள்ள, சகல குஷ்டங்களும் தீரும். பத்தியம் காக்கவும்.

### ஆடாதோடைக் கிருதம்

செம்பருத்தியிலை, ஆடாதோடையிலை, சிந்திற்றண்டு, பெருங் குரும்பை, அதி மதுரம் இவை வகைக்குப் பலம் இரண்டை எடுத்துக் குடிநீர்விட்டு இடித்து, அதனளவு நெய் சேர்த்துப் பதமாய்க்காய்ச்சி வடித்து உட்கொள்ள, இரத்தப்பித்தம், பெரும் பாடு இவைகள் ஏழுநாளில் தீரும்.

### மயிர் உதிர்வதற்கு

(1) பேய்ச்சுரைக்காயும், அரிதாரமும், கூட்டியரைத்துப் பூசினாலும்,

(2) க ளிப்பால், காவிக்கல் மூன்று, அரிதாரம் ஒன்று, இவைகளைக் கூட்டியரைத்துப் பூசினாலும்,

(3) அரிதாரம், மனோசிலை, இந்துப்பு, சங்குச்சுண்ணாம்பு, இவைகளைச் சேராங்கொட்டைத் தைலத்திலரைத்துப் பூசினாலும், மயிர்கள் உதிர்ந்து விடும்.

### விக்கல்முதலியவைகளுக்கு

மெழுகு. சாம்பிராணி, மனோசிலை, பசுவின்நெய் இவைகளை அடிச்சட்டிக் காந்திப்போகாமல் பதமாய்க்கிளறி அளவிட்டு உட்கொள்ள க்ஷயம், பிரமியம், வாயில் நீரோடல், ருசியின்மை, விக்கல், பீலிகை, குன்மம், முதலியன தீரும்.

### வாந்தி, ஓக்காளத்துக்கு

பருத்திவிதைப்பருப்பும், நெற்பொரியும் வகைக்கு ஆழாக்கு, ஒன்று, ஏலம் விராகன் எடை ஐந்து, திப்பிலி விராகன் எடை பத்து, இவைகளைச் சூரணித்துச் சர்க்கரை கலந்து உட்கொள்ளத் தீரும்.

### சுருங்காதிச் சூரணம்

சிறுவழுதலை, கண்டங்கத்திரி, சுக்கு, மிளகு, திப்பிலி, கடுக்காய், தான்றிக்காய், நெல்லி முள்ளி, கண்டுபாறங்கி, கீழாநெல்லி, பஞ்சலவணம் முதலியவைகளைச் சூரணித்து வெருகடியளவு வெந்நீரிற்கொள்ள, ஏங்கல், விக்கல், இளைப்பு, மேல்மூச்சு, சுவாசம், பீனிசம் முதலியன தீரும்.

### முலைப்பாலுண்டாக

அதிமதுரம், நெல்லிக்காய்ச்சாறு, பால், சர்க்கரை இவைகளைச்சரியாகக் கூட்டி உட்கொள்ள, முலையில் பால் சுரக்கும்.

### சகலகிராணிக்கும்

சாதிக்காய், இந்துப்பு, சுத்தி செய்த சாதிலிங்கம், அதிவிடயம், சுக்கு, பாலில் வேகவைத்து லர்த்திய கருப்பூமத்தன் விதை இவை வகைக்கு விராகன் எடை ஒன்றை எடுத்துக் கருப்பூமத்தன்காய்ச்சாற்றில் ஒருசாமமரைத்துக் குன்றிமணியளவு மாத்திரைகள் செய்து தேனிற் கொள்ளத் தீரும்.

(2) பொன் முசுட்டை வீசை யெடை ஐந்து கொண்டு ஒரு சட்டியில் தண்ணீர் விட்டுக் காற்படியாய் சுண்டவைத்து மெழுகு பதத்தில் எடுத்ததில் இலந்தைக்காய்ப்பிரமாணம் தேனிற் கொடுக்க அதிசாரக்கிராணி, வாயுக்கிராணி, மூலக்கிராணி, கழிச்சல் முதலியன தீரும்.

### இரத்தவாந்திக்கு

விலாமிச்சம்வேர், சந்தனம், சுக்கு, அழிஞ்சிப்பருப்பு, இரத்தச்சந்தனம், கிராம்பு, திப்பிலி, திப்பிலிமூலம், ஏலம், நாகப்பூ, முத்தக்காசு, நெல்லிமுள்ளி, கற்பூரம், கூகை நீறு, சாதிப்பத்திரி, காரருபா, இவைகளை ஓர் அளவாகக் கொண்டு பொடித்து சல்லித்து அதற்கு எட்டிலொருபாகம் சர்க்கரை சேர்த்து, வெருகடியளவு கொள்ளத் தீரும்.

(2) விலாமிச்சம்வேர், கொத்துமல்லி, சிற்றுமுட்டிவேர், சுக்கு இவை வகைக்கு விராகன் எடை இரண்டை முறைப்படிக் குடிநீரிட்டு, காலை மாலை—மூன்று நாள் உட்கொள்ளத் தீரும். நெடுநாள் சென்ற நோயாயின் எட்டு நாள் கொடுக்கத் தீரும். கைகண்டது.

## சூலை நோய்களுக்கு.

(1) நஞ்சுண்டான் வேர், சங்கம்வேர், அமுக்கிருங்கிழங்கு, கழற்சிவேர், மிளகறணைவேர், இவை வகைக்கு பத்துபலம் எடுத்துக் குறுக நறுக்கி நான்கு வள்ளம் நீர் விட்டு, குடிநீராக்கிக் குடித்துவர சூலை நோய்கள் தீருவதன்றி, கை கால்களில் வரும், வெண்குட்டமும் கருங்குட்டமும் தீரும்.

(2) புரசம்பட்டையை மேற்புறணி சீவி குறுக நறுக்கி யிடித்தது பலம் நான்கு, அதில் நான்குமரக்கால் நீர்விட்டு நாலிலொன்ருய்க்காய்ச்சிப் பிசைந்து வடிகட்டி பின்பு, கால் பாகமாகச் சுண்டக்காய்ச்சி அத்துடன் சுக்கு, மிளகு, வெள்ளுள்ளி, வசம்பு, இவைகளை வெவ்வேருக ஒவ்வொரு பலமாகக் கொண்டு, மேற்படிக் குடிநீரில் அரைத்துக் கரைத்து, அடுப்பிலிட்டு, அடிபிடிக்காமல் சிறு தீயால் காய்ச்சி மெழுகுபதத்தில் எடுத்து கழற்சிக்காய் அளவு காலை மாலை சாப்பிட்டு வர சூலை நோய்கள் போம்.

## அதிசாரக்கழிச்சலுக்கு.

பொன் முசுட்டைவேரை எருமை மோரிலரைத்து அரசு இலையில் வைத்துத்தைத்து மேற்படி மோரில் ஏழுதரம் வேக வைத்து, தேனில் இரண்டு நேரம் கொடுக்கத் தீரும்.

## சந்திகுன்மத்துக்கு.

சுக்கட்டி களிப்பாக்கைச், சூரணித்து தேனில் குழைத்து சாப்பிட்டதற்குப் பின்பு கொடுக்கத் தீரும்.

## சூலை நோய்க்கு.

சாதிக்காய், சாதிப்பத்திரி, கஞ்சாவிதை, சுத்திசெய்த சாதிலிங்கம், முருங்கை விதை, இவை வகைக்கு விராகன் எடை மூன்றுகொண்டு கல்வத்திட்டு முருங்கைப்பட்டைச்சாறு விட்டரைத்து, இரண்டு கோழிமுட்டையில் வைத்துச் சீலைமண் செய்து அக்கினிபுடம் வைத்து, இரும்புக்கதிரில் கிளரி, திரளும் பருவத்தில் எடுத்து, ஆறிய பின்பு சுண்டியதில் சுண்டைக்காய் அளவுவைத்து காலை மாலை சாப்பிட்டுக் காறபடித் தண்ணீர் இரண்டு வேளையும் 24 நாள் உட்கொள்ளவும். புளிநீக்கவும். ஒரு மண்டலங்கொள்ள சூலை நோயாலுண்டான கை கால் முடங்கல் முதலியவை தீரும்.

## வாயுவுக்கு

வாகைப்பட்டை, மாம்பட்டை, சங்கம் வேர்ப்பட்டை, சாறணை வேர், மிளகு, வெள்ளை வெங்காயம், இவை வகைக்கு விராகன் எடை மூன்றை நீர்விட்டரைத்து, விளக்கெண்ணெயும் பசுவின் நெய்யும், வகைக்குப் படி ஒன்று கலந்து அதில் போட்டுப் பதமாய்க்காய்ச்சி இறக்கும்போது எட்டுக்கடுக்காயைப் பொடி செய்து போட்டுக் கிண்டி எடுத்ததில் வேளைக்கு ஒரு உருண்டையாகக் காலை மாலை உட்கொள்ளவும். புளி நீக்கிப் பத்தியமாய் இருக்கவும்.

## மூல நோய்க்கு

நீர்ப்பூலாவின் வடவேரைப் பருமனுகவெடுத்து மேல் கருப்பைச்சீவிப்போட்டு சிவந்த பட்டையை எடுத்து, இதன் கால் பாகம், உதியம் பட்டையும், வறுத்த ஓமமும் அரைக்காசி யெடையும் அரைத்து எடுத்து தக்க அளவில் தயிர்த் தெளிவு நீரில் கொடுக்கவும். ஆண்பிள்ளையானுல் ஏழு உருண்டையும், பெண் பிள்ளையானுல் ஐந்து உருண்டையும், கொள்ளவேண்டியது. ஒவ்வொரு இராத்திரிக்கும் கொத்துமல்லி, மிளகு, சீரகம்,ஏலம், சுக்கு இவை வகைக்கு ஒரு விராகனுக்குத் தட்டிப் பொட்டளங்கட்டி இரண்டுபடி நீர்விட்டுக் குடிநீர் வைத்துச் சாப்பிட்டபின்பு கொடுக்கவும்.

## தாது விருத்திக்கு

வெள்ளைச்சாறணைவேர், லவங்கப்பத்திரி, பேரீச்சம்பழம், முந்திரிப்பழம், கடுக்காய்ப் பொடி, தான்றிக்காய்ப்பொடி, நெல்லிப்பருப்பு, உழுந்துப்பருப்பு, இவை வகைக்கு விராகன் எடை ஒன்று, பூமிச்சர்க்கரைக்கிழங்கு, இந்துப்பு, அபினி, கஞ்சா இவை வகைக்கு விராகன் எடை இரண்டு;இவைகளைப் பொடித்து இளநீர் வார்த்தரைத்துச் சர்க்கரை கலந்து, முள்ளிக்காய் அளவு உருண்டைசெய்து சர்ப்பிடவும். தாதுவிருத்தி, தேகபலம், சீரணசக்தி முதலியனயாவும் பெருகும். ஒரு மண்டலங் கொள்ள, தாதுவிருத்தியதிகமாம். மேகவெட்டையும் தீரும். இன்னும் வாதம், குன்மம், மலக்கட்டு, பாண்டு, விஷபாகம், வீக்கம், காமாலை, மந்தாக்கினி, மூல பேதி, ஏங்கல், இருமல், ஈளை, திமிர், வயிற்றுவலி, வாய்வுகள் எல்லாம் தீரும். கைப்பு, புளிப்பு நீக்கவும். லேகியமாயும் செய்து கொள்ளவும்.

## மண்டைச் சூலைக்கு

பரங்கிப்பட்டையும், கொடுவேலிவேரும், வகைக்குப் பலம் ஐந்து. சுக்கு, திப்பிலி, மிளகு, கருஞ்சீரகம் இவை வகைக்குப் பலம் ஒன்று. இவைகளைச் சூரணஞ் செய்து வெருகடிப் பிரமாணம் தேனில் உட்கொள்ளவும். புளி, புகை நீக்கவும்.

## பரங்கிப்பட்டைச் சூரணம்.

சிவனார்வேம்பு, வெள்ளரக்கு, சீந்திற்கொடி, கையாந்தகரை, சிறுசெருப்படை, சிறுகுருஞ்சான்வேர், சங்கம்வேர், சங்கங்குப்பி வேர், தேற்றான்வேர், அமுக்கரான் கிழங்கு, பூமிச்சர்க்கரைக் கிழங்கு, கொடுவேலி வேர், தமிழஞ்சிவேர், ஊஞ்சல் பட்டை, இவை வகைக்குப் பலம் ஒன்று, கடுக்காய்ப்பொடியும் பரங்கிப் பட்டையும் வகைக்குப் பலம் இரண்டு, இவைகளைச் சூரணஞ் செய்து காலை மாலை இரண்டு விராகன் எடை வீதம் சாப்பிட, சூலைக்கட்டு, வெள்ளை, கைகால்களிலுண்டாகும் வெள்ளை, வாத சூலை, வாதக்கடுப்பு, இவைகள் தீரும். உப்பு, புளி நீக்கவும். ஐந்து மண்டலங் கொள்ளவும்.

## இளநீர்க் குழம்பு.

பசலைக்கிழங்கை அரைத்தது எலுமிச்சங்காயளவு; ஏலம், சீரகம், அதிமதுரம், சாணியிற்கழுவிப் பொரித்த பொரிகாரம், இவைகளை ஓர் அளவாயரைத்தது எலுமிச்சங்காயளவு; உமிக் காந்தல்மரக்காலிலே வேகவைத்த இளநீர்க்காயை கண்திறந்து நீரை வடித்து அதில் மேல்கூறியவைகளைச் சேர்த்துச் சீனிச் சர்க்கரைகூட்டிக் குழம்புசெய்து சாப்பிட, நீரடைப்பு, கல்லடைப்பு, மூத்திர எரிவு, இரத்தமூத்திரம் இவைகள் தீரும். புளி, புகை நீக்கிப் பசுவின்பால், தயிர், கூட்டவும்.

## வாயுவுக்கு.

சுக்கு, மிளகு, திப்பிலி, ஏலம், கண்டுபாரங்கி, இந்துப்பு, அதிவிடயம், எவாச்சாரம், பொன்முசுட்டை வேர், ஓமம், சீரகம், செவியம், சித்திரமூலம், திப்பிலிமூலம், இவை வகைக்கு விராகன் எடை ஐந்தை எடுத்துச் சூரணித்துப் பசுவின்நெய்யிற் கொள்ள தீபனம் ஆரோக்யமுண்டாம். புளி நீக்கவும்.

## உருப்புத்தள்ளிய மூலத்துக்கு.

கருங்குங்கிலியம் பலம் இரண்டை எடுத்துப் பொடித்து எருமைத்தயிரில் கொடுக்கவும். உப்பு புளி நீக்கிப் பச்சரிசிச்சோறும்

எருமைத்தயிரும் கூட்டவும். மூலம் உள்ளுக்கு வாங்கிக் கொள்ளும்.

சுக்கு, மிளகு, திப்பிலி, வெள்ளைவெங்காயம், ஓமம், சீரகம் கருஞ்சீரகம், கொடிவேலிவேர், பெருங்காயம், சிறுதேக்கு, பஞ்சலவணம், செவியம் இவைகளை ஓர் நிறையாய் வறுக்கவேண்டியவைகளை வறுத்துச் சூரணித்து நல்லெண்ணெயிற் குழப்பிக் கொடுக்கவும்.

## வாயுவுக்கு.

ஓமத்தைச் சூரணித்துக் கழற்சியிலை, குப்பைமேனியிலை, கையாந்தகரையிலை, நொச்சியிலை, சாறணையிலை, இவைகளை யிடித்துப்பிழிந்த சாற்றில்பிசறி மூன்றுநாள் அமுக்கிவைக்கவும். பின் உலர்த்திச் சூரணித்து வெள்ளெருக்கம்வேர்ப்பட்டை, அரசம்பட்டை, சங்கம்வேர்ப்பட்டை, புங்கம்வேர்ப்பட்டை பெருமரத்துப் பட்டை, குருஞ்சான்வேர், பொன்முசுட்டைவேர், இவை வகைக்கு விராகன் எடை ஐந்து, வெள்ளைவெங்காயம் பலம் ஒன்று, சுக்கு பலம் ஒன்று, பெருங்காயம் விராகன் எடை இரண்டு, திப்பிலி விராகன் எடை ஐந்து, இவைகளைச் சூரணித்து மேற்படி ஓமச்சூரணத்துக்குப் பாதியிடையாகச்சேர்த்துக் கலந்து வெருகடிப்பிரமாணம் உட்கொள்ள வாய்வு, மந்தசன்னி, வாதம், புளியேப்பம், அக்னிமந்தம் இவைகள் தீரும். புளி நீக்கவும்.

## பரங்கிப்பட்டைச் சூரணம்.

பரங்கிப்பட்டை பலம் ஐந்து, ஏலம், செண்பகப்பூ, செங்கழுநீர், கோஷ்டம், அக்கிராகாரம், அதிமதுரம், கருஞ்சீரகம், மரமஞ்சள், சுக்கு, வெள்ளைவெங்காயம், தூதுவளைவேர், அமுக்கருன் கிழங்கு, பேருமுட்டிவேர், வெள்வேல்வேர்ப்பட்டை, இவை வகைக்கு விராகன்எடை ஒன்று, செங்கத்தாரிப்பட்டை, நஞ்சுண்டாம்வேர்ப்பட்டை, விழும்பிவேர்ப்பட்டை, இவை வகைக்கு விராகன்எடை ஐந்து, இவைகளைச் சூரணித்துக் காலை மாலை மூன்றுவிராகனெடைவீதம் வெந்நீரில் நாற்பதுநாள் உட்கொள்ள சூலைநோய், வெடிசூலை, கால்கைமுடங்கல், வாத சூலை இவைகள் தீரும்.

பத்தியம்:—நல்லெண்ணெய், கோழிக்கறி, பிண்ணாக்கு, முருங்கைக்கீரை ஆகாது. துவரைப்பருப்பு, பசுவின்பால் உட்கொள்ளலாம். தயிர், வெள்ளைவெங்காயம், உப்பு இவைகளைப் புளிநீக்கி வெந்நீர் வார்த்து உட்கொள்ளலாம்.

## வயிற்றிலிருந்து பிள்ளைவிழ.

ஓரிலைத்தாமரை சமூலத்தைக் காடியிலரைத்து முலையி லிறங்கத்தடவ விழும்.

சிற்றாமணக்கின்வேரை (முன்தாணி) முன்றுணையில் முடிந்தாலும் பிரசவமாகும்.

அரிதாரத்தை யரைத்துத் தேனில் கொடுத்தாலும் பிறக்கும்.

## நஞ்சுக் கொடிவிழ.

மஞ்சளை முள்ளிக்காயளவரைத்துக் காடியிற்கலக்கி, முன்பு வெல்லத்தைத் தின்னக்கொடுத்து பின்பு டை மஞ்சள் கலக்கியக் காடியைக் கொடுக்க. நஞ்சுக்கொடி விழும்.

## விடாச்சுரத்துக்கு.

மயில்துத்தத்தை வெற்றிலைச்சாற்றிலரைத்து வில்லை செய்துலர்த்திப் புடமிட்டுப் பின்பும் மேற்படிச் சாற்றிலரைத் துலர்த்திப் புடமிடவும். இவ்வாறு ஏழுபுடமிட்டு எடுத்துப் பொடித்துச் சிறிது இடது நாசியில் ஊத, சுரம் போம்.

## பெரும்பாட்டுக்கு.

தென்னம்பாளையை எலுமிச்சங்காயளவரைத்துத் தயிரில் கலக்கிக் கொடுக்கத் தீரும்.

## சூதகவாயுவுக்கு.

தும்பைச்சாறு, குப்பைமேனிச்சாறு, முருங்கைச்சாறு, குக்குடாச்சாறு இவைகளைக் கலந்து கொடுக்கவும். உடனே தீரும்.

## காமாலைக்கு.

வெள்ளைச்சாரணைவேருக்குச் சனிக்கிழமை காப்புக்கட்டி ஞாயிற்றுக்கிழமை கோழிபலி கொடுத்து எடுத்துவந்து, சிறு துண்டுகளாக நறுக்கி, கன்னியழியாப்பெண்பிள்ளை நூற்ற நூலை தனது காலில் மாட்டி தன்தோளளவு பிடித்துச் சரடு திரித்து அவ்வேர்த்துண்டுகளை மாலைகட்டிக் கழுத்தில் போடத் தீரும். ஏழாம்நாள் எடுத்துப்போடவும்.

## உப்புச் செந்தூரம்.

கல்லுப்பு படி ஒன்று கொண்டு தும்பைச்சாற்றிலரைத்து உலர்த்திப்புடமிடக் கருக்கும். பின்பு, சங்கிலைச்சாறு விட்டு அரைத்துலர்த்திப் புடமிட மேற்கண்டபடியே கருத்திருக்கும். குப்பை மேனிச்சாறு வார்த்தரைத்துலர்த்திப் புடமிடச் சற்றே சிவக்கும். மஞ்சேசிலே பணவெடைசேர்த்து மாட்டுப்புளிச்சாண் சாறு வார்த்தரைத்துலர்த்திப் புடமிட நல்ல செந்தூரமாகும். இப்படிச்செய்யின் உப்பு கட்டுப்பட்டு நல்லசெந்தூரமாகும். தேனில் கொடுக்க குன்மவகை எட்டும் தீரும்.

## பவுத்திரத்துக்கு.

நத்தச்சூரிவேரையரைத்து நல்லெண்ணெயிற் குழப்பி முப்பதுநாள் கொடுக்கத்திரும்.

## வயிற்று வலிக்கு.

செங்கற்பொடியையும், மிளகையும் வறுத்து, நீர்விட்டு சுண்டக்காய்ச்சி யிறுத்துக்கொடுக்கவும்.

## விப்புருதிக்கு.

நித்தக்கத்திரி, கொட்டையிலே, இவ்விரண்டையும் வதக்கிக் கட்டவும். அல்லது,

இந்துப்பு, சாரமண்ணு, இவற்றை பேய்க்கும்மட்டிக்காய் சாற்றில் ஊரப்போட்டுக் குடிக்கவும். அல்லது,

ஆகாசக் கருடன்கிழங்கை, எருமைப்பாலிலரைத்துக் குடித்து மேனியிலும் பூசவும். அல்லது,

ஈரவெங்காயத்தையரைத்து எருமைவெண்ணெயில் கலந்து விழுங்கவும். அல்லது,

ஆவாரங்கொழுந்தை நல்லெண்ணெயிலரைத்துக் கட்டவும்.

## பவுத்திரத்துக்கு.

சிற்றாமணக்கிலே, எருக்கமொட்டுப்பூ, இவற்றை வதக்கியரைத்துப் பூசத்திரும்.

வேறு :—சீந்திற் கிழங்கை, எருமைப் பாலிலரைத்துச் சாப்பிடவும். மேற்படி வீக்கத்துக்கு வசம்பு, வெள்ளைப் பூண்டு, கடுகு, கடுக்காய் இவைகளைத் துளசிச்சாற்றிலரைத்துப் பூசவும் தீரும்.

## எலிக்கடிக்கு.

பெருகுருஞ்சான்வேரை பசுவின்பாலிலரைத்து ஐந்து நாள் கொடுக்கவும். பின்னும் நாய்ப்பீர்க்கன்விதையும் மேற்படித் தழையும் வேளைவேரும் முதலியன கூட்டி அரைத்து மூன்று நாள் உட்கொள்ள எவ்வித எலிக்கடியும் தீரும். கைகண்டது.

## மலட்டுவலிக்கு.

பொன்னாங்கண்ணிவேர், சிறுபூளைவேர், நல்லவெல்லம் இவைகளைப் பசுவின்பால் விட்டரைத்து ஒரு நாள் கொடுக்கவும். கடும் பத்தியம் இருக்கவும். பாலும் சோறும் சேர்க்கலாம். வயிற்று வலி தீரும்.

## கண்வலிக்கு.

மஞ்சள், கருங்குங்கிலியம், மிளகு இவைகளைப் பொடித்துச் சீலையில்வைத்துத் திரிசெய்து வலிக்கிறபக்கத்துநாசியில் புகை பிடிக்கத்தீரும்.

## பேய்நாய், நரி, கடிக்கு.

ஆகாசக்கருடன்கிழங்கு, கருஞ்சீரகம், இவைகளைப் பசுவின் பாலிலரைத்துக் கொடுக்கவும். அல்லது,

மருளூமத்தன் விதையை பாக்களவரைத்துக் கொடுக்கவும். பொழுது விழுகிற மட்டும், கடிக்கப்பட்டவனைக் கட்டிவைக்கவும். பின்பு பெருங்காயத்தை வெந்நீரிலரைத்துக் கொடுக்கவும். அல்லது,

தலைசுருளிவேரைக் காராட்டுப் பாலிலரைத்துக்கொடுக்கவும்.

பத்தியம் :—தலையில் பத்துக்குடம் நீர் வார்க்கவும்.

## காதில் நாய் ஈ புகுதலுக்கு.

கார்த்திகைக் கிழங்கிலையைக் கசக்கிக் காதில் பிழிந்து அடைத்து வைக்கவும். பின்பு நெல்லிவேர், உள்ளி, வசம்பு, விளக்கெண்ணெய், நல்லெண்ணெய் இவைகளைக் காய்ச்சிக் காதில் விட்டடைக்கவும்.

## சிரங்குக்கு.

இரசம் விராகன் எடை ஒன்று, கந்தகம் விராகன் எடை ஒன்று, நீரடிமுத்து விராகன் எடை ஏழு, கார்போகவரிசி விரா

கன் எடை ஏழரை. இவைகளை எடுத்து எருமைப் பாலும் தேங்காய்ப்பாலும் கலந்தரைத்துச் சூரிய புடம் வைத்துப் பூசத் தீரும்.

### விரை வாதத்திற்கு.

முருங்கையிலை பிடி ஒன்று, வெள்ளை வெங்காயம் எட்டு, வெந்தயம் பலம் ஒன்று, சுக்கும், மிளகும், பலம் ஒன்று, கழற்சிப் பருப்பு இரண்டு, இவைகளை இரண்டுபடி நீர் விட்டு உழக்காய்க் காய்ச்சி கொடுக்கவும்.

### சோகை காமாலைக்கு.

சிறு செருப்படை, நாயுருவி, துளசி, மல்லிகை, கையாந்தகரை, பொடுதலை, அவுரி, உப்பிலாங்கொடிஇலை, இவைகளை ஒவ்வொன்றும் எலுமிச்சங்காயளவும், புளியிலை குறுணியும் எடுத்துக் கொண்டு காடிநீர்விட்டுத்துவைத்து, அரப்பொடி பலம் மூன்று போட்டு நான்குநாள் வெய்யிலிலே வைத்துப் பிழிந்து அதில், மிளகு, உள்ளி, அரத்தை, கருஞ்சீரகம், வெந்தயம், ஓமம், சதகுப்பை, கடுகுரோகணி, சுக்கு, காந்தம், அரப்பொடி, குங்கிலியம் இவை வகைக்குப் பலம் ஒன்று, கடுக்காய் இரண்டு, இவைகளைக் கூட்டியரைத்து வேகவைத்து மெழுகு போல் கிண்டி எடுத்துக்கொண்டு அதில், சுண்டக்காய்அளவு இருபதுநாள் உட்கொள்ள சோகை, காமாலை, பாண்டு, விஷபாகம் இவைகள் தீரும். கடும் பத்தியம் இருக்கவும்.

குறிப்பு :—குங்கிலியத்தை மெழுகாக வேகவைத்த பின்பு கூட்டி யரைத்து எடுக்கவும்.

### ஆனந்தவைரவ மாத்திரை.

பொன்னுங்கண்ணிவேர், சிறுகீரைவேர், வெள்ளைக் காக்கணம் வேர், ஓரிதழ்த்தாமரைவேர், இவை வகைக்குப் பலம் ஐந்து ; சங்கும், துத்தமும், வகைக்குப் பலம் இரண்டு, துருசும் வெண்கல அரப்பொடியும் வகைக்குப் பலம் மூன்று, செம்புப் பொடி பலம் நான்கு, சமுத்திராப் பழம் பலம் ஒன்று, இவைகளை எலுமிச்சம் பழச்சாறு விட்டரைத்து மாத்திரைகளாகச் செய்து நிழலிலுலர்த்திக் கொண்டு காடியிலுரைத்துக் கண்ணிலிட, கண்நோய்கள் யாவும் போம்.

### சந்திரோதய மாத்திரை.

பொன்னுங்கண்ணிவேர், சிறுகீரைவேர், வெள்ளைக்காக்கணம் வேர், சங்கு, செங்கழுநீர்க்கிழங்கு, துளசி, செங்கழுநீர்த்

தாது, தாமரைவளையம், கோஷ்டம், இவை வகைக்குப் பலம் ஒன்று, துத்தம் பலம் மூன்று, வெண்கலத்தில் சமைத்தசாதம் பலம் ஐந்து, இவைகளை நான்கு நாள் முலைப்பால் வார்த்தரைத்து மாத்திரைகள் செய்து நிழலிலுலர்த்திக் கண்ணிலிட வெச்செனக் குத்தும், தலைநோயும், சீக்கண்ணும் தீரும்.

### வேறு

பசுவின்பல், சேவல்நெஞ்செலும்பு, குதிரைக்குளம்பு, கழுதைக்குளம்பு, ஆமையோடு, பலகறை, சங்கு, செம்பு, மான் கொம்பு, பன்றிக்கொம்பு, முயலெலும்பு, தேற்றான் விதை, கடல் சிப்பி, முட்டையோடு, புலிநகம், வெள்ளைக்காவளைவேர், வெள்ளைச் சாறணைவேர், புங்கம்விதை, மகிழம்விதை, ஆட்டுக் கொம்பு, இந்துப்பு, மனோசிலை, கற்பூரம்; இவை வகைக்குப் பலம் ஒன்றையெடுத்து எலுமிச்சம் பழச்சாறு விட்டரைத்து, மாத்திரைகள் செய்து நிழலிலுலர்த்தி, நெய்யிலுரைத்துக் கண்ணிலிட சகல கண் நோய்களும் தீரும்.

### சந்திரோதய மாத்திரை.

பலகறை, கடுக்காய், தான்றிக்காய், நெல்லி வற்றல், கற்பூரம், இந்துப்பு, (கடுக்காய், நெல்லி, தான்றி இவைகளின் பருப்பு) துத்தம், அஞ்சனக்கல், கருடப்பச்சை, பீசரோகணி, கஸ்தூரி மஞ்சள், தாமரைப் பூ, தாமரைத் தாது, மாதுளை, கடல்நுரை, சுக்கு, மிளகு, திப்பிலி, வெள்ளிலை, ஓரிதழ்த்தாமரை, அரப்பொடி முதலியவைகளை எலுமிச்சம்பழச்சாறு விட்டரைத்து மாத்திரைகளாகச் செய்து நெய்யிலுரைத்துக் கண்ணிலிட, சகல கண் நோய்களும் தீரும்.

### காது கேளாததற்கு.

உள்ளி, வசம்பு, மஞ்சள் இவைகளைப் பாகலிலைச்சாற்றிலரைத்து நல்லெண்ணெயில் கலக்கிக் காய்ச்சி காதில் விட்டடைக்கத் தீரும்.

### உள்மூலம் புற மூலங்களுக்கு

பேய்ப்பீர்க்கன் விதை படி ஒன்று; இதை எருக்கலம் பழுப்புச்சாறு விட்டரைத்துப் பீங்கான் பாத்திரத்தில் வைத்துச் சூரியபுடம் வைத்தால் தைலமிறங்கும். மேற்படித் தைலத்தில். துருசு விராகன் அரையளவு கலந்து உள்மூலத்துக்கு விரலிற்றடவி எச்சில் வாயில் சுற்றிலும் தடவக்கரைந்து போகும்

புறமூலத்துக்கு மேல் தடவ மூலமுளை விழுந்துவிடும். செம்பருத்திப்பூவை நெய்யிலிட்டுக் காய்ச்சித் தடவ புண்ணாறும்.

## விக்கலுக்கு.

பொடுதலையிலை, சிறு செருப்படியிலை, விளாவிலை, நொச்சியிலை, இவைகளைக் காடி வார்த்தரைத்துச் சட்டியிலிட்டுக் காய்ச்சும்போது முகர்ந்து பார்க்கவும், விக்கல் உடனே நிற்கும்.

## மலட்டுப் புழுவுக்கு.

ஆண்வசம்பு, பெண்வசம்பு, விராகன் எடை ஒன்று, மிளகு, தக்காளிச்சாறு படி முக்காலில் அரைத்து மேற்படிச் சாற்றில் கரைத்து, அதனை ஒரு படியில் விட்டு தண்ணீரில் மேற்குமுகமாக நின்று சாப்பிட்டுப் படியை எரிந்து விடவும். படியை வேறு ஆளை விட்டு எடுத்து வரச்செய்யவும். மூன்று தரம் மேற்படி நீரில் முழுகிவரவும். வீட்டுத்தூரமான முதல் நாள் முன்கூறிய படியே இரண்டு நாளும் செய்யவும். நான்காவது நாளில் பேய்க்குமட்டிக்காயின் விதையை நீக்கி சங்கிலைபிடி இரண்டு சேர்த்து, அவித்துப்பிசைந்தும் பிழிந்தநீரைக் குடிக்க மலட்டுப் புழு, மலத்தோடே விழுந்து விடும். பச்சரிசிக் கஞ்சி குடிக்கவும். உப்பு, புளி நீக்கியிருக்கவும். மூங்கிலிலை, தும்பையிலை, குப்பைமேனியிலை, இவற்றின் சாற்றை முழுகிய உடனே கையில் பிழிந்து குடிக்கவும்.

## நீர்ச்சுருக்குக்கு

எள் பிண்ணாக்கையிடித்துத் தேங்காய்ப்பாலில் வேக வைத்துச் சாப்பிடவும்.

தைவேளையை வாய்பேசாமல் பிடுங்கி எலுமிச்சங்காயளவு அரைத்துப் பனங்கருப்புக்கட்டியில் ஐந்து நாள், இரண்டு வேளைகளும் சாப்பிடவும் தீரும். பசுவின்பால் சேர்த்து வெந்நீரில் குளிக்கவும்.

## முலைசுரக்க.

குன்றிமணியிலைச்சாறு உரியளவும், சுக்கு பலம் இரண்டு, சிறுகும்மட்டிவேர் பலம் இரண்டு; இவற்றைப் பசுவின் பாலிலரைத்துச் சாப்பிட, முலைப்பால் சுரக்கும். மாடு எருமை முதலியவற்றிற்குமாகும்.

## பெரும்பாட்டுக்கு

தென்னம்பாளையை விளாங்காயளவரைத்துப் பசுவின் பாலில் கரைத்துச் சர்க்கரை சேர்த்துக் குடிக்கவும். கைகண்டது.

## அடிக்கடி சிறுநீர் போவதைத்தடுக்க.

சீலை சுட்ட சாம்பல் உழக்கு, நெற்பொரி சூரணம் உழக்கு, இவ்விரண்டையும் கலந்தரைத்து வடிகட்டி வெறுகடியளவு உட்கொள்ளவும். கைகண்டது.

## இலிங்கச்செந்தூரம்

சாதிலிங்கம் விராகன் எடை ஐந்தை எடுத்து வேப்பங்காயையிடித்துச் சாறுபிழிந்து சுருக்குக் கொடுத்துப் பொடித்து உட்கொள்ள சன்னிசுரம் தீரும். மாத்திரையாகவும் உபயோகிக்கலாம்.

## அப்பிரகச்செந்தூரம்

அப்பிரகத்தை கையாந்தகரைச்சாற்றிலரைத்துலர்த்தி ஓட்டிலிட்டுக்கட்டிச் சீலைமண்செய்து புடமிடவும். இப்படி பத்து புடமிடச் செந்தூரமாகும்.

## உப்புக் கட்டு

கறியுப்பை, கொடிக்கள்ளியைத் துவைத்து எடுத்தச்சாறு விட்டரைத்து ஓட்டிலிட்டுச் சீலைமண் செய்து புடமிடக்கட்டும்.

## தாதுவிருத்திக்கு

சாதிலிங்கத்தைக்கோழிக்கு, உணவோடு கொடுத்துவந்து அக்கோழியைச் சமைத்துச் சாப்பிட ஆண்மை பெருகும்.

## வாந்திக்கு

சுக்கு, அரிதாரம், சினிக்காரம், வெண்காரம், கடுக்காய், சீனிச்சர்க்கரை இவற்றை எலுமிச்சம் சாற்றில் அரைத்து மாத்திரைகளாகச் செய்துகொண்டு கொடுக்க வாந்தி நிற்கும்.

## பாண்டு நோய்க்கு.

கற்றாழஞ்சருகு, களிப்பாக்கு, கடுக்காய், விழிம்பித்தழை இவைகளை இரவடுப்பில் குடிநீராக்கியதில், வெங்காரம், கடுகு

ரோகிணி இவற்றையரைத்துக் கலக்கிக் காலையில், கொடுக்கத் தீரும்.

நீலிவேர், செங்கத்தாரி, பூதகரப்பான்பட்டை, வெள்ளைப் பூண்டு, வசம்பு, இவைகளைப் பொடித்து விளக்கெண்ணெயி லிட்டுச் சூரியபுடம் வைத்து மூன்று நாள் சாப்பிட்டு, ஏழுநாள் பத்தியமாயிருக்கவும்.

## மூக்கில் இரத்தம் விழுவதற்கு

பனையோலையைச் சுட்டு இளவெந்நீரிற் கொடுத்து அந் நீரோடு ஆவரையிலையை யரைத்து உச்சந்தலையிற் பற்றிடவும்.

## உஷ்ணத்துக்கு

கற்றாழஞ் சோற்றில், கற்கண்டு, மான்கொம்பு, இவற்றைப் பொடித்துமத்தித்துச் சாப்பிடவும்.

சீரகம், சீனிச்சர்க்கரை இவற்றைப் பொடித்து எலுமிச்சம் பழச்சாற்றில் மத்தித்துச் சாப்பிடவும்.

## வாத நோய்களுக்கு

நல்லெண்ணெய், தும்பைச்சாறு, வெள்ளாட்டு மூத்திரம், இவற்றைச் சமமாகக் கூட்டி மூன்று நாள் சாப்பிட்டு, ஐந்து நாள் கடும்பத்தியமாய் இருக்கவும்.

## விப்புருதிக்கு

கடுங்காவலைவேர், மந்தைப்புலிக்கொழுந்து இவற்றை ஊர்க் கள்ளிப்பாலில் அரைத்து வெந்நீரிற் கொடுக்கப் பேதியாகும். மாற்று :--மோருஞ்சோறும்.

## பிள்ளையில்லாத பேர்க்குப் பரீக்ஷை

முருக்கிலையைப் பசும்பால் படி இரண்டு விட்டுத்துவைத்து ஒரு கிண்ணத்திற் பிழிந்து விநாயகர் பூசை செய்து பின்பு பார்க்க அது கட்டியாயுரைந்திருந்தால் பிள்ளையுண்டாகும். திரிதிரியாய் உடைந்திருந்தால் அவளுக்குப் பிள்ளை உண்டாகா தெனவறியவும்.

## சகல புற்றுப்பிளவைக்கு

சரமாக வழிஞ்சுவிதை புங்கம் வித்து
தான்றிவிதை புன்னைவிதை கடுக்காய், கார்தோல்
அரிசியோடு சமமாகப் பாண்டத் திட்டே
யுமூரிவிட்டு இருபதுநா ளான போது
உரமாக நிழலுலர்த்தி மிளகு நாழி
யுடன்கலந்து பின்னுமதைப் பாண்டத் திட்டு
நிறமாகிக் குழித்தைல மிறக்கி வாங்கி
நிருவாணி பூசைசெய்து யெடுத்து வைய்யே.

வைத்திருந்த தைலத்தில் கொஞ்சம் தொட்டு
மயிர்நுனியிற் றடவவது கருத்துப் போகும்
மெய்த்திருந்த வெடிசூலை கண்ட மாலை
மேலூறு சொறிசிறங்கு கரப்பானெல்லாம்
மொய்த்திருந்து கட்டோடுந் தைலந்தன்னை
மொழிகிறேன் நோய்க்கெல்லாம் பூசிப் பாரு
முத்திருந்த நெற்றுப்போ லாகு மப்பா
மூதண்டைக் குழித்தைல முழுகு வாயே.

முழுகையிலே விஷந்தீரும் குட்டந் தீரும்
முடிசிறங்கு தலைவெட்டை மேகந்தீரும்
மழுகையிலே புழுவெட்டு ரோமத் தியால்
வறுமையிம்மை மயிரத்த வாறுந் தீரும்
விழுகையிலே சுழற்றிநோய் நடுக்கந் தீரும்
மிகுசிறங்கு குறுந்தடிப்பு வினையுந்தீரும்
வழுகையிலே பாம்பரணை கடியும் தீரும்
மரணியடிச் சிலந்துகடி வாளை போமே.

போமென்ற குழிவாளை புறவாளை
யரவையடி யூமையடி சிலந்திவாளை
யாமென்ற விப்புருதி விலாவில் வாளை
துடைவாளை மதுகுவாளை
வேமென்ற கண்ஞேசி (சிமிட்டிப் பூசிட்டு) கன்னப் புற்று
மிகபிடரி நுனிநாசிச் சிலந்திப் புற்று
தாமென்ற பிளவையிமை கண்மேல் வந்த
சரிநெற்றிப் பிளவையிவை தணியும் பாரே.

தணிவான பெண்குறிமேல் கரப்பான் கட்டு
சடைச்சிலந்தி யலகுவின்மேல் புற்றும் பாரு
பிணியான பவுத்திரங்கள் முளைமூ லங்கள்

பின்கரப்பான் முன்கரப்பான் ரணப்புத் துந்தான்
துணிவான வுந்திப்புண் துடையிற் புற்று
துடிசூலை யிடிசூலை மேக சூலை
கணியான வலவடிகள் இலையேற் புண்கள்
கீழ்நாக்கு மேல்நாக்குப் புற்றுப் போமே.

புற்றுப்போம் ஈரல்பிளவை நடுத்திறச் சூலை
புரைவிழுந்த படுக்கிடங்கு நிறுத்தும் பாரு
அற்றுப்போம் நாக்குநுனி மூக்கிற்புண்ணும்
அரையாப் பிசாசுநீர்க் கோவைப் புற்று
விற்றுப்போம் நாற்பூடு தாக்குண் டான
புண்ணும்விழி முழுங்கியும் முழுங்கிவேசிப் புற்றும்
செற்றுப்போம் இத்தனைக்கும் பூசும் போது
தீர்ந்துபோ மின்னமொன்று சொல்லக் கேளே.

சொல்லக்கேள் நல்லரவும் விரியன் பாம்பு
சூலெலிகள் குருட்டெலிகள் புடையன் மூக்கன்
வெல்லக் கேள்தேள் நட்டுவக் காலி
விஷமுள்ளுத் தைத்தாலும் பூசு பூசு
யில்லைக்கே ளிறந்துவிடும் விஷங்க ளெல்லாம்
இத்தைலம் வெகுசுருக்கு சுருக்க மெத்த
சொல்லக்கேள் விஷங்களொடு நோய்க ளெல்லாம்
கொல்லுமென்றே யித்தைலங் கூறி னேனே.

கூறினேன் புகையிலையும் புளியும் தள்ளு
கூடாது பச்சைமீன் தள்ளு தள்ளு
மீறிநீ யுண்ணாதே யன்னத் தையும்
விழுங்காதே யுறங்காதே தெய்வமோ தாதே
யேறியே கண்டவனை வைய்தி டாதே
யேசாதே வெய்யாதே தீண்டி டாதே
ஆறியே பதமாகத் தின்று லப்பா
வலமதுதா னன்னிலக் கரியும் பாரே.

## அப்பிரகச் செந்தூரம்.

அப்பிரகம், பூநீறு, காரம் இவை வகைக்குப் பலம் ஒன்றை வல்லாரைச்சாற்றில் மூன்று நாளரைத்து வில்லை தட்டி யுலர்த்தி, ஓட்டிலிட்டுச் சீலைமண் மூன்றுவகையும் செய்து கஜபுடம் போட்டெடுக்க மஞ்சள்நிறமாகும். பின்பதனை, காரம் ஒரு பலம் சேர்த்து பொற்றலைக்கரிப்பான் சாற்றிலரைத்து, முலைப்பால் சேர்த்து

வில்லை செய்து, காய வைத்து, ஓட்டிலிட்டுச் சீலைமண் மூன்று வகையுஞ்செய்து கஜபுடமிடச் செந்தூரமாகும். இச் செந்தூரத்தை பணவெடை எடுத்து நெய்யில் உட்கொள்ள, வாத மேகமும், நீரிழிவும் தீரும். தேனிற்கொள்ள பாண்டு தீரும். சர்க்கரையிற் கொள்ள குஷ்டம் தீரும். கடுக்காய்ச் சூரணத்திற் கொள்ள நரைதிரை தீரும்.

### பெரும்பாட்டிற்கு.

நல்ல வெல்லத்தில், கருங்கம்பளியைப் பொதித்துச் சுட்டு, அரைத்து, எருமைத்தயிரிற் கொடுக்கத்தீரும்.

### நீரடைப்புக்கு

முருங்கைக்கொழுந்து ஒருபிடி, ஐந்து மிளகு, ஐந்து எலிப்புழுக்கை, இம் மூன்றையுமரைத்து விளக்கெண்ணெயிற் குழப்பி, தொப்புள் முதல் அடிவயிறுவரை பூசி, முக்காலியின்பேரிலிருக்கவும். கல்லடைப்பு, நீரடைப்பு, மாங்கிஷ அடைப்பு இவைகள் தீரும். இதற்கு உள்மருந்து நல்லதுப்பரையிலையை யரைத்ததில் கொட்டைப்பாக்களவு, மிளகுஅரைத்ததில் கொட்டைப்பாக்களவு, வெள்ளுள்ளியரைத்ததில் கொட்டைப்பாக்களவு, இம் மூன்றையும் காற்படிப் பழந்தண்ணீரிலரைத்துக் கலக்கி வெருகடியளவு ஒட்டரை (புகை யூரல்) போட்டு நாள் ஒன்றுக்கு ஐந்துமுறை கொடுக்க உடனே எவ்விதஅடைப்பும் தீரும். கைகண்டது.

### பிச்சு நீரை வெளியாக்க

ஓமத்துடன் எருக்கம்பாலூட்டி யுலர்த்திச் சூரணித்து இளவெந்நீரிற்கொடுக்க வாந்தியாகும். அத்துடன் பித்தமும் வெளியாகும். துருசைப் பொடித்துப் பாலிலிட்டுக் காய்ச்சியுரையிட்டுக் கொடுக்க வாந்தியாகும்.

### பித்த சன்னிக்கு

சீந்திற்கொழுந்து, சாரணைவேர், வேலிப்பருத்திசமூலம், இண்டங்கொழுந்து, வெள்ளுள்ளி, வசம்பு இவைகளை விளக்கெண்ணெயிலிட்டுச் சிவக்கக் காய்ச்சி, வடித்து உள்ளுக்குக் கொடுத்து மேனியிலும் துவளையிடத்தீரும்.

### விப்புருதிக்கு

வெள்ளைக்காவளைவேரை, வெள்ளாட்டுச்சிறுநீரில் முள்ளிக்யளவு அரைத்துக் கொடுக்கப் பேதியாகி குணமாகும்.

## கரப்பான் புண்களுக்கு

அமுக்கருக்கிழங்கும், புண்ணுக்குப் பூடுசமூலமும் வகைக்கு முள்ளிக்காயளவரைத்துக் கால்படி நல்லெண்ணெயிலிட்டு எலுமிச்சம்பழச்சாறு எட்டுபடி சேர்த்துக் காய்ச்சி வடித்ததில் வாழைப்பழம் போட்டு, நாள் ஒன்றுக்கு ஒவ்வொரு பழம் சாப்பிட்டு, கல்கங்களை எடுத்துப் புண்களில் பூசத்தீரும்.

## மண்டையிடிக்கு

அரிதாரம்,எருக்கம்வேர், இவற்றை எலுமிச்சம்பழச்சாற்றிலரைத்துத் திரிசெய்து புகைபிடிக்கக் கபாலசூலை, செவிநோய், பீனிசம், மண்டையிடி இவை தீரும்.

## அந்திர வாயுவுக்கு

உகாஇலை பிடி இரண்டு, கல்லுப்பு பிடி ஒன்று; இவற்றைச் சேர்த்திடித்துத் தூளாக்கி வறுத்தசட்டியில் ஒரு படி எருமை மோர் வார்த்துக் கலக்கி வெஞ்சனம்வைத்துக் கொடுக்கவும். புளி, புகை நீக்கி, மோர் சேர்க்கவும்.

## மேகநீர், வீக்கம், சோகை, காமாலை இவைகளுக்கு

கோவைத்தண்டை எடுத்து மேற்புறணிச் சீவி நறுக்கியிடித்துப் பிட்டுக்கட்டி வேகவைத்துப் பிழிந்தெடுத்தச் சாற்றில் வெண்காரம் பொரித்துப் போட்டு, ஐந்து நேரங்கொடுத்து எட்டு நாள் கடும்பத்தியமாயிருந்து, ஒன்பதாம்நாள் தண்ணீர் வார்க்கவும்.

அமுக்கருங்கிழங்கு பலம் ஐந்து எடுத்துத் தரித்துப் பசுவின்பால் விட்டாட்டி, ஒருபடி நல்லெணெய்யிற் போட்டு, பதமாய்க்காய்ச்சித் தலை முழுகிவர, மேற்கண்ட நோய்கள் தீரும்.

## இரசப்பற்பம்

இரண்டு வராகனெடை இரசத்தை, ஒட்டம்புல் சாற்றுலரைத்து வில்லைதட்டி யுலர்த்தி இரண்டெருவிற்புடமிடப் பற்பமாகும்.

## சாதிலிங்கப்பற்பம்

சாதிலிங்கம் விராகன் எடை இரண்டு எடுத்து, வங்கக்கல்லைப் பொடித்து சிவனார்வேம்புத்தைலத்தாலரைத்து செய்த

குகையில் வைத்து மேல்மூடி, சீலமண் மூன்றுவகையுஞ் செய்துலர்த்தி, ஏழெருவிற்புடமிடப் பற்பமாகும்.

## தாளகப்பற்பம்

சுத்திசெய்த தாளகம் விராகன்எடைஐந்து எடுத்து வெங் கக்கல்லைப் பொடித்துப் பொற்றலைக்கையாந்தகரைச்சாறு விட்டரைத்துக் குகையும் மூடியும் செய்து, அதில் வைத்துச் சீலமண் மூன்றுவகையுஞ் செய்து பத்தெருவிற்புடமிடப்பற்ப மாகும். ஷை பற்பம் பொற்றலைக்கையாந்தகரைச்சாறு கள்ளிப் பழச்சாறு குப்பைமேனிச்சாறு இவைகளிலும் போடலாம்.

தாளகம் விராகன்எடை ஐந்து, அண்டஓடு விராகன் எடை ஐந்து இவ்விரண்டையும் மேற்கண்ட நான்குவகைச் சாறும் விட்டரைத்து மணல்மறைவிடப் புடமிட்டாலும் பற்ப மாகும்.

## அயக்களங்கு

அயம் பலம் ஒன்று, உப்பு பலம் முக்கால், சாரம் பலம் ஒன்று, வீரம் பலம் இரண்டு, மூன்றுமுறை வெள்ளாவியிற் சுத்தித்த வெள்ளைப்பாஷாணம், விராகன்எடை ஐந்து; இவை களை எலியாமணக்கம்பாலா லரைத்துலர்த்தி, தாம்பிரச்சிமிழில் அடைத்து, மருந்து மறைய எலியாமணக்கம் பாலைவிட்டு அடுப் பில் வைத்து எரிக்கக் கட்டும்.

## இலிங்கக்கட்டு

லிங்கத்தை, முலைப்பாலில் பத்து நாளூறவைத்து எலியா மணக்கம்பாலிலெரிக்கக் கட்டும்.

இளநீர்க்காயின் மேல்பட்டைசீவித் துவைத்துஎடுத்த நீர் அரைப்படியில் பச்சைக்கற்பூரம் விராகன் எடை இரண்டு, வெண்காரம் விராகன் ஒன்று, கற்பூரசிலாசத்து விராகன் எடை ஒன்று; இவற்றைக் கூட்டிக் கொடுக்க, நீரடைப்பு, கல்லடைப்பு, சதையடைப்பு, இரத்தமேகம், நீரெரிப்பு இவைகள் தீரும்.

## பிரமேகத்துக்கு

முற்றிய தேங்காயின் பால் படி அரையில், வெள்ளுள்ளி பலம் ஒன்றை எடுத்து அரைத்துக் கலக்கி, இரண்டு காசி யெடை குப்பைமேனிச்சாறு விட்டு நான்குநாள் கொடுக்கவும். பத்தி யம் :— வெந்நீரும், சோறும்.

கற்றாழையைப் பிழிந்து அதில், பாசிப்பயறு போட்டு உலரவைத்து எடுத்து, பசுவின்பாலிலரைத்துக் கொடுக்கவும். பத்தியமாய் இருக்கவும்.

அகத்திப்பட்டைச்சாறும், பசுவின் பாலும் சரியாய்க்கூட்டிக் கொடுத்தாலும் தீரும். பத்தியமாய் இருக்கவும்.

## கோமூத்திர அரிதகிலேகியம்.

ஒருபதக்குப் பசுநீரில் விதைநீக்கிய நூறுகடுக்காயைப் பொடித்துக் கூட்டி நாலொன்ருகக் காய்ச்சி அதில், சுக்கு, கொடிவேலிவேர், சிவதைவேர், அரப்பொடி, விழலரிசி, இவை வகைக்கு மூன்று விராகனெடையாகக் கொண்டு பொடித்துப் போட்டு சர்க்கரை பலம் மூன்று கூட்டி, அடுப்பிலிட்டுக் கிண்டி எடுத்து, சுண்டக்காய் அளவு காலை மாலை உட்கொள்ள, குன்மம், பிரமேகம், காமாலை, பாண்டு, குட்டம், மூலம், பவுத்திரம் முதலியன தீரும். இதனை மலடி தின்னப் பிள்ளையுண்டாகும்.

## கடுக்காய் லேகியம்.

பொன்முசுட்டைவேர், கொடிவேலிவேர், முட்காவளைவேர், நாய்வேளைவேர், புங்கம்பட்டை, ஆயில்பட்டை, பெருமரப் பட்டை, வெள்ளைவெங்காயம், கறிவேப்பிலை, இவைகளில் வகைக் குப் பலம் பத்து எடுத்து இடித்து இருதூணி நீர் விட்டு எட்டொன்ருகக் காய்ச்சி இறுத்து, காடி குறுணி ஒன்றும், மோர் குறுணி ஒன்றும் சேர்த்து, அதில் இருநூறு விதைநீக்கிய கடுக் காயைப் பொடித்துப் போட்டு அதற்குச்சரியெடை சுக்குப்பொடி வறுத்துப்போட்டு நாலிலொன்ருய்க் காய்ச்சி குழம்பு பதமாகும் போதுநெய்உரி ஒன்றும், நல்லெண்ணெய் உரி ஒன்றும் சேர்த்துப் பின்பு, சுக்கு, திப்பிலி, மிளகு, சீரகம், கருஞ்சீரகம், பெருங்காயம், பிரண்டைச் சூரணம், இவை வகைக்குப் பலமிரண்டு, சுத்தித்த அயப்பொடி பலம் இரண்டு; ஆக இவற்றை நல்லெண்ணெய் விட்டு மூன்றுதரம் வறுத்து அதையுங்கூட்டிச் சேர்த்துக்கிண்டி மெழுகுபதத்திலிறக்கி தேற்ருன் விதைப் பிரமாணங் கொள்ள, சீதக்கிராணி, வாயுக்கிராணி, பித்தக்கிராணி, சங்கலிதக்கிராணி, சீழக்கிராணி, மூலக்கிராணி, இரத்தக்கிராணி, அதிசாரம், மூலக் கடுப்பு, மூலச்சுருக்கு, சங்கிரக்கிராணி, பக்கசூலை, வாதசூலை, நாபிசூலை, கெற்பசூலை, உதிரக்கட்டி முதலியவை தீரும்.

## மண்டையிடிக்கு.

கொடிவேலிவேர்ப்பட்டை பலம் ஒன்றுடன் கற்ருழம்பால் விட்டரைத்து ஒரு படி நல்லெண்ணெயிலிட்டு, மெழுகுபதமாய்க் காய்ச்சி முழுகவும். சீயக்காய் தேய்க்கவும். புளிபுகையிலே தள்ளவும்.

## நீரடைப்புக்கு.

சுண்டையிலேயைத் துவைத்துவைத்து வெண்காரம் பொரித்துப் போட்டு கலக்கிக்கொடுக்கவும்.

செங்கீரைத்தண்டுச்சாற்றை பசுவின் பாலில் கலக்கிக் கொடுக்க நீரடைப்பு, கல்லடைப்பு, துர்மாங்கிஷநீரடைப்பு இவைகள் தீரும்.

தவசிமுருங்கையிலேயைத் துவைத்து பெண்கள் சிறுநீரிற் பிசைந்து அரைப்பிடி, ஒருபிடி கொடுக்க அப்பொழுதே கல்லிருந்தாலும் விழும். கைகண்டது.

## வெள்ளே வெட்டைக்கு.

வெங்காயச்சாறும், நல்லெண்ணெயும் சரியாகச் சேர்த்து மூன்றுநாளிரண்டு வேளேயும் கொடுக்கவும். உப்பு, புளி, புகையிலே நீக்கவும். சீ விழுவதும் தீரும்.

ஆவரைவிதை, வெந்தயம் இவைகளின் சூரணங்கள் சரியாகச் சேர்த்து எருமைத்தயிரிற் கொள்ளத்தீரும்.

## அருகம்வேர்க்கிருதம்.

அருகன்வேர் துலாம் ஒன்றில் நூறுபடி நீர் விட்டு நான்கு படியாகக் காய்ச்சி வடிகட்டியதில், பசுவின் நெய் படி ஒன்றும் மாதுளம்பழச்சாறு படி ஒன்றும் சேர்த்து, அதிமதுரம் பலம் இரண்டு, தாமரைவேர், செங்கழுநீர் மூலம், இவை வகைக்குக் கழஞ்சு எடை இரண்டு, இவைகளேப் பாலிலரைத்துப் போட்டு கமலாக்கினியாயெரித்துப் பதமாக வடித்து உட்கொள்ள மூத்திரகிரீச்சரம், கிராணி, பிரமியம், கபாலச்சூடு, கிருகிருப்பு, இவைகள் தீரும். பத்துநாள் கொள்ளவும். இடுப்புவலி, கடுப்பு வலி முதலியவைகளும் தீரும்.

## விஷபாக முதலிய வீக்கங்களுக்கு,

வெள்ளேச்சாரணேச்சாறு, கையாந்தகரைச்சாறு, சிற்றகத்திச் சாறு, நீர்முள்ளிச்சாறு, இவைவகைக்குப்படி இரண்டும், பசுவின்

பால் படிஒன்றும், நல்லெண்ணெய் ஒரு படியும் கூட்டிக் கலந்த தில், மிளகும், ஓமமும் பலம் இரண்டு, அதிமதுரம், கஸ்தூரி மஞ்சள், இவை வகைக்குப் பலம் முக்கால், சடாமாஞ்சி, கருஞ் சீரகம், நற்சிரகம், இவை வகைக்கு விராகன் எடை இரண்டு, இவைகளை யரைத்துப் போட்டுக் கலக்கி மெழுகு பதமாய்க் காய்ச்சி வடித்து தலை முழுகத் தீரும்.

## மூலக்கிராணிக்கு.

கொம்பரக்கு, சாதிக்காய், அபினி, குராசானியோமம் இவைகளைப் பொடித்து நல்லெண்ணெயிற் பிசைந்து கொடுக்க மூலக்கிராணி, கடுப்பு, சூடு, குத்துதல் இவைகள் தீரும். பத்தி யம், மோரும் சோறும்.

## உதிர வாயுவுக்கு.

ஏலரிசி, ஈரவெங்காயம், நற்சிரகம், நல்லவெல்லம் இவை களைக் கற்றாழைவேர்ச் சாற்றிலரைத்துத் தான்றிக்காய்ப் பிர மாணம் உருண்டை செய்து ஆறு நேரங்கொடுக்க, உதிரவாயு, பெரும்பாடு இவைகள் தீரும்.

பத்தியம் :—உபபு நீக்கி எருமைத்தயிருஞ்சோறுமுண் ணவும்.

## பைத்தியத்துக்கு.

மாட்டெலும்பு, நாய் மண்டையோடு, மனிதன் வெந்தவெலும்பு இவைகளை ஓரளவாகக்கொண்டு கழுதைப்பால்விட்டாட்டி வில்லை செய்துலர்த்தி, குக்குடப்புடமிடப் பற்பமாகும். இப்பற் பத்தைக் கழஞ்சு யெடை கொண்டு கழுதைப்பாலில் பத்துநாள் கொடுத்து பசுவின்பால் சேர்த்துப் பத்தியமாயிருக்கப் பைத் தியம் போம்.

எலுமிச்சம் பழச்சாறு, முலைப்பால் ஆட்டுப்பால், பசு வின் கோமயம், முசுமுசுக்கைச்சாறு, கொடும்பைச்சாறு இவை வகைக்குப் படி நான்கும், நல்லெண்ணெய் படி ஒன்றும் சேர்த்த தில், அதிமதுரம், கோட்டம், ஏலம், சீரகம், சந்தனம் இவை வகைக்குப் பலம் ஒன்றை யெடுத்துக் கோவையிலைச்சாறு விட் டரைத்துக் கூட்டிக் கலக்கிப் பதமாய்க்காய்ச்சி வடித்துத் தலை யில் குடோரியாடி நூறுகுடம் தண்ணீர் விட்டு மோருஞ் சோறு முண்ணவும். இப்படி ஒரு மண்டலம் செய்தால் வெறியும், பித்தும் தீரும்.

## பாண்டு நோய்க்கு.

கொடிவேலிவேர், கடுக்காய், நெல்லிக்காய், தான்றிக்காய், இவை வகைக்குப்பலம் ஒன்றை எடுத்துப் பசுவின் பாலிலரைத்து ஒருபடி பசுவின்நெய்யிற் கலக்கிக் காய்ச்சி மெழுகுபதத்தில் வடித்து, மூன்றுநாளைக் கொருதரமாக முழுகிவர பாண்டு, தேகவெளுப்பு, தசைநீர், முதலியவைகள் தீரும்.

## அரிதார எண்ணெய்.

அரிதாரம் விராகனெடை நான்கைப் பசுவின்நீரில் ஒரு சாமமும், சுண்ணாம்புத் தண்ணீரில் ஒரு சாமமும் ஊறவைத்து, மூன்று சேங்கொட்டையை மனிதர் சிறுநீரில் வேகவைத் துலர்த்தி, இவ்விரண்டையும் பொடித்து, பசுவின்நெய், எருமை நெய், வெள்ளாட்டு நெய், இம் மூன்று நெய்யும் உழக்களவில் சேர்த்து வேகும்போது அதில் நெல்போட்டால் பொரிவது போல் பொரியும். அப்போது ஒரு தாழியில் குளிர்ந்த சலம் விட்டு அதில் மேற்படி நெய்யை யூற்றினால் நெய்மிதக்கும். அதை வழித்து, நாள் ஒன்றுக்கு வெருகடியளவு உட்கொள்ள, மேக நோய்கள் எல்லாந் தீரும். பத்தியமாயிருக்கவும்.

## வங்காரச் சஞ்சீவி.

இரசம் விராகனெடை பன்னிரண்டு, அரப்பொடி விராக னெடை ஐம்பது, காந்தம், அப்பிரகம், வெங்காரம் இவை வகைக்கு விராகனெடை பன்னிரண்டு இவைகளைச் சுத்திசெய்து, நாவற் பட்டைச் சாற்றால் அரைத்து, வில்லை செய்துலர்த்தி, ஓட்டி விட்டுச் சீலைமண் செய்து, வராகப் புடமிடவும். பின்னும் மேற் படிச் சாற்றிலரைத்துப் புடமிடவும். இப்படியே கற்றாழஞ்சாற் றில் இரண்டு புடமும், மருதப்பட்டைச் சாற்றில் இரண்டு புடமும், முருக்கிலைச்சாற்றில் இரண்டு புடமும், கொடிவேலிக் கஷாயத்தில் இரண்டு புடமும், திரிபலைக்கஷாயத்தில் இரண்டு புடமும், எலு மிச்சம் பழச்சாற்றில் இரண்டு புடமும், ஆலம்பட்டைக் கஷாயத் தில் இரண்டு புடமும், அரசம்பட்டைக்கஷாயத்தில் இரண்டு புடமும் போட்டு எடுத்துக்கொண்டு நாள்ஒன்றுக்குப் பண வெடைவீதம், திரிகடுகுச் சூரணத்தில் கொடுக்கச் சுவாசகாசமும் முருங்கப்பட்டைச்சாற்றில் கொடுக்க மந்தாரகாசமும், சீரகக் கஷாயத்தில் கொடுக்கப் பித்தகாசமும், வெள்ளாட்டு மூத்திரத் தில் கொடுக்கக் காமாலை, விஷவாதம், பாண்டு, நீர்க்கோவை,

மகோதரம் இவைகளும், பசுவின் வெண்ணெயில் கொடுக்கப் பிரமியம், இரத்தப்பிரமியங்களும், இஞ்சிச்சாற்றில் கொடுக்கச் சீதசுரமும், முலைப்பாலில் கொடுக்க பித்தச் சுரமும், நொச்சிச் சாற்றில் கொடுக்க சிலேட்டுமச்சுரமும், மலைதாங்கி, கறிவேப்பிலை, சுக்கு இவைகளின் வேர்க்கியாழத்தில் கொடுக்க அத்திச் சுரமும், மாதுளை, ஆவரை, நீர்ப்பூலா, காரை இவைகளின் வேர்க்கியாழத்தில் கொடுக்க சகல கிராணிகளும், எலுமிச்சம் பழச்சாற்றில் கொடுக்க ஆரோசகமும், பனைவேர்க்கிழாயத்தில் கொடுக்க விக்கலும், அரத்தைச் சூரணத்தில் கொடுக்கக் கபக் கட்டும், வேப்பிலைக்கிழாயத்தில் கொடுக்க விஷமும் தீரும். பத்தியம் :—கைப்பு, புளி நீக்கவும்.

### ஈருள்ளியெண்ணெய்.

சதுரக்கள்ளியுப்புப் படி இரண்டைப் பொடித்து, மேல்தோல் போக்கிய வரிக்கும்மட்டிப் பழம் எட்டுக்குள் வைத்து, விளக் கெண்ணெய் படி இரண்டில், அசையாது வைத்து, அத்துடன் ஐந்து ஈரவெங்காயம் நறுக்கிப் போட்டு, வேடுகட்டி ஏழு நாள் சூரிய புடம்வைத்து, எட்டாம் நாள் சிறு கொதியிட்டு ஒருபிடி நிலையாவரை வேரைத் தட்டிப் போட்டுக்காய்ச்சி வடிக்காமல் வைத்துக்கொண்டு ஒரு தரம் ஒருநாளைக்கு ஒரு முறையாகக் காசு யெடை கொள்ள, கெண்டை, கவிசை, காமாலை, மகோதரம், வீக்கம் முதலியன தீரும். கைகண்டது.

### தாகம்—வாந்திக்கு.

வில்வக்கொழுந்து, பூங்கோரைக் கிழங்கு, அதிமதுரம், விலாமிச்சம் வேர், வெட்டிவேர், நன்னாரிவேர், இவைகளை நீரிலிட்டுக் காய்ச்சி வடித்து, பணவெடை பஞ்சதாரை போட்டுக்கொடுக்க, எல்லாவித தாகமும் வாந்தியும் தீரும்.

### வங்காரச் சஞ்சீவி அக்னிகுமாரச் செந்தூரம்.

அரப்பொடி, உருக்குப்பொடி, இரசம், செம்பரப்பொடி, வெண்கல அரப்பொடி, வெங்காரம், மனோசிலை, அரிதாரம், திப்பிலி, இவை வகைக்குப் பலம் ஒன்று, காந்தம் பலம் இரண்டு, நெல்லிக்காய் கந்தகம் பலம் ஆறு, இவைகளைக் கற்றாழைச்சாறு விட்டு மூன்று நாளரைத்துச் சட்டியிலிட்டு அடையாகத்தட்டி உலர்ந்த பின்பு மேற்சட்டி மூடி 7 சிலைமண் செய்து, மூன்று நாள் விடாமல் எரித்து, ஆறவிட்டெடுக்கச் செந்தூரமாகும். இச்செந்

தூரத்தில் ஒரு வராகனெடையுடன் பச்சை நாவியை கோசலத்தில் மூன்று நாள் ஊறவைத்துலர்த்திப் பின்பு வெள்ளாட்டு மூத்திரத்தில் மூன்று நாளூரவைத்துலர்த்தி எடுத்தும், திப்பிலி மூலமும் இரண்டு பலம் சேர்த்து, வெள்ளுள்ளித்தைலத்தில் அரைத்து மாத்திரைகள் செய்து, ஒரு மாத்திரை உட்கொள்ள கிரீச்சரவாதம் போம். தேனில் திரிகடியளவு திப்பிலிச் சூரணம் கூட்டி, ஒரு மாத்திரை வீதம் பதினாறு நாள் உட்கொள்ளப் பிரமியம் 8-ம், கல்லடைப்பு, சதையடைப்பு 18-ம், இந்திரகண்டி 5ம், அந்தர வாதம், பித்தம் 42ம், சிலேட்டுமம் 21ம், உஷ்ணரோகம் முதலியவை தீரும். வெள்ளுள்ளித் தைலத்தில் ஒரு மாத்திரை உட்கொள்ள வயிற்று நோய்கள், வாயுத்திரட்சி, பெருவயிறு, விஷபாகம், காமாலை, பாண்டு இவைகள் தீரும். ஷை செந்தூரத்தில் ஒரு பணவெடையும், திப்பிலி, மிளகு இவற்றை வெதுப்பிச் செய்த சூரணமும், தேனும், இஞ்சிச்சாறும் கலந்ததில் இரண்டுநேரம் இருபது நாள் உட்கொள்ள சன்னி பதினெட்டு, வாயுவு, சத்திகுன்மம், எரிகுன்மம், காமாலை, பைத்தியம், பௌத்திரம், முகவாதம், மண்டைச்சூலை, பீனிசம், நாசிவலி, தலைவலி, பிடரிவலி, செவிநோய், தொண்டைநோய், முசல்கண்டன், அண்டவாதம், குடல்வாதம், ஆனந்தவாயு, அந்திரவாயு, உள்வலிப்பு, புறவலிப்பு, குதிவாதம், நடுக்கு வாதம், முதலியவை தீரும். பத்தியமாயிருக்கவும்.

## நீர்க்கடுப்புக்கு.

வெள்ளரிக்காயை முளை நீக்கியரிந்து, ஈரவெங்காயமுமறிந்து, புதுப்பானையிலிட்டுப் புது நெல்லுமி மேல்வைத்துச் சாப்பிட நீர்க்கடுப்புத் தீரும்.

## கர்ப்பரோகங்களுக்கு.

விளக்கெண்ணெய், குமட்டிக்காய்ச்சாறு, வேப்பம்பட்டைக் கஷாயம், கழுஞ்சியிலைச்சாறு, ஐவிரலிச்சாறு, பிரமியச்சாறு, முடக்கொற்றான்சாறு, ஊமலாற்றிச் சாறு, காட்டுள்ளிச்சாறு இவை வகைக்குப் படி இரண்டு சேர்த்ததில், கொடிவேலிவேர், ஆடுதீண்டாப்பாளைவேர், கிளுவைப்பட்டை, நில ஆவரைவேர், குருந்தோட்டிவேர், சங்கம்வேர், மூங்கிலிலை, கஸ்தூரிப்பட்டை, வெள்ளறுகு, தலைச்சுருளிவேர், வெள்ளைக்காக்கணவேர், கற்றாழைவேர், வெள்ளைச்சாறணைவேர், இவை வகைக்குப் பலம் ஒன்றைக் கொடிக்கள்ளிச்சாற்றிலரைத்ததையும், கடுகு, திப்பிலி,

கடுக்காய், வால்மிளகு, குராசானியோமம், கடுகுரோகணி, கடுஞ்சீரகம், கஸ்தூரிமஞ்சள், அரத்தை, சுக்கு, மிளகு, சிறுநாகப்பூ, இந்துப்பு ஆனைத்திப்பிலி, பெருங்காயம், சாதிக்காய், தாளிசபத்திரி, சேங்கொட்டை, இரசக் கற்பூரம், இஞ்சி, எவாச்சாரம் இவை வகைக்குக் கழஞ்சு எடை நான்கைக் காட்டாமணக்கின் சாறும், வெள்ளாட்டுநீரும் கலந்து அதில் அரைத்ததையும் கலக்கிக் காய்ச்சி மெழுகு பதத்தில் வடித்து ஆகாயத்தாமரைக் கிழங்கும் வெண்காரமும் வகைக்கு கழஞ்சு எடை இரண்டும் எடுத்துப் போட்டு வீட்டுக்கு விலக்கான மூன்று நாளைக்கு ஒரு கரண்டி வீதம் கொடுத்து, வெள்ளாட்டுப் பாலில் கஞ்சி வைத்துக் கொடுக்கவும். பாலில்லாவிட்டால் வெந்நீரில் கொள்ளவும். நான்காம் நாள் தலைமுழுகி மறுமூன்று நாளும், ஆவரையிலை, கிளுவையிலை, ஐவிரலியிலை, இம் மூன்றையு மரைத்துப் பசுவின் வெண்ணெயிலாவது, பாலிலாவது உட்கொள்ளவும். ஆறும் நாள் தலைமுழுகி விடவும்.

இவ் வெண்ணெயில், நவச்சாரமும், நீர்முள்ளிச்சாறும், கலந்து உட்கொள்ள மகோதரம், நீராம்பல், பெருவயிறு, சூலை, குன்மம், பித்தம், உள்மாந்தை, பாண்டு, சோகை, கரப்பான், வாதசூலை, இந்திரகண்டி, மலக்கட்டு, இரைச்சல், கிருமி, வாயு முதலிய நோய்களுந் தீரும்.

## கிளிமூக்கெண்ணெய்.

நல்லெண்ணெய் படி ஒன்று, ஈரவெங்காயம் படி மூன்று, கருஞ்சீரகம் பலம் மூன்று, பச்சைக்கொட்டைஎண்ணெய் படி ஒன்று, ஏலம், சாதிக்காய், கிராம்பு, சீனிச்சர்க்கரை, சீனக்கற்கண்டு, கல்நாறு, கசகசா இவை வகைக்குப் பலம் ஒன்று, இளநீர் படி ஒன்று இவற்றைச் சேர்த்து கம்புயிடித்துப் போட்ட அந்தத் தண்ணீரில் எண்ணெயூற்றி வடிக்கவும்.

## உதிர வாயுக்கு.

சதுரக்கள்ளிச்சாறு, ஈரவெங்காயச்சாறு, கொடிவேலிச் சாறு, முள்ளிக்காய்ச்சாறு, கொங்கவெற்றிலைச்சாறு, தேங்காய்ப் பால் வகைக்குப்படி ஒன்றில் துத்தம், துருசு, கடுக்காய், கந்தகம் வகைக்கு விராகன் எடை ஒன்று அரைத்துக் கலக்கிக் காய்ச்சி வடிக்கவும். இதில் 5 முதல் 10 துளிவரையில், பால், சிசிநீர், இவைகளில் கொடுக்கப் பேதியாம். வாயுநோய் போகும். அதிகப்பேதியானால் மோர்ச்சோறு தின்னவும்.

## அண்டவாயுவுக்கு.

கழற்சியிலைச்சாறும், நல்லெண்ணெயும் சரிகூட்டி உள்ளுக்குக் கொடுத்து ஷை சக்கையை பிடித்து வீக்கத்திற் கட்டவும்.

## முகசன்னிக்கு.

கருநொச்சி, வெள்ளைநொச்சி, சித்திரமூலம், வேலிப்பருத்தி, மாவிலங்கப்பட்டை, எருக்கம்பூ, சதுரக்கள்ளிப்பட்டை, கொடிக்கள்ளிப்பட்டை, குன்றிமணிப்பட்டை எட்டிப்பட்டை, கருவூமத்தை, இவைகளை யிடித்து மண்பானையிற் போட்டுப் பதக்கு நீர்விட்டு, எட்டிலொன்ருய்க் காய்ச்சியிறுத்ததில், சிறுதேக்கு, கோஷ்டம், கல்நாறு, வாயுவிளங்கம், அக்கிராகாரம், சதகுப்பை, ஓமம், கடுகுரோகணி, திப்பிலி, சுக்கு, வால்மிளகு இவை வகைக்கு விராகன் எடை ஒன்று எடுத்துச் சூரணித்துப்போட்டு வேப்பெண்ணெய் படி ஒன்று கூட்டிக் காய்ச்சி மெழுகுபதத்திலிறக்கிக் கொள்ளவும். இதில் இரண்டு மூன்று துளி உள்ளுக்குக் கொடுத்து மேலுக்கும்பூசி ஒற்றிடமிடவும்.

## சோபை வீக்கத்துக்கு.

வெள்ளாட்டுப்பால், வேலிப்பருத்திச்சாறு, கோவைத்தண்டுச்சாறு, இவை வகைக்கு அரைஆழாக்குச் சேர்த்து, மிளகுச் சூரணம்போட்டு உட்கொள்ள வயிறுகழியும். புழுங்கல் அரிசிச்சோற்றில் பால் விட்டுச் சாப்பிடவும். இந்தபடி மூன்று நாள் கொள்ளவும். தாகமெடுத்தால் வெந்நீர் கொள்ளவும். உடலின் வீக்கம் போகும். பத்தியமாக இருக்கவும்.

## சுரத்தின்பேரில் கண்ட சோபைக்கு.

கற்ருழைவேரை வாட்டிப் பிழிந்த ஒரு ஆழாக்குச் சாற்றில் மிளகு ஒரு விராகனெடையை அரைத்துக் கலக்கி உட்கொள்ளவும். இப்படியாக எட்டு நாட்கள் வரை கொடுத்து புளி புகையிலை நீக்கவும். இதற்கு அஞ்சனம் — கொட்டைமுத்துப்பருப்பை முலைப்பாலிலுரைத்துக் கண்ணிற்போடத் தீரும்.

## எல்லாச்சோபை சுரத்துக்கும்.

வெள்ளைச்சாறணைவேர், இலந்தைவேர், சிறுசெருப்பட்டைவேர், கையாந்தகரைவேர், நிலஉகாவேர், சுக்கு, சித்திரமூலம் இவை வகைக்கு விராகன் எடை மூன்றை நீர்விட்டு எட்டிலொன்ருக்கி யிறுத்துக் கொடுக்கவும்.

கடுக்காயும் சுக்கும் சேர்த்துக் கோசலத்தில் கஷாயம் வைத்துக் கொடுக்கவும்.

வெள்ளைச்சாறணைவேரை ஆட்டு மூத்திரத்தில் கஷாய மிட்டுக் கொடுக்கவும்.

## சீழ்ப்பிரமியம் வகைகளுக்கு.

வெதுப்பிப்பிழிந்த தாழைவிழுதுச்சாறு படி ஒன்று, பசுவின் நெய் படி இரண்டு, நல்ல வெல்லம் பலம் ஒன்று, சீரகம் காசியெடை ஒன்று, பற்படாகம் அரைத்து முள்ளிக்காயளவு, இவைகளைக்கலந்து சாப்பிட சீழ்ப்பிரமியம், இரத்தப்பிரமியம், நீர்க்கட்டு, நீர்க்கடுப்பு, நீர்த்தாரையிலுள்ள சீழெல்லாம் தள்ளி விடும். பத்தியம்: பசுவின் நெய்கூட்டி உண்ணவும். இரண்டு நேரமும் தண்ணீரில் குளிக்கவும். இந்தப்பிரகாரம் ஐந்து நாள் கொள்ளவும்.

## பித்தக்கிரு கிருப்புக்கு.

முசுமுசுக்கையிலைச்சாறு, பசுவின் பால், பசுவின் நெய், இவை வகைக்குப்படி இரண்டில் இலுப்பைப்பூ, முந்திரிப்பழம், கூகைநீறு, அதிமதுரம், இவை வகைக்குப் பலம் ஒன்று, சந்தனமும், கற்பூரமும், வகைக்குக்கழஞ்சு ஒன்று, இவைகளை அரைத்துப்போட்டுக் காய்ச்சி வடித்து, சீனிச்சர்க்கரை பலம் 4ம் சேர்த்து நாள் ஒன்றுக்கு இரண்டுகழஞ்சு வீதம் நெய்யில் கொள்ள சகலவிதமான பித்த மயக்கமும், தலை கிருகிருப்பும் தீரும்.

## அசுவகெந்தித்தைலம்.

அமுக்கருச்சாறும், கருஞ்சுக்குட்டிச்சாறும், வகைக்குப்படி ஒன்று, விஷ்ணுகரந்தைச்சாறும், சங்கங்கும்பிச்சாறும் வகைக்கு படி இரண்டு, புண்ணுக்குப்பூண்டுச்சாறு, மிளகாய்த்தழைச்சாறு, சிவகரந்தைச்சாறு, வில்வயிலைச்சாறு, இவை வகைக்குப்படி இரண்டு, இவற்றைச்சேர்த்ததில் பிரப்பங்கிழங்கு, அதிமதுரம், சிறுநாகப்பூ, ஏலம், வாயுவிளங்கம், தாளிசப்பத்திரி, பரங்கிப் பட்டை இவை வகைக்கு இரண்டு ரூபாயெடை, கோட்டம், சாதிபத்திரம், கிராம்பு, இவை வகைக்கு ஒரு ரூபாயெடை, இவைகளைச்சூரணித்துப்போட்டு நல்லெண்ணெய் படி நான்கும் சேர்த்துக்காய்ச்சி, மெழுகு பதத்தில் வடித்து, மேற்படிச்சூரணங்

களைப்போட்டு இறக்கி ஆறவிட்டு வடித்துக்கொள்ளவும். ஒரு கரண்டியளவு 24 நாள் உட்கொள்ள வாதக்கரப்பான், பித்தக் கரப்பான், விஷக்கரப்பான் முதலியவை தீரும். இச்சாபத்தியம்.

### வாயுவுக்கு.

சீனிக்காரம் பலம் ஒன்று, வெடியுப்பு பலம் நான்கு, இந்துப்பு பலம் இரண்டு, புளி பலம் இரண்டு, இவைகளை நன்ருயரைத்துப் புதுக்கலசத்தில் போட்டு நன்ருய்க்காய்ச்சி மேலோடு மூடி சீலைமண் செய்து புடமிட நல்ல வெண்மையான பற்பமாகும். இதில் ஒனறு முதல் ஐந்து குன்றிமணி எடை, தேனிலும் பசு வெண்ணெயிலும் கொடுக்க வாயு நோய்கள் போகும்.

### லிங்கக்கட்டு.

சாதிலிங்கக்கட்டுக்கு கஞ்சாசாற்றில் சுருக்கிடக் கட்டும்.

### வெள்ளைப் பாஷாணக் கட்டு

வெள்ளைப்பாஷாணக்கட்டுக்கு குட்டி விளாச்சமூலத்தில் குழித்தைலமிறக்கிச் சுருக்குக் கொடுக்க இறுகிக்கட்டும்.

### அறுகம் வேர்த் தைலம்.

அறுகம்வேர் பலம் பத்து எடுத்து, எட்டு படி தண்ணீரி லிட்டு, எட்டொன்ருய்க் காய்ச்சிய நீரில் நல்லெண்ணெய் படி ஒன்று, விட்டு அதில் வெட்டிவேர், கார்போகவலரிசி, கோஷ்டம், இவை வகைக்குக்கழஞ்சு ஒன்றை அரைத்துப்போட்டுக் காய்ச்சி வடித்துத், தலைமுழுகிவர மண்டையிடி, பித்தம், மஞ்சள் போல், நீரிறங்கி உடலின்று அனல் நீங்கும், கண் குளிரும், பித்தம் முதலியவை தீரும். புளி புகை நீக்கவும்.

### வாயுக்களுக்கு.

சங்கம்வேர், முட்கொளுஞ்சி, பரங்கிப்பட்டை, கொடிவேலி, சுக்கு, வாயுவிளங்கம், சிறுதேக்கு, கொத்துமல்லி இவை வகைக்கு விராகன் இரண்டு எடை எடுத்து விடித்து மூன்று படி நீர் வார்த்து, கஷாயம் வைத்து வடித்ததில், மிளகு விராகன் எடை ஒன்றைப் பொடித்துப் போட்டு விளக்கெண்ணெய் காசியெடைவிட்டு ஆறுநேரம் கொடுக்கவும். புளி புகை நீக்கவும்.

## அமுதச் சக்கரை யெண்ணெய்.

மேற்றேல் போக்கிய சிந்தில் கொடி பலம் நாற்பது, நெல்லி வற்றல் பலம் இருபது, வில்வவேர், நன்னாரிவேர், முத்தக்காசு, இவை வகைக்குப் பலம் இரண்டு, இவைகளை யிடித்து எட்டு வள்ளம் நீர் வார்த்து எட்டொன்ருய்க் காய்ச்சி, வடித்த கஷாயம் வள்ளம் ஒன்று, நல்லெண்ணெய் வள்ளம் ஒன்று, பசுவின் பால், வெள்ளாட்டுப்பால், இளநீர் வகைக்கு ஓர் வள்ளம்; அரக்கு, கஷாயம் படி இரண்டு; இவைகளைச் சேர்த்து அதில் சந்தனம், அதிமதுரம், பேரீச்சம் பழம், முந்திரிப்பழம், வெட்டிவேர், விளாமிச்சம் வேர், கஸ்தூரி மஞ்சள், மரமஞ்சள், நல்ல மஞ்சள், கோரைக்கிழங்கு, ஏலம், லவங்கப்பட்டை, லவங்கப்பத்திரி, கடுக்காய், தான்றிக்காய், நெல்லிப்பருப்பு, சுக்கு, மிளகு, திப்பிலி, கோரைக்கிழங்கு, கடுகுரோகிணி; இவை வகைக்கு விராகன் நாலை பால் விட்டரைத்துச்சேர்த்து அடுப்பில் வைத்து ஏழு நாள் அக்கினிபுடத்தில் வைத்து, எட்டாம் நாள் காடாக்னியாய் எரித்து மெழுகு பதத்தில் வடித்து, அதில் குங்குமப்பூ, கோரோசனை, பச்சைக்கற்பூரம், கஸ்தூரி, இவை வகைக்கு விராகன் எடை ஒன்று எடுத்துப்பொடித்துப்போட்டு, ஏழு நாள் தானிய புடத்தில் வைத்து எடுத்துக்கொண்டு, வாரத்துக்கிரண்டு முறை தலை முழுகிவர, பித்தவெட்டை, உஷ்ண நோய்கள், வறட்சி, எலும்புருக்கி, அதிசாரம், ஆரோசகம், அக்கினிமந்தம் முதலிய நோய்கள் தீரும்.

## சீந்தில் லேகியம்.

சீந்தில்சர்க்கரை படி ஒன்று, வெட்டி வேர், சீரகம், லவங்கப்த்திரி, கோஷ்டம், நெல்லி வற்றல், முள்ளிவேர், நிலப்பனைக் கிழங்கு, ஏலம், அரேணுகம், முந்திரிப்பழம், தக்கோலம், குங்குமப்பூ, பரங்கிப்பட்டை, நாகப்பூ, தாமரை வளையம், தாமரைக் கிழங்கு, பச்சைக்கற்பூரம், சந்தனம், சாதிக்காய், ரத்தசந்தனம், சுக்கு, திப்பிலி, மிளகு, அதிமதுரம், நெற்பொறி, அமுக்கருக்கிழங்கு, தண்ணீர் விட்டான் கிழங்கு, நெருஞ்சி வேர், கற்கடக சிங்கி, இவை வகைக்கு விராகன் எடை ஒன்று எடுத்துப் பொடித்து, இதற்கு இரட்டிப்பு சீனிச்சர்க்கரை கலந்து நெய் கூட்டிப்பிசைந்து எடுத்துக்கொண்டு வெருகடியளவு உட்கொள்ள, மேகம், பித்தவெட்டை, சோகை, உடல்வெக்கை முதலிய நோய்கள் தீரும். கை கண்டது.

## மகா பூதிகாத் தைலம்.

எருக்கிலை சமூலத்தை இடித்துப்பிழிந்த சாறு படி ஒன்று, கள்ளிப்பால் படி இரண்டு, வாதமடக்கிச்சாறு, வெள்ளாட்டுப் பால், நொச்சியிலைச்சாறு, காட்டுமுருங்கைப்பட்டைச்சாறு இவை வகைக்குப்படி ஒன்று, நல்லெண்ணெய், வேப்பெண்ணெய், விளக்கெண்ணெய், இலுப்பையெண்ணெய், புங்கெண்ணெய், இவை வகைக்குப்படி இரண்டு, இவைகளைக்கலந்து அதிமதுரம், கோட்டம், சதகுப்பை, தேவதாரம், ஓமம், மரமஞ்சள், கஸ்தூரிமஞ்சள், வெளிச்சிப்பிசின், வலம்புரிக்காய், திப்பிலி மூலம், கொடிவேலிவேர் இவை வகைக்குப்பலம் இரண்டும், பெருங்காயம், இரசம், கந்தகம், வெள்ளைப்பாஷாணம், கௌரிப் பாஷாணம், அரிதாரம், மனோசிலை, நாபி, நிருவிஷம், இவைகளைச் சுத்தித்து வகைக்கு பணவெடை ஐந்தும், வாயு விளங்கம், பலம் இரண்டும் கூட்டியரைத்து முந்தின சாறுகளில் கரைத்து, வேகவைத்து வடித்து, எண்ணெயுடன் கூட்டிக்காய்ச்சி, மெழுகு பதத்திலிறக்கி வடித்து மேலுக்கு நாற்பது நாள் பூசி, சாயந்திரம் வெந்நீர் வார்த்துக்கொள்ள சன்னிவாதம், திமிர்வாதம் முகவாதம், குத்துவாதம், சருவாங்கவாதம், பக்கவாதம், எரி வாதம், நடுக்கு வாதம், அரைகிழ் வாதம், துடி வாதம், முலை வாதம், வீச்சு வாதம், தனுர் வாதம் முதலிய சகல வாத ரோகங்களும் தீரும். கை கண்டது.

## அக்கினி குமாரன்.

எருக்கன் கொழுந்தும் எருக்கம் பூவும் வகைக்குப் பிடி ஒன்று, திரிகடுகு விராகன் எடை ஆறு; இவைகளையரைத்து உழுந்துப் பிரமாணம் மாத்திரைகள் செய்து, உலர்த்தி, ஒன்று முதல் இரண்டு மாத்திரைவரை கையாந்தகரைச்சாறும், தேனும் கலந்ததில்கொடுக்க வாதச்சுரமும்; முசுமுசுக்கைச்சாறும், முலைப் பாலும் கலந்ததில் கொடுக்க பித்தசுரமும்; இண்டஞ்சாறும், தேனும், திப்பிலிப்பொடியும் கலந்ததில் கொடுக்க சிலேட்டுமச் சுரமும் தீரும். நாடி யதிகரித்திருந்தால், ஆடாதோடை, துளசி, எருக்கங்கொழுந்து, இவைகளைப்பிட்டுக்கட்டி வேகவைத்துப் பிழிந்த இரசமும் பசுவின்பாலும் கலந்ததில் கொடுக்கத்தீரும்.

## மணிமந்திரச்சூரணம்.

இந்துப்பு விராகன் எடை ஒன்று, சீரகம் விராகன் எடை இரண்டும், ஓமம் விராகன் எடை மூன்று, திப்பிலி விராகன் எடை

நான்கு, சுக்கு விராகன் எடை ஐந்து, கடுக்காய்ச்சூரணம் விராகன் எடை ஐந்து; இவைகளைச்சூரணித்து வெருகடிப்பிரமாணம் இரண்டுவேளை வெந்நீரில் கொள்ள கழிச்சலுண்டாகும். பசியைத் தூண்டும். கிராணி தீரும். நாள்பட்ட மலக்கட்டுகளைத்தள்ளும். அக்கினி மந்தத்துக்கு ஒரு மண்டலம்கொள்ளவும். உண்ட அசனம் ஜீரணம் ஆகாததும், மந்த வாயுவும் தீரும்.

### மூலக்கிராணிக்கு.

கொம்பரக்கு, சாதிக்காய், அபினி, குராசானியோமம் இவற்றை ஓர் அளவாகக் கூட்டி யரைத்து நல்லெண்ணெயிற் பிசைந்து ஒரு குன்றியணி அளவு கொடுக்க கிராணிமூலம், மூலம், கருப்பு இவைகள் தீரும்.

### மேகரோகங்களுக்கு.

ஒருபடி புங்கம் பூவை இரண்டுபடி பசுவின் நெய்யை சிறுகச் சிறுகவிட்டு வறுத்தெடுத்து நாள் ஒன்றுக்கு வெருகடியளவு அந்தி சந்தி உட்கொள்ள மேகவெடிப்பு, மேகப்புண், மேகசூலை, மேகவெட்டை முதலிய மேகநோய்கள் தீரும். வெள்ளாட்டு வற்றல் அதிகங்கூட்டி, புளி புகையிலை நீக்கவும்.

### பிரமியங்களுக்கு.

பழம் பாசியை நீரில் வேகவைத்துப் பிழிந்து இறுத்தது படி ஒன்றில் நற்சீரகமும், வெள்ளைப்பூண்டும் வகைக்குப் பலம் இரண்டு அரைத்துப் போட்டு, மேற்படிச் சாறளவு நல்லெண்ணெய் ஒரு படியும், சீனிச்சர்க்கரை பலம் இரண்டும் சேர்த்து சூரியபுடமாக இருபது நாள் வைத்தெடுத்து அதில் ஒரு கரண்டி அளவு மூன்றுநாள் உட்கொள்ள முற்றிய வெள்ளைப்பிரமியம், மேகவெட்டை முதலியவை தீரும்.

### வெள்வங்கப் பற்பம்.

வெள்வங்கமும், நாகமும், வகைக்கு விராகன்எடை இரண்டு எடுத்துக் கூட்டி உருக்கு முகத்தில் இரசம் விராகன் எடை இரண்டு கொடுக்க வெட்டையாகும். அதை* உமிழ் நீர் விட்டு ஒரு சாமமரைத்து வில்லை செய்துலர்த்தி ஓட்டிவிட்டுச் சீலைமண் செய்துலர்த்தி கஜபுடமிடப் பற்பமாகும். இப்பற்பத்தில் பண வெடை பசுவின் வெண்ணெயிற் கொள்ள வெட்டைச்சூடு, பிர

* உமிழ்நீர் என்பது வெடியுப்பு செய் நீராம்,

மியம், சிழ்ப்பிரமியம், இரத்தப்பிரமியம், நீர்க்கடுப்பு, இரத்த மூலம் முதலியவை தீரும். புளி புகையிலை நீக்கவும்.

## நீர்க்கடுப்புக்கு.

அதிமதுரம், கசகசா, சீரகம், மாசிக்காய், கூடைநீறு, இவைகளைச் சூரணித்து எருமைத்தயிரிற் கொள்ளவும். இச்சா பத்தியம்.

## லோகச் செந்தூரம்.

அரப்பொடி, சூதகம், வீரம், நவச்சாரம், இவை வகைக்குப் பலம் ஒன்று, பூநீறு பலம் முக்கால், இவைகளை மூன்றுநாள், நன்றாகச் சிவக்குமட்டும் அரைத்துப் புதுச்சட்டியிலாவது இரும்புச் சட்டியிலாவது போட்டுப் பதமாய் வறுக்கச் செந்தூரமாகும். இதை கால்பணவெடை கருப்புக்கட்டியில் திரிகடுகுச் சூரணம் சேர்த்ததில் உட்கொள்ள, சோகை, பாண்டு, குன்மம், வாதசூலை முதலியவை தீரும். இச்சா பத்தியம்.

## கந்தகப் பற்பம்.

நெல்லிக்காய் கந்தகம் பலம் ஒன்று, வெடியுப்பு பலம் இரண்டு, சீனிக்காரம் பலம் இரண்டு; இவைகளையுருக்கி கற்சுண்ண நீரிலரைத்து வில்லை தட்டியுலர்த்தி ஓட்டிலிட்டுச் சீலை மண்செய்து பெரிய குடத்தில் கீழும் மேலும் எருவடுக்குப்புடம் போட நீர்க்கும். நெய், தேன், வெண்ணெய் இவைகளில் ஒன்றில் குன்றுமணி அளவு கொடுக்கவும். மேகநோய்கள் போம்.

## வீரச்செந்தூரம்.

வீரம் பலம் ஒன்று, அரப்பொடி பலம் இரண்டு, கந்தகம் பலம் இரண்டு, இவற்றைக் குமரிச்சாற்றில் நான்குசாமமரைத்து வில்லைகள் செய்துலர்த்திப் புதுச்சட்டியில் கற்றாழஞ்சோறு கீழும் மேலும் வைத்து அதன் நடுவில் வில்லையை வைத்து மேற்சட்டிமூடி சீலைமண் ஏழுசெய்து, ஐந்து சாமமெரித்து நன்றாய் ஆறவிட்டு எடுத்து அதில் ஒரு அரிசி எடை பனைவெல்லத்தில் கொடுக்கவும்.

குள்ளநரிப்பித்து, நாய்ப்பித்து, அபினி, கருமூமத்தன் விதை, கிராம்பு, தகரைவிதை, கஞ்சா இவைகளேழும் சாராயம் விட்டரைத்துச் சுண்டைக்காய்ப்பிரமாணம் குளிகை செய்து வைத்துக் கொள்ளவும்.

## உளைமாந்தைகளுக்கு.

கள்ளிப்பால், இந்துப்பு, காந்தம், சூதம், கந்தகம், உள்ளி, வசம்பு, சுக்கு, திப்பிலி, கடுக்காய், வெங்காரம், நவச்சாரம், வளையலுப்பு, கல்லுப்பு, இவைகளைச் சமனுகச்சேர்த்துத் தேங் காய்க்குள் போட்டு அடைத்து மண்பொழிந்து மேலே சாணியப்பி வேகவைத்து எடுத்து வெல்லப்பாகு சேர்த்தரைத்துக் கொண்டு கால் விராகனெடை வீதம்கொள்ள, அகுவை, சூலை, கெண்டை, விஷபாகம், அள்ளு மாந்தம், விப்புருதி, வீச்சு, குத்திருமல், வீக்கம் முதலியவைகள் தீரும்.

## சுகவிரோசனத்திற்கு.

இரசம் கழஞ்சு ஒன்று, கந்தகம் கழஞ்சு இரண்டு, சுத்தி செய்த நேர்வாளம் கழஞ்சு ஒன்று, சதுரக்கள்ளி விதை கழஞ்சு இரண்டு, வெங்காரம் கழஞ்சு மூன்று, ஆமணக்குமுத்துப்பருப்பு கழஞ்சு நான்கு, சேராங்கொட்டை கழஞ்சு ஐந்து, சிவதைக்கழஞ்சு ஆறு, முருக்கன்விதை கழஞ்சு ஆறு, இவைகளைப் பொடித்து இலைக்கள்ளிச் சாற்றிலரைத்துத் தேங்காயுள் வைத்து, சீலை மண் வன்மையாகச் செய்து கசபுடம் போட்டெடுத்து, கவசம், நீக்கி மருந்தையெடுத்து அரைத்து வைத்துக்கொண்டு அதில் சிறிது எடுத்துத் தொப்புளிற்றடவப் பேதியாகும். உள்ளங் காலிற்றடவினுலும் பேதியாகும். பூச்செண்டில் தடவிமுகர்ந்து பார்த்தாலும் பேதியாகும். குளிர்ந்த ஜலத்திற் கழுவினுல் பேதி நிற்கும்; பத்தியம் இல்லை.

## குன்மம் வாந்தி ஏப்பத்துக்கு.

இந்துப்பு பலம் முக்கால், கொடிக்கள்ளிப்பால் படி அரை, இவைகளை முற்றிய தேங்காயின்நீரை நீக்கியபின் மேற்படி மருந்தைப்போட்டுக் கண்ணடைத்துச் சீலைமண்செய்து மேலோடு கருகச்சுட்டு, ஓடு நீக்கிமற்றவைகளை யரைத்து லேகியம் போல் வைத்துக்கொண்டு, தூதுவளங்காயளவு கொடுக்கப் பேதியாகும். வெந்நீர் கொள்ளவும். பேதி அதிகமானுல் மோரும் சோறுமுண்ணவும். பின்னும் அதிகமானுல் துட்டெடைத்தேன் கொள்ளவும்.

## இருமலுக்கு.

கடுக்காய்ச் சூரணம் நாளொன்றுக்கு 3 அல்லது 4 நேரம் ஒரு வராகனெடை வீதம் தேனிற் சாப்பிடவும். புளி நீக்கவும்.

## மலசலக்கட்டுக்கு.

வெங்காரம், சவுக்காரம், சீனிக்காரம், இவைகளைவெதுப்பி இளநீரிற்கொள்ள மலசலமிறங்கும்.

## திரிதோஷத்துக்கு.

கொடிவேலிவேர், இந்துப்பு, திப்பிலி, கடுக்காய், இவைகளைச் சூரணித்து வெருகடியளவு தேனிற்கொள்ள வாதமும், சீனியில் கொள்ள பித்தமும், பரணியிற்கொள்ள உஷ்ணமும், வெந்நீரிற் கொள்ள பசியில்லாமையும் தீரும்.

## விரைவாதத்துக்கு.

மிளகு பலம் ஒன்று, இரசக்கற்பூரம் கழஞ்சு ஒன்று, சாதி லிங்கம் விராகன் எடை இரண்டு, இவைகளைத் தேன்விட்டரைத்து மெழுகாக்கி தூதுவளங்காயளவு அந்தி சந்தி ஐந்து நாள் வரை கொள்ளவும். பத்தியமாயிருக்கவும்.

## கபால வலிக்கு.

பச்சைமஞ்சள்சாறு ஆதண்டைச்சாறு, நொச்சியிலைச்சாறு, விளக்கெண்ணெய் இவை வகைக்குப்படி ஒன்றில், அரத்தையும், சதகுப்பையும், வகைக்குப் பலம் ஒன்றை அரைத்துக் கூட்டிக் காய்ச்சி பதத்தில் வடித்து முழுகிவர கபாலவலி, ஒருதலைவலி, இவைகள் தீரும்.

## வயிற்றுக்கடுப்பு—பெரும்பாடு வகைகளுக்கு

தென்னம்பாளையையிடித்துப் பிழிந்தசாறும், பசுவின் தயிரும் வகைக்கு ஆழாக்கு ஒன்று, வாழைப்பழநீர் பலம் ஒன்று, இவைகளைக் கலந்து கொடுக்கச் சீதம், இரத்தம் விழுகிறதும், பெரும்பாடும், நீர்ச்சுருக்கும் தீரும். புளி நீக்கவும்.

## மாதவிடாய் வராதவளுக்கு.

வேலிப்பருத்திக்கொழுந்து 5 அல்லது 6, மிளகு 5 அல்லது 6, சேர்த்து ஏழுநாளைக்கு இரண்டுவேளையாக கொள்ளின், கர்ப்ப வாயு நீங்கி மாதவிடாய் வரும். உப்பு, புளி, புகை நீக்கவும். வெந்நீரும் சாதமும் உண்ணவும்.

## மேக உஷ்ணத்துக்கு.

பொன்னாங்கண்ணி, வால்மிளகு, நற்சீரகம், ஈருள்ளி, ஒருக் கட்டைப்பூண்டு இவைகளைப் பசுவின் மோரிலரைத்து, வில்வக்

கொழுந்தை புளித்தண்ணீர் விட்டிடித்துப் பிழிந்த இரசமும் சிறிது கூட்டிக் கரைத்து மூன்று நாள் சாப்பிடவும். இச்சா பத்தியம்.

## சூட்டுக்கு.

ஆத்திப்பட்டை, நஞ்சுண்டாம்பட்டை, கொடிவேலிவேர்ப் பட்டை இவற்றைச் சரிகூட்டியரைத்து, நல்லெண்ணெய் படி ஒன்றில் கலக்கி, ஆவரை விறகாலெரித்துக் குழம்பாகவரும் போது, நல்ல வெல்லம் அச்சு 2, பொடித்துப் போட்டுக் காய்ச்சி மெழுகுபதத்தில், கிராம்பு, ஏலமும் வகைக்குக் காசியெடை இரண்டு, சாதிக்காய் ஒன்று, சீனிச்சர்க்கரை பலம் இரண்டு, இவைகளைப் பொடித்துத்தூவிக் கிளறி, இறக்கியாறவைத்து, ஒரு கரண்டியெண்ணெயும், அதனுடைய கல்கமும், இரண்டு வேளை சாப்பிட எல்லாவித சூடுகளும் தீரும். பத்தியமாய் இருக்கவும். பசுவின் தயிர், நெய், நெற்சோறு, காட்டுக்கம்புச்சோறு, துவரை, பாசிப்பருப்புகள், பிஞ்சுக்கத்திரிக்காய் இவை சேர்க்கலாம். புளி, புகை, அவ பத்தியம் கூடாது.

## பிரமியம் எல்லாவற்றிற்கும்.

பருத்திப்பிஞ்சும், ஈரவெங்காயமும் ஓர் அளவாகக் கொண்டு பசுவின்பால்விட்டுப் பிசைந்து, அச்சாற்றை புதுச்சட்டியிலிட்டு, மேற்சட்டிமூடிப் பனியில் வைத்து உதயத்திற்கு முன்னமே, அரை ஆழாக்கு கொள்ள ஏழு நாளில் சலப்பிரமியம், இரத்தப் பிரமியம், சுக்கிலப்பிரமியம், உள்ளுருக்கி, உடம்புருக்கி, உட்காய்ச்சல், வறட்சி, உஷ்ணம், முதலியவை தீரும். கைகண்டது.

## வெள்ளைக்கு.

ஆத்திக்கொழுந்து, நற்சீரகம், சீனிச்சர்க்கரை, பச்சை வாழைப்பழம் இவைகளைச் சேர்த்தரைத்துச் சாப்பிடவும். இச்சாபத்தியம்.

## சூட்டுமேல் வயிற்றோட்டத்துக்கு.

உழக்குப் பசுவின்பாலில் கோவைச்சாற்றைப் பிழிந்து குடிக்க உடனே நிற்கும்.

## கண்ணில்விழும் ஆணிப்பூ வகைகளுக்கு.

தலைமயிர்சுட்ட சாம்பல், துத்தம், துருசு, இவற்றைச் சரி கூட்டி சங்கிலை, புளியிலை, இவைகளைப் பசுவின்பால் வார்த்து

இடித்துப் பிழிந்த சாற்றில் அரைத்து, வெண்ணெயில் குழப்பிக் கண்ணிலிட ஆணிப்பூ, நீர்முட்டு, தினவு இவைகள் தீரும்.

## வயிற்றுக்கடுப்புக்கு.

கூகைநீறு, எலுமிச்சம்பழச் சாறு, நல்லெண்ணெய் இவைகளைக் குழப்பிக் கொடுக்கவும்.

பருத்திப்பிஞ்சையரைத்து எருமைத் தயிரிற்கொள்ள சீதக் கடுப்புத்தீரும்.

எலுமிச்சம் பழச்சாற்றிலரைப்படிப் பாலை உட்கொள்ள இரத்தக்கடுப்பு தீரும்.

ஓமத்தை எருமைத்தயிரிலூறவைத்துச் சாப்பிட சீத ரத்தக்கடுப்பு தீரும்.

வாழைப்பிஞ்சை மேற்றோல் சீவி யரைத்து எருமைத்தயிரிற் கொள்ளத் தீரும்.

## பெரும்பாட்டுக்கு.

அத்திப்பட்டையைத் துவைத்துத் தண்ணீர் விட்டுப் பிசைந்து பிழிந்து வடிகட்டியநீர் படி இரண்டை ஒரு கொதியிட்டு அத்துடன் நல்லெண்ணெய் படி ஒன்று சேர்த்துப் பனைவெல்லம் ஒரு வட்டுப்போட்டு மூன்று கம்பியோடக்காய்ச்சி குருவை நெல் லரிசி மாப்போட்டுக் களிக்கிளறி சாப்பிடத் தீரும்.

## எருக்கன்வேர்ச் சூரணம்.

உலர்ந்த எருக்கம் வேர்ப்பட்டையைச் சூரணித்துக்கொண்டு கிரந்தி, மேகத்தால் தோல்மேல்வரும் வியாதிகளாகிய சொறி, சிரங்கு, வெண்குட்டம் முதலியவைகளுக்கு, வலிய ஆளுக்கு 2 குன்றிமணி முதல் 8 குன்றிமணி யெடைவரைக்கும், 2 மாதக் குழந்தைக்கு 1-15ம், ஏழுமாதக் குழந்தைக்கு 1-12ம், 14 மாதக் குழந்தைக்கு 1-8ம், 20 மாதக் குழந்தைக்கு 1-6ம், 3 வருடப் பையனுக்கு 1-4ம், இப்பிரகாரம் வயது அறிந்து கொடுக்கவும்.

## அட்டைவிடுதல்.

இரத்தக்கட்டு, விதைவீக்கம், சுளுக்கு, கண்வலிக்குக் கன்னத்தில் விட்டால் குணமாகும். மற்றவைகளுக்கு வேதனையிருக்குமிடத்தில் விடவும்.

### சீதலத்தால் தொண்டைகம்மலுக்கு.

திருநீற்றுப்பத்திரி விதையை நீரிலூறவைத்து உட்கொள்ளத் தீரும்.

### சூதகவலிக்கு.

வெள்ளைச்சாறணைவேர், வெள்ளைவெங்காயம், சுக்கு, மிளகு இவைகளை யரைத்து வெந்நீரிற் கொடுக்கவும்.

### விரோசனக்குளிகை.

சாதிலிங்கம் விராகன் எடை ஒன்று, இரசக் கற்பூரம் விராகன் எடை ஒன்று, கிராம்பு விராகன் எடை நான்கு, நேர்வாளம் விராகன் எடை நான்கு, இவைகளைச் சங்கங்குப்பிச் சாறு விட்டரைத்துத் தூதுவளங்காயளவு மாத்திரைகள் செய்துகொண்டு அனுபானங்களில் கொடுக்கவும்.

(2) உத்தாமணிவேர், தும்பைவேர்ப்பட்டை, கொழிஞ்சி வேர்ப்பட்டை, இவைகளை உத்தாமணியிலைச்சாறு, தும்பையிலைச்சாறு இவற்றைச் சரிகூட்டி அரைத்துச் சுண்டைக்காய்ப், பிரமாணம் உருட்டி உலர்த்தி உட்கொள்ளவும்.

### சன்னிக்குளிகை.

வெள்ளைப்பாஷாணம், இரசம், அபினி, துத்தம், கிராம்பு இவை வகைக்கு ஒரு விராகனெடை, வெங்காரம் விராகன் எடை இரண்டு; இவைகளை இரும்புச் சட்டியிலிட்டு இரும்புக்கிண்ணங் கொண்டு நான்கு சாமமரைத்துப் பயிறுப்பிரமாணம் மாத்திரைகள் செய்துகொண்டு பச்சைத்தண்ணீரில் கொடுக்க, பித்த சன்னி, வாதசன்னி, திருகுசன்னி, முதலிய சன்னிகள் எல்லாம தீரும். பத்தியமாய் இருக்கவும்.

### ஈளை, காசம், கோழை, விப்புருதி இவைகளுக்கு.

வெள்ளைவெங்காயம், மிளகு, சீரகம், கடுக்காய், திப்பிலி, சுக்கு, ஓமம், இந்துப்பு, கிராம்பு, கடுகுரோகணி, கருஞ்சீரகம், வகைக்கு விராகன் எடை மூன்று, தூதுவளம்பழம் படி ஒன்று, நல்லெண்ணெய் படி மூன்று, வேப்பஞ்சாறு ஒரு ஆழாக்கு இவைகளைக் கூட்டிக் காய்ச்சி மெழுகு பதத்தில் வடித்து, ஒரு கரண்டியளவு ஒரு மண்டலம் உட்கொள்ள இருமல் முதலியவைகள் தீரும். பத்தியம் இருக்கவும்.

### பெரும்பாட்டுக்கு.

ஈரவெங்காயம் வீசை ஒன்றை சிறுக அரிந்து பசுவின் நெய்யில் வறுத்து, அதில் சர்க்கரை பலம் இரண்டும், ஏலம் விராகன் எடை இரண்டும் கலந்து ஐந்துநாள் உட்கொள்ளவும்.

### விஷபாகத்திற்கு.

வெள்ளாட்டுப்பால் படி இரண்டு, வேலிப்பருத்திச்சாறு படி இரண்டு, கோவைத் தண்டுச்சாறு படி ஒன்று, மிளகு விராகன் எடை இரண்டு; இவைகளைக் கலந்து வெய்யிலில் காய வைத்து இரண்டு கரண்டியளவு சாப்பிடவும்.

### சூட்டுக்கு.

பொன்னுங்கண்ணி, வால்மிளகு, நற்சீரகம், ஈருள்ளி, ஒருக் கட்டைப்பூண்டு, இவைகளைப் பசுவின்மோர் விட்டரைத்து நீரா காரத்தோடு வில்வயிலையை இடித்துப் பிழிந்த இரசம் கூட்டிக் கலக்கி வடிகட்டி தக்க அளவில் நான்கு அல்லது ஐந்து வேளை சாப்பிடத் தீரும். இச்சாபத்தியம்.

### மாந்தக்குளிகை.

பெருங்காயம், வசம்பு, ஓமம், சுக்கு, திப்பிலி, மிளகு, ஒருக் கொட்டைப்பூண்டு, மலைதாங்கிவேர், இவை வகைக்கு விராகன் எடை மூன்று, முசுமுசுக்கை, முடக்கொற்றான், பொரும்பி, வேலிப்பருத்தி, தும்பை, கொளிஞ்சி, காட்டவரை, துளசி இவை களின் இலை, ஆவரங்கொழுந்து, இவைகளைச் சிறுநீர்விட்டுத் துவைத்துப் பிழிந்த சத்தில், மேற்கூறிய சரக்குகளைக் கூட்டி அரைத்து, குன்றிமணியளவு மாத்திரைகள் செய்து, ஆண்குழந் தைக்குப் பெண்குழந்தை சிறுநீரிலும், பெண்குழந்தைக்கு ஆண் குழந்தைச் சிறுநீரிலும் கொடுக்கவும்.

### காதில் சீழ்வடிதலுக்கு.

வாகை விதையையும் பூவையும், நல்லெண்ணெயிற் காய்ச்சி செவியில்விட சீழ்மாறும்.

### சித்திரமூல எண்ணெய்.

கொடிவேலிவேர் பலம் நான்கை நான்குவள்ள நீரிலிடித்துப் போட்டு ஒரு வள்ளமாகக் காய்ச்சி இரும்புச் சட்டியில் வடித்த

தில் மிளகு, திப்பிலி, கடுக்காய், நெல்லிவற்றல், தான்றிக்காய், முத்தக்காசு, விளாவரிசி, திப்பிலி மூலம், நெருஞ்சிசமூலம், கொத்துமல்லி, வசம்பு, சிறுதேக்கு, நன்னாரிவேர், ஓமம், சீரகம், பெருங்காயம், இந்துப்பு, கடுகுரோகணி, அத்திப்பட்டை இவை வகைக்கு விராகன் எடை பத்து சூரணித்து ஷை கஷாயத்தில் போட்டு, அத்துடன் பசுவின் நெய்படி ஒன்றுசேர்த்துக் காய்ச்சி வடித்து, ஒரு மாதத்துக்குப்பின், முள்ளிக்காயளவு அந்திசந்தி இருவேளையும், புளி, புகையிலை நீக்கி, பால்சேர்த்துக் கொண்டு சாப்பிட, உள்மூலம், பாண்டு, ஈளை, இருமல், மேலிளைப்பு, காசம், வாதசூலை, சோபை, வீக்கம், வயிற்றுப்பொருமல் முதலிய நோய்கள் தீரும். ஒரு மண்டலம் உட்கொள்ள நரை திரைமாறும்.

## ஈசுவரிச் சூரணம்.

ஆவாரம்பூ, ஆவாரம்பருப்பு, ஆவாரங்கொழுந்து, ஆவாரம் விதை, ஆவராம் வேர்ப்பட்டை, இவைகளைத் தனித்தனியாகச் சூரணித்து வஸ்திரகாயஞ்செய்தது வகைக்குப் பலம் ஒன்று, வாய்விளங்கம், மரமஞ்சள், மான்கொம்பு, புள்ளிமான் கொம்பு, இவைகளின் சூரணம் வகைக்குப்பலம் ஒன்று; இவைகளைக் கலந்து புதுக்கலசத்தில் வைத்துக்கொண்டு, வெருகடியளவு பசுவின் மோரிற் கலக்கிக் குடித்தால் உஷ்ணத்தில் எழுந்த நோய்கள் யாவும் தீரும். கைகண்டது.

## ஆதொண்டைத் தைலம்.

ஆதொண்டையிலைச்சாறு படி இரண்டும், கையாந்தகரை, நொச்சி, முருங்கிலை இவைகளின் சாறு வகைக்குப்படி ஒன்று, எண்ணெயும், பாலும் வகைக்குப்படி இரண்டு; இவற்றைச் சேர்த்து அதில் கடல்நுரை, வசம்பு, இந்துப்பு, கடுகுரோகணி, ஓமம், சதகுப்பை, சாம்பிராணி, அரிசி, சந்தனக்கட்டை, கோரைக்கிழங்கு, செங்கத்திரிப்பட்டை, சுக்கு, திப்பிலிமூலம், விலாமிச்சம்வேர், அரத்தை, கல்மதம், கல்நார், பரங்கிப்பட்டை, அதிமதுரம், கடலிராஞ்சிப்பட்டை, முருங்கைப்பட்டை, செவியம், வாயுவிளங்கம், புரசம்பட்டை, நீர்முள்ளிவேர், செண்பகப்பூ, கடுக்காய் இவை வகைக்குக் கழஞ்சு எடை ஒன்று, மஞ்சள், மரமஞ்சள், மிளகு இவை வகைக்குப் பலம் இரண்டு; இவைகளை யரைத்துக் கரைத்துக் காய்ச்சி மெழுகு பதத்தில் வடித்துத் தலைமுழுகிவர, பீனிசம், மண்டைக்கரப்பான், குட்டம், சூலை, காது நோய்கள், மார்வாதம், சூலைவாயு, மூலரோகம், அற்புத

வாய்வு, சர்வாங்கவாதம், நாசிரோகங்கள், தலைவலி முதலியன எல்லாம் தீரும்.

### இலகுபூதிகாத்தைலம்.

ஆயம்பட்டை பலம் ஐம்பதில் நீர் படி பதினாறு விட்டுக் காய்ச்சினது படி நான்கு, பசுவின்பால் படி எட்டு, நல்லெண்ணெய் படி இரண்டு; சேர்த்ததில் அதிமதுரம், கோட்டம், வாயுவிளங்கம், செவியம், சித்திரமூலம், திப்பிலி, திப்பிலி மூலம், சுக்கு, சிற்றுமுட்டி, பேருமுட்டி, லவங்கப்பட்டை, லவங்கப் பத்திரி, ஏலம், சிறுநாகப்பூ, கிராம்பு, அரத்தை, பெருங்காயம், மஞ்சள், கடுகுரோகணி, சீரகம், கருஞ்சீரகம், கடுகு, அதிவிடயம், அகில்கட்டை, வசம்பு, வெட்டியிலையரிசி, இந்துப்பு, சண்பகப்பூ, மஞ்சிட்டி இவை வகைக்குப் பலம் இரண்டாக வெடுத்துரைத்துக் கரைத்துக் காய்ச்சி மெழுகு பதத்தில் வடிக்கும்போது, வடிக்கிற கலசத்தில் புனுகு விராகன் எடை இரண்டு போட்டு வடித்து, ஐந்துநாள் தானிய புடத்தில் வைத்தெடுத்துத் தலை முழுகிவர, செவி நோய்கள், தலை நோய்கள், நாசி நோய்கள், மூலநோய்கள், குன்மநோய்கள், ஆராதரணங்கள், பவுத்திரங்கள், வாதநோய்கள் முதலியவை தீரும்.

### எருக்குத்தைலம்.

எருக்கம்பழுப்பு, பேய்க்கரும்பு, வெற்றிலை, நொச்சி, வேளை, புளியிலை, தழுதாழை, எலுமிச்சம்பழம் இவைகளின் சாறுகள் ஒவ்வொன்றும் படி இரண்டு, நல்லெண்ணெய் படி ஒன்று, இவற்றைச்சேர்த்து, அதில் கடல்நுரை, வலம்புரிக்காய், செவியம், வாயுவிளங்கம், மஞ்சள், கடுக்காய், காட்டுச் சீரகம், கருஞ்சீரகம், இவை வகைக்கு விராகன் எடை ஒன்றும், மிளகு பலம் ஒன்றும், சாம்பிராணி பலம் இரண்டும் கூட்டி அரைத்துக் கரைத்துக் காய்ச்சி மெழுகுபதத்தில் வடித்துத் தலையில் தேய்த்து முழுகிக் காதிலிட்டு, மூக்கிலுமிடத் தலைசூலை, செவிடு, நேத்திரவாயு, பீனிசம், நாசிகாபீடம், முகசன்னி, முகவாதம், கண்டத்தில் வீக்கம், வலி, தந்தவாயு முதலானவை தீரும்.

### பூதிகாத் தைலம்.

ஆயில்பட்டை பலம் 106ம், சேவகன் கிழங்கு பலம் 106ம், ஒருகலநீரில்போட்டு நாலில் ஒன்றாய்க்காய்ச்சி யிருத்ததில், நல்லெண்ணெய் படி 4-ம், பால்படி 6-ம் சேர்த்ததில் அரத்தை

சரள தேவதாரம், அகில், மரமஞ்சள், நறும்பிசின், தகரம், விளா வரிசி, சடாமஞ்சி, வசம்பு, கோஷ்டம், அடவிக்கஞ்சோளம், குந்திரக்கம், செவ்வியம், மேதை, சாதிக்காய், சிறுமூலம், சீரகம், கருஞ்சீரகம், சிறுநாகப்பூ, கடுகுரோகணி, விளாமிச்சம் வேர், புனுகுச் சட்டம், அமுக்கரும்வேர், சாரணைவேர் வகைக்குக்கழஞ்சி நான்குகொண்டு மேற்படி கஷாயம் விட்டரைத்துக் கலக்கிக் காய்ச்சி, மெழுகுபதத்தில் வடித்துத் தலைமுழுகவும். அல்லது, நசியமிடவும், அல்லது தலையில் கட்டவும். வாத பித்தங்கள், கர்ணவாதம், கபாலவாதம், அற்புத வாதம், மூக்கு நீர்ப்பாய்ச்சல் முதலியவைகள் தீரும்.

## கபால ரோகங்களுக்கு.

சுக்கு, மிளகு, மஞ்சள், மரமஞ்சள், வெங்காரம், திப்பிலி, கடல்நுரை, இலுப்பைக்கட்டி இவை வகைக்கு விராகன் எடை ஒன்றை யரைத்துக் கால்படி நல்லெண்ணெயில் விட்டுக் காய்ச்சி, காதிலிட்டு நசியமிட்டுத் தலைமுழுக பீனிசம், தலைவலி, கபால வலி, காது ரணம், காதுவலி முதலானவை தீரும்.

## தலை நோய்களுக்கு.

முருங்கப்பட்டை, வசம்பு, வெள்ளைவெங்காயம், வெண்ணையுருவிவேர், வெற்றிலைக்காம்பு, கருஞ்சீரகம் இவை வகைக்கு விராகன் எடை ஒன்றை யரைத்துக் கால்படி வேப்பெண்ணெயிலிட்டுக் காய்ச்சி வடித்து, காதிலும் மூக்கிலும் விட்டுத் தலையில்தேய்த்துத் தலைமுழுக மண்டைக் கரப்பான், காதுநோய்கள், பீனிசம், நாசிகாபீடம், தலைவலி, தலைத்திமிரம், முகசன்னி, கபாலசன்னி, கபால குட்டம் முதலியன தீரும்.

## தூதுவளை எண்ணெய்.

தூதுவளைச் சமூலம் துலாம் இரண்டை நீர்படி பதினாறில் விட்டு நாலொன்ருகக் காய்ச்சியதில் நல்லெண்ணெய் படி இரண்டு கொம்புத்தேன் படி இரண்டு,ஆவின்பால் படி இரண்டு இவற்றைச்சேர்த்து பனங்கருப்புக்கட்டி பலம் ஐந்து, திரிகடுகும், திரிபலையும் வகைக்கு விராகன் எடை ஆறு, ஏலம், கிராம்பு, தக்கோலம், லவங்கப்பட்டை, சாதிக்காய், சாதிபத்திரி இவை வகைக்கு பலம் இரண்டு; இவற்றை அரைத்துக் கலக்கிக் காய்ச்சிப் பதமாய் வடித்துக்கொள்ளவும். இதில் உச்சிக்கரண்டி அளவு காலை மாலை இரண்டு வேளையும் கொள்ள, இருமல், இரைப்பு, மேல்மூச்சு இவை நீங்கும்.

## அக்கினிகுமார செந்தூரம்.

வெண்கலம், செம்பு, பித்தளை, தரா, உருக்கு, இரும்பு இவைகளின் அரப்பொடியும், காந்தமும் வகைக்குப்பலம் ஒன்று, இரசம் விராகன் எடை பத்து, வெங்காரம், பச்சைநாவி, காரீயம், இவை வகைக்கு விராகன் எடை ஒன்று; இவைகளைச் சட்டியிலிட்டு உருக்கி, குமரிச்சாறுவிட்டு வறுக்க மாவாகும். இதனையும் முன் மருந்தோடு சேர்த்து குமரிச்சாறு வார்த்து மூன்றுநாள் நன்றாய் வெண்ணெய்போல் அரைத்து, புதுச்சட்டியில் வைத்து, சித்திர மூலமரைத்து அடைதட்டி கீழும்மேலும் வைத்து குமரிச்சார் விட்டு மேலே சட்டிமூடி, ஏழுசீலைமண்செய்து, அடுப்பில் வைத்து மூன்றுநாள் எரித்து, நான்காம்நாள் தீயாறவிட்டிறக்கி, எடுக்கச் செந்தூரமாம். வெள்ளுள்ளித் தைலத்தில் ஒரு பணவெடை மூன்றுநாள் உட்கொள்ள, சன்னி, சிலேட்டுமநோய்களும், திரிகடுகுச் சூரணத்தில் வெருகடியில் தேன் சேர்த்து பத்து நாள் இரண்டு பணவெடை உட்கொள்ள தலைவலி, மூர்ச்சை, முயல்கண்டன், சன்னிமூர்ச்சை, வாதமூர்ச்சை, பித்த மூர்ச்சை, சிலேட்டுமமூர்ச்சை, வயிற்றுவலி, கண்வாதம், மருவாதம் முதலிய வாதரோகங்கள் தீரும்.

## தாளகப் பற்பம்.

தாளகத்தைச் சுண்ணும்பில் வைத்துக் கழுதைமூத்திரம் விட்டுத் தாளித்துச் சுத்திசெய்த மருதம்பட்டையை யரைத்துக் கவசம்செய்து சிறுபுடமிடப் பற்பமாகும்.

## இரசப் பற்பம்.

சுத்திசெய்த இரசத்தை ஒட்டம்புலக்கிழங்குச் சாற்றிலரைத்துருண்டை செய்து, மிளகு, தக்காளி இவற்றின் இலையை யரைத்துக் கவசம்செய்து புடமிடப் பற்பமாகும்.

## வெள்ளைப்பாடாணப் பற்பம்.

சுத்திசெய்த வெள்ளைப்பாஷாணக் கட்டிக்குப் பூவரசம் பூவரைத்துக் கவசம்செய்து புடமிடப் பற்பமாகும்.

## வாந்திபேதி, சன்னிதோடங்களுக்கு.

சூடம், கோரோசனை, குங்குமப்பூ, பச்சைக்கற்பூரம், அதிமதுரம், சாதிலிங்கம், இரசச்செந்தூரம், கோஷ்டம், உருத்திராக்ஷம், இவை வகைக்கு விராகன் எடை ஒன்றுகூட்டி தேனி

லும், எலுமிச்சம்பழச்சாற்றிலும் மெழுகுபோலரைத்து நாவில் தளமிட வாந்திபேதி, சன்னி சுரம் இவைகள் போம்.

### இரசப் பற்பம்.

இரசம் விராகன் எடை 25 கொண்டு ஒரு சட்டியில் உப்பும், செங்கற்பொடியும் வகைக்குப் படி ஒன்ருகக்கொண்டு உள்ளங் கைபோல் குழிசெய்து அதில் பத்து வெற்றிலையைப் பரப்பி அதன்மேல், இரசத்தை 25 விரான் எடைவைத்து, முள்முருக் கித்தழையும், வாழைப்பழத்தோலுமிடித்து ஒரு சட்டியிற்றடவி, மேல்மூடி, ஐந்து சீலமண்செய்து நான்கு சாமம் அடுப்பில் வைத் தெரிக்க மேற்சட்டியில் பதங்கிக்கிடக்கும். அதனை வழித் தெடுத்து, மீண்டும் இவ்வாருகவே நான்குமுறை செய்தெடுத்த தில் ஒரு அரிசி எடை கருப்பட்டியில் கொடுக்கவும். மேக நோய்கள்போம். வாய்ப்புண்ணுனல் தேங்காய்ப் பாலும், முலைப் பாலும் கலந்து கொப்பளிக்கவும்.

### மூலக்கடுப்புக்கு.

புளியாரணைக்கிழங்கை மோரிலும், காடியிலும் ஊறப்போட்டு வேகவைத்துலர்த்தி நெய்யில் வறுத்து, சாதிக்காய், கிராம்பும் கூட்டிச் சூரணித்துத் தேனில் உட்கொள்ள சீழ்க்கிராணி, இரத் தக்கிராணி, மூலக்கடுப்பு இவைகள் தீரும்.

### கிராணிக்கு.

இரசம் விராகன் எடை ஒன்று, கெந்தகம் விராகன் எடை இரண்டு இவைகளை இரும்புக் கரண்டியில் விட்டு மெதுவாய் வறுத்து எடுத்துப் பொடித்து ஒரு பணவெடை வெண்ணெய், தயிர், சர்க்கரை இவைகளில் சேர்த்துக்கொடுக்க கிராணி தீரும்.

### பழங்காடி செய்பாகம்.

சிறுபிள்ளைகள் (மதலை) அமுரி படி 12, கழுதை மூத்திரம், (தேசிநீர்) படி 6, இவைகளைக்கலந்து ஆறுநாளூறவைத்து ஏழாம்நாளில் ஒரு புதுப்பாண்டத்தைக் கழுவி அதில் கருங் குருவை நெல்லரிசி படி ஒன்று, காட்டுக்கம்பரிசி படி இரண்டு, செந்நாயுருவியரிசி படிமுக்கால், இவற்றைச்சேர்த்துச் சோறு சமைத்து ஆறியபின், ஊசிநீர் வள்ளம் ஒன்று, வலையமுரி படி ஒன்று, தேசிநீர் படி மூன்று, பூநீறுபடி ஒன்று, வல்லாரை,

பொன்னுங்கண்ணி, தூதுவளை இவைகளின் சாறு வகைக்குப் படி இரண்டு; இவற்றை ஒரு புதுப்பானையிலிட்டு எட்டுநாளூற வைத்து ஒன்பதாம் நாள் பாண்டத்தைமாற்றி, வெய்யிலில் வைத்துத் தண்ணீர் கெடாமல் 48-நாள் சூரியபுடம்வைத்து, வடிகட்டி குப்பியில் வைத்துக்கொண்டு உஷ்ணரோகங்களுக்கு வல்லாரைச் சூரணத்திலும், சூலைபதினெட்டுக்கும் சங்கங்குப்பியிலும் உட்கொள்ள நோய்போம். சிறுகுமிழ், தளிஞ்சி, செங்காத்திப்பூண்டு, பூவரசுமூலம் இவைகளைத் தேசிநீரிலரைத்துலர்த்திச் சூரணித்து, வெள்ளுள்ளி, பரங்கிப்பட்டை, குருமிளகு ஆகிய இவைகளைச் சூரணித்து, சர்க்கரைசேர்த்து 12நாள் மேற்படிக் காடியிற்கொடுக்க சகலமேகசூலை ரணங்களும் தீரும்.

## அமுதலேகியம்.

பால்படி எட்டை அடுப்பிலிட்டுக் காய்ச்சிச் சுண்டிவரும் போது, சீனிச்சர்க்கரை பலம் நான்கு சேர்த்து குழம்பு பதத்தில் வரும்போது வால்மிளகு பலம் ஒன்றும், கசகசா பலம் இரண்டும் கொண்டு பொன்னிறமாய வறுத்துச் சூரணித்துப்போட்டுக் கிளறி, பசுவின் நெய்படி இரண்டுவிட்டுக் கிண்டி லேகிய பதத்திலிறக்கி, ஆறவைத்துப் பாக்களவு இரண்டுவேளை 12-நாள் உட்கொள்ள 21 மேகமும் தீரும். இச்சாபத்தியம்.

## சுரத்துக்கு.

சுக்கு, சிற்றரத்தை, பேரரத்தை, சிறுதேக்கு, கொடிவேலி வேர்ப்பட்டை இவை வகைக்கு விராகன் எடை இரண்டு கொண்டு, இரண்டுபடி நீர்விட்டுக் கால்படியாகக் காய்ச்சிமூன்று நேரம் தேன் காசியெடை கலந்து கொடுக்கவும்.

## விரோசனத்துக்கு.

சுத்திசெய்த நேர்வாளம் பலம் ஒன்று, சாதிலிங்கம் விராகன் எடை ஒன்று, பூரம் விராகன் எடை ஒன்று, வெள்ளைவெங்காரம் விராகன் எடை ஒன்று, கருஞ்சீரகம், சுக்கு, மிளகு, திப்பிலி, கிராம்பு, இவை வகைக்கு விராகன் எடை இரண்டு; இவைகளைப் பொடித்துச் சலித்து அத்துடன் புழுங்கலரிசி விராகன் எடை மூன்று, அரசங்கொழுந்து விராகன் எடை பன்னிரண்டு இவைகளைத் தேன்விட்டரைத்து எல்லாவற்றையும் கூட்டி அரைத்து குன்றிமணி அளவு மாத்திரைகள் செய்து உலர்த்தி

ஒன்றிரண்டு மாத்திரை உட்கொள்ள வாதசன்னி, பித்தசன்னி, சீதசன்னி தீரும். வயிறு கழியும்.

### கிராணிக்கு.

புழுங்கலரிசி விராகன் எடை மூன்று, அரசங்கொழுந்து விராகன் எடை பன்னிரண்டு, கடுக்காய்த்தோல் விராகன் எடை மூன்று; இவைகளைக் கஷாயமிட்டு ஆறுவேளை சாப்பிடவும். இச்சாபத்தியம்.

### உஷ்ணத்துக்கு.

சுக்கு, கிராம்பு, ஏலரிசி, மிளகு, இலவங்கப்பட்டை, வால் மிளகு, கருஞ்சீரகம், சாதிக்காய் இவை வகைக்குப் பலம் இரண்டு, பரங்கிப்பட்டை பலம் மூன்று இவைகளைச் சூரணித்து, தேன், நெய்யிற் கொள்ளவும்.

### குந்திரிக்கமெழுகு.

கொம்பரக்கு, குங்கிலியம், அதிவிடயம், சாதிக்காய், அபினி, குராசாணியோமம் இவ்வாறையும் நல்லெண்ணெய் விட்ட ரைத்து உட்கொள்ள கிராணி தீரும்.

### மன்மத சிந்தாமணி லேகியம்.

மன்மத சிந்தாமணியென் மாசிலா லேகியத்தை
தன்வந்தரி யுரைத்தார் தாரணியில்—நன்மைபெறு

தூதுவளை வில்வவேர் தோன்று மறுகின்வேர்
தீதுக விலாமிச்சை சிந்தியுடன்—கோதிலா

வாய்த்த சந்தனக்கட்டை வர்க்காமம் வளைமூலி
பார்த்து வகைக்குப்பலம் பத்தாக—நேர்த்தியுடன்

கூட்டி யிடித்துக் கூறிய மிடாவதனில்
போட்டுமெட்டு வெள்ளநீர் போதவிட்டு—வாட்டமிலா

தண்ணீ ரொருவள்ளம் தயவாகவே காய்ச்சி
எண்ணிக்கை தப்பாமலே பார்த்து—நன்னயமாய்

சக்கரையைத் தானெடுத்துத் தானைம்பது பலமாய்
மிக்க கஷாயத்தில் மேவியே—அக்கரையாய்

பாகுபதமாய்க் காய்ச்கிப் பண்பாய்க் கடைச்சரக்கு
வாகு பொருந்தும் வகையைக்கேள்—நாகப்பூ

வால்மிளகு தக்கோலம் வாய்த்த திரிகடுகு
ஏலமிரு சீரகமும் மேற்கையாய்—சாலவேதான்

திரிபாலை செண்பகப்பூ சேரு மகரப்பூ
சித்தரத்தை கொத்துமல்லி (பாலும்) யதிமதுரம்—பண்பாக

நீர்முள்ளி விதைசரியாய்ச் சாதிப் பத்திரியும்
கஸ்தூரி மஞ்சள் கதித்தமுந்—திரிப்பழமும்

அஸ்தக் கிராம்பு மமுக்கிலவேர் சுத்தமுள்ள
அக்கிரா கார மதிகமுள்ள—வில்வப்பிசினு

மிக்கசடா மஞ்சியுடன் தானுமூந்து பக்குவமாய்
சன்ன லவங்முடன் தக்கவிரு—பத்திரியும்

வண்ணமணி கோஷ்டமுடன் வருத்தமதாய் சொன்னவகை
ஓமம் குராசானி யோமம்—கசகசா

நீதமுள்ள வாலுமுழவை நின்ருசி போதயானைத்
திப்பிலியோ டேவகைக்குச் சேர்ந்த—வராகனிடை

ஒப்புற வாய்ப்பத்து உகந்துகொண்டு செப்பும்
இளவறுப் பதமாய் வறுத் தேற்ற—பொடியாக்கி

விளைவுடைய கஞ்சா மேவியேதான் பழகியதோர்
பானையதில் பத்துப் பலம்போட்டு—நிறுத்தி

ஞானமயைய்யாறு நாழிகையும் ஊறவிட்டுத் தான்பிசைந்து
நிழலுலர்த்தியான பின்பு

துய்யவஸ்திரகாய மிட்டுத் தீர்ந்த பின்பு
தேனும் நெய்விட்டு சிந்தாமல்—மத்தித்து

தானு மபினியைத் தானெடுத்து ஆனதொரு
ஆலக் கரண்டி யதில்போட்டு—நெய்யூற்றி

காய்ச்சி மேலாகவே பாத்திரத்தில் வடித்து
சாலக் கலயத்தில் வைத்துப்—பாங்குடனே

கண்டுமொரு கழற்சிக்காயளவு
கொண்டால் வியாதி தொலைவதுகேள்—பண்டான

காமாலை கைகாலசரிக்கை
சோமாலை காசிதுடிரோகம்—ஆமாலை

கண்ணிருப்பத் தோர்மேகங் காதடைப்பு மட்டகுன்மம்
குட்டம் பதினெட்டு கொல்லு—மதிசாரம்

கிட்டியதோர் மூலக் கிராணியுமே யொட்டி
யுடல்மெலிவு தாதுநஷ்டம் ஓக்காளம்—வாய்நாற்றம்

குடலெரிவு அஸ்திச்சுரக் கோழையுடன் நெடிய
மலர்க்கண் ணெரிவு வாந்தி—பசியெட்டு

தொலையாத மாரடைப்புத் தொண்டைவலி யெல்லாந்தீரும்
தேகம் வலுக்கும் தீர்க்காயுசு—உண்டாகும்

போக மடிக்கடித்தான் பொங்குமே நேருடனே
மெய்கண்ட நல்ல புவியில்—மனிதருக்கு
மெய்கண்ட தென்றே விரும்பு.

### விஷபாண்டுவுக்கு.

அரப்பொடி விராகன் எடை பத்தைப் புளியம் பிரண்டை மடல்சாறு விட்டு நான்கு சாமமரைத்துக் காசுபோல் வில்லைகள் செய்துலர்த்தி ஓட்டிலிட்டுச் சீலமண்செய்து குழிப்புடமிடவும். மறுபடியும் மேற்கண்டபடி யொருபுடமிட செந்தூரமாகும். இரண்டுபணவெடை கரிப்பான் கஷாயத்தில் கொடுக்கத் தீரும்.

### தாளகப் பற்பம்.

தாளகம் விராகன் எடை மூன்று, சீனிக்காரம் விராகன்எடை இரண்டு, இவைகளைப் பொடித்துக் காகிதத்தில்வைத்து மடக்கி நூலிற்கட்டி ஓட்டிலிட்டுச் சீலமண்செய்து ஐந்து எருவிற்புட மிடப்பற்பமாகும். பணவெடை தேனிற் கொள்ளவும்.

தாளகம் விராகன்எடை இரண்டு, பவளம் விராகன்எடை இரண்டு, வேலிப்பருத்திச்சாறு விட்டு சாமமரைத்துலர்த்தி ஓட்டிலிட்டுச் சீலமண்செய்து, பத்து எருவிற் புடமிடப் பற்ப மாகும். தேனில் மூன்றுவேளைகள் உட்கொள்ள, சுவாசம், இரைப்பு இவைகள் தீரும். மேற் சொன்ன அயச்செந்தூரம் பணவெடை சேர்த்துக் கொள்ளவும்.

### மாலைக்கண்ணிற்கு.

பாலைக்கொழுந்தை முறித்து அதில்வரும் பாலை விளக் கெண்ணெயுடன் கலந்து மத்தித்துக் கண்ணில் போடத் தீரும். பசும்பால் சேர்த்துக் கொள்ளலாம்.

### கெற்பத்திலுள்ளபிள்ளைவிழ.

ஊனுன் தழையை அரைத்து வெந்நீரில் குடித்தால் வயிற் றில் மரித்த பிண்டம் விழும்.

### தண்டு (நாது) வர்த்தனைக்கு.

கற்கண்டு, பேரீச்சம்பழம், தேன் இவைகளைக் கலந்து சாப் பிட்டு வர தண்டு வர்த்தனை யுண்டாகும்.

### இரத்தக்கடுப்புக்கு.

அத்தி, அரசு, புரசு, இவைகளின் கொழுந்து, களிப்பாக்கு, கடுக்காய், பெருங்காயம், இவைகளைச் சரியெடை வாழைக்கிழங்கு சாற்றிலரைத்துத்துட்டெடை கொடுக்கத்தீரும். தாளகப் பற் பம் பணவெடை சேர்த்துக் கொடுக்கவும்.

### மேகக்கருப்புக்கு.

வேர்முட்டி, சுக்கு, திப்பிலி, சிறுதேக்கு இவைகளைக் கஷாய மிட்டுக் கொடுக்கவும். தேங்காய்ப்பாலிற் சிறுகுரிஞ்சான் வேரையரைத்து மூன்று நாள் உட்கொள்ள மேகக்கருப்புகள் எல்லாம் வாங்கிப்போம்.

### ஏப்பம் இருமல் இவைகளுக்கு.

வேலிப்பருத்தி, வெள்ளறுகு, இஞ்சி, மிளகு, இந்நான்கை யும் கஷாய மிட்டுக் கொள்ளத்தீரும்.

### நீர்க் கட்டுக்கு.

சிறுபூளைவேர், சிறுநெருஞ்சிவேர், சிறுகீரைவேர், இவை களைக் கஷாயமிட்டதில் வெங்காரம் பொரித்துப் போட்டு உட் கொள்ளத் தீரும்.

### நீரிழிவுக்கு.

கொன்றைப்பட்டை, ஆலந்தளிர், கல்மதம் இவைகளைக் கூட்டிக் கஷாயமிட்டுக் குடிக்கத் தீரும்.

### விந்துவலுக்க.

குன்றிமணியிலைச்சாறு பணவெடை வீதம் நித்தியம் சாப் பிட்டுவர விந்து வலுக்கும்.

### உதிர வாயுவுக்கு.

ஈருள்ளிச்சாறு, குங்கிலியம், காட்டெருமைச்சாணி, கருஞ் சீரகம் இவைகளையரைத்துக் குடிக்கத் தீரும்.

### பாரிச வாயுவுக்கு.

சுக்கு, காவளைவேர், இவைகளைக் கஷாயமிட்டுக் கொடுக்க, பக்க வாயுவலி, வாயு வீக்கம் இவைகள் பறந்துபோம்.

### அண்டவாதத்துக்கு.

கழற்சிப்பருப்பு விராகன் எடை நான்கு, சுக்கு, திப்பிலி, வெள்ளைவெங்காயம் இவை வகைக்கு விராகன் எடை இரண்டு இவைகளைச் சூரணித்து கோழிமுட்டை மூன்றினது வெள்ளைக்

கருவிற் போட்டு இரண்டு துட்டெடை வேலிப்பருத்திச்சாறு விட்டு நன்றாய்க் கிண்டிப் பொரித்துக் கொடுக்கவும். இந்தப்படி மூன்றுநாள் கொடுத்து, ஏழுநாள் பத்திய மிருக்கவும். உப்பு புளி நீக்கிக் கடும்பத்தியமாக இருக்கவும். கைகண்டது.

## ஜாலவித்தை

பூநாகத்தையும், தவளையையும், பெருங்காயத்தையும், ஒரு தேங்காயைக்கண் திறந்து அதிலடைத்து ஏழுநாள் புதைத்து எடுத்தரைத்துச் சீலையில் தடவி யுலர்த்தித்திரியாக்கி விளக்கேற்ற வீடெல்லாம் பாம்பாய் இருக்கும். முன்சொன்ன குருவை ஒரு பணவெடை சேர்க்கவும்.

## பவளப்பற்பம்.

பவளத்தையுடைத்து எலுமிச்சம்பழச் சாற்றில் ஒரு நாள் ஊறவைத்து இண்டங்கொழுந்தை யரைத்துப் பவளத்துடன் பிசைந்து ஓட்டி லடைபோலத் தட்டி மேலோடு மூடி நான்கு சீலை மண்செய்து கசபுடமிடச்சுண்ணமாகும். கொம்புத் தேனிற் பணவெடை உட்கொள்ள இருமல், சுரம், தீரும். பசுவின் வெண்ணெயிற் கொள்ள வெள்ளை, வெட்டை, பிரமியம் தீரும்.

## மண்டையிடிக்கு.

பசுவின் நெய்யையும் குப்பைமேனிச்சாறையும் சரிகலந்து பதமாய்க்காய்ச்சி முழுகவும். பச்சையரைப்புத் தேய்த்துக் சுழுவவும்.

## சுகசன்னிக்கு.

சாதிக்காய், சமுத்திராப்பழம், முருங்கப்பட்டை, புங்கம் பட்டை, திப்பிலி, இவைகளைச் சுட்டது ஒரு பகுதி; பச்சையாக எடுத்தது ஒருபகுதி; பெருங்காயத்தை வெள்ளை வெங்காயத்தூள் வைத்துச் சுட்டது ஒருபகுதி; இவைகளைச் சேர்த்து ஆணுக்கு பெண்ணமுரியிலும், பெண்ணுக்கு ஆணமுரியிலும் கொடுக்கவும்.

## இருமலுக்கு.

வெடியுப்பும், கழற்சிப்பருப்பும் வகைக்குப்படி முக்காலாக வெடுத்து நன்றாயரைத்து நீரிற் பிசறி வில்லைகள் செய்துலர்த்தி புடமிடப்பற்பமாகும். பசுவின் நெய்யிற் கொள்ளவும்.

## குளிர் சுரத்துக்கு.

எட்டிவேர்ப்பட்டைச் சூரணம் பலம் ஒன்று, மிளகு பலம் இரண்டு; இவைகளை எலுமிச்சம் பழச்சாற்றிலரைத்துக் குளிகை செய்து கொடுக்கவும்.

## பித்தச்சுரத்துக்கு.

நல்ல துளசி, நாய்த் துளசி, மிளகு, சுக்கு, ஓமம் இவைகளைக் கஷாயமிட்டுக் கொடுக்கவும்.

## பெரும்பாட்டுக்கு.

புளியந்தழைச்சாறு, நல்லெண்ணெய், பழச்சாறு இவை வகைக்குப்படி முக்கலாகவெடுத்துக் கலந்ததில் ஓமம்பொடித்துப் போட்டு மூன்று நேரம் கொடுக்கவும். பத்தியம் வெந்நீரும் சோறும். சிற்றுமுட்டிக் கொழுந்தும் காராட்டுப் பாலும் ஒரு நேரமும், கழற்சிச்சாறும், நல்லெண்ணெயும் கோழிக்கால்விரலும் ஒரு நேரமும் கொடுக்கவும். பத்தியம் கம்பஞ்சோறு; இரத்தம் சீழ் தீரும்.

## வெள்ளைக்கு.

ஆத்திக் கொழுந்து - நற்சிரகம், சீனிச்சர்க்கரை, பச்சை வாழைப்பழம் இவைகளையரைத்துச் சாப்பிடவும். இச்சாபத்தியம்.

## காமாலைக்கு.

கழுதை வெட்டையிற் பசுவின்பால் விட்டுத் துவைத்துப் பிழிந்து கொடுக்கவும்,

## மஞ்சள் காமாலைக்கு.

புத்துமேல் வீழியிலை ஒருபிடியுடன் கருங்குருவையரிசி யாவது கம்பரிசியாவது சேர்த்து இடித்து ரொட்டிசுட்டுத் தின்னவும். கழியும்; பசுவின் நெய்யும் வெல்லமும் தின்னவும்.

## முக சன்னி வகைகளுக்கு.

ஆடா தோடை, ஆடுதின்னாப்பாளை, பொன்னாங்கண்ணி, கையாந்தகரை, பொடுதலை, சௌரிக்கொடி, ஆதொண்டை, நெல்லிக்காய், அல்லித்தண்டு இவைகளின் சாறு வகைக்குப் படி இரண்டு, உதரவேங்கைப்பட்டைச்சாறு படி முக்கால், நல்லெண்ணெய் படி ஒன்று, பசுவின் நெய் படி இரண்டு. பால் படி

ஒன்று; இவற்றைச்சேர்த்து அதில் மிளகுபலம் இரண்டு, பூண்டு பலம் இரண்டு இவைகளை அரைத்துக் கலக்கித் தீபம் போலெரித்து, மெழுகு பதத்தில் வடித்து, தானிய புடம் வைத்துத் தலை முழுகிவர, மண்டையிடி, கபாலசூலை, முகசன்னி, ஒரு தலைவலி, வெள்ளெழுத்து, பீனிசம், கண்சிவப்பு முதலியவை தீரும். அந்நாளில் அத்தயிலத்தில் ஒரு காசியெடை சாப்பிட்டு தலை முழுகுவது நன்று. அன்றைக்குப் புளி, புகையிலை, போகம் ஆகாது.

## பெரும்பாட்டுக்கு.

கறிவேப்பிலையையும், பச்சரிசியையும், பசுவின் தயிர் விட்டரைத்து பசுந்தயிரில் கலக்கிக் கொள்ளத் தீரும்.

இருபத்தொருதரம் வேகவைத்து நீர் வடித்துலர்த்தி சுத்தி செய்திடித்த சிந்தில் சூரணம், கையாந்தகரைச் சூரணம், சுத்தி செய்த பூநாகச் சூரணம் ஆக இவைகளைச் சரிசேர்த்துக் கூட்டிக் கலந்ததில் உடல் வன்மை அறிந்து சாப்பிடவும்.

## பேதிக் குளிகை.

சுத்தி செய்த பூரம் பலம் ஒன்று, அரிசி விராகன் எடை ஒன்று இவற்றை முலைப்பால் விட்டரைத்துக் குன்றிமணி அளவு குளிகை செய்து ஒன்று சாப்பிட கழிச்சலுண்டாகும்.

## மஞ்சள் நோய்.

மஞ்சள், மிளகு, வசம்பு, வேளைவேர், ஆட்டாம்புழுக்கை, கருங்கொள், வெள்ளை வெங்காயம், இவைகளைப் பசுவின் வெண்ணெயிலிட்டுக் காய்ச்சி வடித்துக் கொள்ள அதித்தூல நோய் போம்.

## அசீரணபேதி பொருமலுக்கு.

வேளைவேர், குப்பைமேனிவேர், வெள்ளைச்சாரணை வேர், இவைகளை நறுக்கிச் சிவக்க வறுத்து, ஓமம் பலம் ஒன்று சேர்த்துக் கஷாயமிட்டுக் கொடுக்க அக்கினி மந்தம் முதலியவை தீரும்.

## சன்னி வலிப்புக்கு.

மாவிலிங்கஞ்சாறு, முருங்கப்பட்டைச் சாறு, நில ஆவரைச் சாறு, திருகுகள்ளிப்பால் இவை வகைக்குப்படி முக்கால், நல்லெண்ணெய், வேப்பெண்ணெய் வகைக்குப் படி அரை, திப்பிலி,

பலம் முக்கால், இந்துப்பு விராகன் ஒன்று, பாஷாணக்கட்டி விராகன் எடை இரண்டு, வசம்பு பலம் கால், பெருங்காயம் விராகன் எடை இரண்டு; இவைகளையரைத்து மேற்படி எண்ணெய், சாறு முதலியவைகளில் கலந்து கூட்டிக் காய்ச்சி மெழுகுபதத்திலிறக்கி வடித்து, கரண்டியளவு உட்கொள்ள சன்னி, 13 வலிப்பு இவைகள் தீரும். கைகண்டது.

## வாய்வுக்கு.

விளக்கெண்ணெய், இளநீர், பால் இவை வகைக்குப் படி எட்டு, சாதிக்காய், சாதிப்பத்திரி, ஏலம், கிராம்பு குங்குமப்பூ, கோரோசனை, கல்மதம், காந்தம், வெந்தயம், சீரகம், கருஞ்சீரகம் இவை வகைக்குப் பலமிரண்டை பால் விட்டு அரைத்து மேற்படி எண்ணெய் முதலியவற்றோடு கூட்டிக் காய்ச்சி வடித்ததில் ஒரு கரண்டி அளவு கொடுத்துவர, வாயுகோளாறுகள் எல்லாம் போகும்.

## மருந்தீடு வாந்தியாக.

அழிஞ்சிவேரை வெள்ளாட்டுப் பாலிலரைத்துக் கலக்கி முருங்கைச்சாறும் அப்பக்கோவைச்சாறும் வகைக்கு மூன்று துளி விட்டுக் கொடுக்கவும்.

## குழந்தை ஏங்கல் இருமல் இளைப்பு இவைகளுக்கு.

சுக்கு, மிளகு, ஈரவெங்காயம், கழற்சியிலை இவைகளை யரைத்து ஆணுக்குப் பெண்ணைமுரியிலும், பெண்ணுக்கு ஆண முரியிலும் ஒருவேளை கொடுக்கத் தீரும்.

## புண்களுக்கு.

வெற்றிலை, வேப்பிலை, ஈரவெங்காயம், எலுமிச்சம்பழம், இவைகளின் சாறும் நல்லெண்ணெயும் வகைக்குப்படி காலைக் காய்ச்சி மெழுகுபதத்தில் வடித்து சீலையிலூட்டிச் சகல புண் களின் பேரிலும் போட ஆறும்.

## குன்மத்துக்கு.

முற்றிய காட்டுமுருங்கைவேர்ப் பட்டையைக் கழுவி சிறு துண்டுகளாக நறுக்கினது படி நாலைச் சட்டியிலிட்டு, எலுமிச்சம் பழச்சாறு படி இரண்டு சேர்த்து, வெள்ளைவெங்காயப் பருப்பு பலம் ஐந்தில், பாதியை நறுக்கியும் பாதியை யரைத்தும் போட

வும். கடுகு பலம் ஐந்து, மஞ்சள், பெருங்காயம், இவை வகைக்குப் பலம் அரை, சாதிக்காய் விராகன் எடை இரண்டு, இவைகளைச் சூரணித்துச் சேர்த்து, கறியுப்பு படிமுக்கால் பொடித்துக் கூட்டிக் கலந்து, எல்லாவற்றையும் நன்ருகப் பிசைந்து இருபது நாள் சூரியபுடம் வைத்து எடுத்துக்கொள்ளவும். 6 அல்லது 8 கிற்று வீதம் இரண்டு நேரமுங்கொள்ள, வாதகுன்மம், பித்தகுன்மம், வலிகுன்மம், சத்திகுன்மம் முதலியவை தீரும். இது இரகசியமாய்ச் செய்து கொள்ளவேண்டியது.

வெள்ளறுகு, சித்திரமூலம், நிலக்குமிழ், சங்கங்குப்பி, மலைவேம்பு, செக்குப்பூண்டு, பூவரசம்பட்டை, ஆகிய இவைகளின் இலை, பழுப்பு, காய், பூ வகைக்குப் பலம் இரண்டு கொண்டு இடித்து ஒரு பெரிய பானையிற் போட்டு, கழுதைலத்தி வெள்ளம் ஒன்று சேர்த்து சிறுபையன்களுடைய அமுரி வள்ளம் இரண்டு விட்டு மூன்றுநாளூறவைத்துப் பின்பு பிசைந்து வடிகட்டி எலுமிச்சம்பழச்சாறு படி இரண்டு விட்டு, அத்துடன் எண்ணெய் படி இரண்டு சேர்த்தது, சுக்கு, மிளகு, வெள்ளைப்பூண்டு, பரங்கிப் பட்டை, இவை வகைக்கு விராகன் எடை மூன்றைச் சூரணித்துப் போட்டுக் காய்ச்சி மெழுகுபதத்தில் வடித்து, அதில் கால் சிரங்கை கொடுத்து, பத்தியமாய் இருக்கக் குன்ம நோய்கள் தீரும்.

### விரைவாதம் அல்லது பீசங்களில் ஒன்றை அல்லது இரண்டையும் மேலே இழுத்துக் கொள்ளும் நோய்களுக்கு.

சீந்திற்கொடியிலையையும், ஆனைத்தெள்ளின் பருப்பையும், வெவ்வேருகவரைத்துச் சமனுகக் கலந்து கோழிமுட்டைக்கருவிற் பிசைந்து வறுத்து ஆறுநாள் இரண்டுவேளை சாப்பிடத் தீரும். கைகண்டது.

பீசங்கள் வீங்கி அல்லது உப்புக்கொள்வதற்குப் பதனிட்ட புகையிலையை, பீசங்களின்மேல் இராத்திரி காலங்களில் சுற்றிக் கட்டிவைக்கவும்.

### நாய்களுக்குச் சொறிபிடித்திருப்பதற்கு.

ஆடுதீண்டாப் பாளைச்சாறையும், தேங்காயெண்ணெயையும் கலந்து பூசி, மாலையில் இலுப்பைப் பிண்ணுக்குத் தேய்த்துக் கழுவவும்,

